# சொன்னால் விரோதம் ஆயினும் சொல்லுகிறேன்



தமிழாகரர்-தமிழ்க்கலைச்செல்வர்
பேராசிரியர் முனைவர்
சாமி. தியாகராசன்

**வெளியீடு**

தெய்வச் சேக்கிழார் மன்றம். கும்பகோணம் - 612 001
வேத விஞ்ஞான ஆராய்ச்சி மையம், சென்னை - 600 092

# நூல் விவரம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | - | சொன்னால் விரோதம் - ஆயினும் சொல்லுகிறேன் |
| நூலின் களம் | - | சைவ சமய இலக்கிய ஆய்வு |
| நூலாசிரியர் | - | சாமி. தியாகராசன் |
| மொழி | - | தமிழ் |
| உரிமை | - | ஆசிரியருக்கு |
| நூல் வெளியீடு | - | தெய்வச் சேக்கிழார் மன்றம்<br>கும்பகோணம் - 612001<br>வேத விஞ்ஞான ஆராய்ச்சி மையம்<br>சென்னை - 600092 |
| முதல் பதிப்பு | - | மார்ச்சு 2008 |
| இரண்டாம் பதிப்பு | - | ஜூன் 2014 |
| படிகள் | - | 1000. |
| நூலின் அளவு | - | டெம்மி 1/8 |
| வெளியிடுபவர் | - | ந. பன்னீர்செல்வம், செயலாளர்<br>தெய்வச் சேக்கிழார் மன்றம்<br>கும்பகோணம் - 612001 |
| நூல் கிடைக்குமிடம் | - | 8/68 2ஆம் தெரு<br>ஏ.வி.எம். அவென்யூ<br>விருகம்பாக்கம்<br>சென்னை - 600 092<br>தொலைபேசி: 044 - 42016242, 9551870296, 8925368229 |
| விலை | - | 130 /- |
| அச்சாக்கம் | - | சாரதா இன்ஃபோடெக், சென்னை |

# காணிக்கை



உள்ளம் உரை செயல் இம்மூன்றிலும்
கள்ளம் இல்லாமல் கலந்து பழகிய
அமரர்
அய்யா G. சம்பத் மூப்பனார் B.A;B.L;
அவர்கட்கு
இந்த இரண்டாம் பதிப்பை
காணிக்கையாக்குகிறேன்

-சாமி தியாகராாசன்

உ

சிவ சிவ

"கயிலைமாமுனிவர்"
திருவளர்திரு காசிவாசி
முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்,
அதிபர், காசித்திருமடம், திருப்பனந்தாள் 612 504,
திருவிடை மருதூர் வட்டம், தஞ்சை மாவட்டம்.

## வாழ்த்துரை

நாள்: 02.03.2008

*தூக்கும் பனுவல் துறைதோய்ந்த*
*கல்வியும் சொற்சுவைதோய்*
*வாக்கும் பெருகப் பணித்தருள்*
*வாய்! வட நூற்கடலும்*
*தேக்கும் செழுந்தமிழ்ச் செல்வமும்*
*தொண்டர்செந் நாவினின்று*
*காக்கும் கருணைக் கடலே!*
*சகல கலாவல்லியே!*

**ஸ்ரீ குமரகுருபரர்.**

நம் அன்பிற்குரிய பேராசிரியர் சாமி. தியாகராாசன் எழுதிய ஆய்வு நூலைப் படிக்கும் இனிய வாய்ப்புக் கிட்டியது. பேராசிரியர் சாமி. தியாசராாசன் நுண்மாண் நுழைபுலமிக்க அறிஞர். நல்ல சிந்தனையாளர். நூல் முழுவதும் ஆசிரியரின் சிந்தனைத் திறன் காணக்கிடக்கிறது. நீண்ட நாட்களுக்குப் பின்பு இப்படி ஓர் ஆய்வு நூலைப் படித்த மன நிறைவு நமக்குக் கிடைத்தது.

நூலின் பெயர் "சொன்னால் விரோதம் ஆயினும் சொல்லுகிறேன்" என்பது. 'தாம் சொல்வது சிலருக்கு விரோதமாகப்படும், ஆனால் அது

பலருக்குப் பயன்படும்' என்கின்ற நோக்கில் நம்மாழ்வார் வாக்கினை அப்படியே அடியொற்றிப் பேராசிரியர் இந்தத் தலைப்பினைத் தேர்ந்தெடுத்தார் போலும்.

பகை நொதுமல் நட்பு என்னும் மூன்று திறத்தார் மாட்டும் ஒப்பநின்று ஒழுகல் என நடுவுநிலைமை அதிகாரத்திற்குப் பரிமேலழகர் தோற்றுவாய் செய்கிறார். நமது பேராசிரியரும் இம் மூன்று திறத்தார் பக்கமும் ஒப்ப நின்று ஆய்வினை மேற்கொண்டு செல்வது நமது நெஞ்சுக்கு உவகையூட்டுகிறது.

பேராசிரியர் சாமி. தியாராசனின் ஆழ்ந்தகன்ற ஆய்வினை நாம் அனுபவித்த சில இடங்கள்: தொன்மனுநூல் தொடை மனு நூல் சிறந்த ஆய்வு. உண்மையும் இதுதான். பாரதி வாக்கினை மேற்கோள்காட்டிச் சேக்கிழர் வாக்கினைக்கொண்டே நிறுவுவது சிந்திக்க வேண்டிய ஒன்றாகும்.

வடமொழி தென்மொழி இவ்விரண்டும் ஈசுனுடையனவே. இவ்விரண்டிற்கும் அவனே தந்தை. அவனே மூலவன். எனினும் வடமொழியின் ஆற்றல் எந்த இடத்தில் தொய்கிறது? தமிழ்மொழி ஆற்றல் எந்த இடத்தில் மேலெழுகிறது? என்பதனைத் திருமறைக்காட்டு நிகழ்ச்சி கொண்டு விளக்கியிருக்கும் பாங்கு படித்து சிந்திக்கத்தக்கது.

எது குற்றம்? என்னும் தலைப்பில் சாமி. தியாகராசன் ஆய்வு செய்து சொல்லியுள்ள முடிவு நீண்ட நாட்களாக முற்றுப் பெறாமலிருந்த நமது சிந்தனைக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டது. இதற்காக அவரை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

அருச்சனை, பூசனை இவ்விரண்டும் ஒன்றே என்பதனையும், அருச்சனையில் பாடப்படுவது திருப்பாடல் என்பதனையும் சேக்கிழார் வாக்குகளைக் கொண்டே விளக்கியுள்ள அருமை நினைத்துப் பார்க்க வேண்டிய இடம்.

ஆலமர் செல்வன், அந்தணர், மறை, வேதம் இவை பற்றிய மரபுகளை

விளக்கும் பகுதிகள் படித்துப் பார்க்க வேண்டியவை. நூலாசிரியருக்கு மிகுந்த இடர்தரும் இடங்கள் இவை. எனினும் காய்தல் உவத்தல் இன்றி ஆய்வு செய்துள்ளார் என்பதுடன் தம் மனத்தில் உண்மை என்று தோன்றியதை உரைத்துவிட வேண்டும் என்ற எண்ணமும் அவரிடத்தில் படிந்துள்ளதை இப்பகுதி கொண்டு அறியலாம்.

சுந்தரரை, "தமிழில் பாடுக!", என்றான் இறைவன் எனச் சொல்வதிலேயே தங்கள் தமிழ்ப் பற்றைக் காட்டிக் காலத்தைக் கழித்துக்கொண்டு, பிறரைக் காய்ந்து கொண்டிருப்பவர்கள் மத்தியில், அதற்கான காரணத்தை அலசி ஆராய்ந்து விளக்கியிருப்பது மனங்கொளத் தக்கதாகும். வரவேற்க வேண்டியதாகும். மன்று எனவரும் சேக்கிழார் வாக்கிற்குப் பேராசிரியர் தரும் விளக்கம் அருமையிலும் அருமை.

அயல்வழக்கு, கண்ணப்பர் வரலாறு ஆகியன நல்லவண்ணம் ஆய்வு செய்யப்பெற்றுள்ளன. நடுவுநிலை ஆய்வு என்பார்களே அதற்கு இவ்விரண்டும் சான்றாகின்றன.

காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்க ஓதுவார்தமை நன்னெறிக்கு உய்க்கும் திருமுறைகளை, நெறியல்லா நெறிக்குப் பயன்படுத்தலாகாது. தேவாரம் திருவாசகம் ஆகிய திருமுறைகளை இடம் அறிந்து ஓதவேண்டும், ஏற்றபெற்றி அறிந்து பயன்படுத்த வேண்டும் என நாம் சொல்லிவரும் கருத்துகட்குப் பேராசிரியர் விளக்கங்கள் பெரிதும் அரண் செய்கின்றன. அவ்வாறு முறை அறிந்து அவற்றைப் பயன்படுத்தாது போனால் அவை அங்கணத்துள் உக்க அமிழ்தாகிப் போகும்.

திருக்கோயிலைச் சார்ந்து நடத்தப்பெறும் வேள்விச் சடங்கில் அவி சொரியும் காலத்தில் தேவாரத்தைப் பயன்படுத்துவது சரியன்று என்பதற்கு ஆளுடைய பிள்ளையின் வரலாற்றைச் சான்றாக்கியிருப்பது அனைவரும் அறிய வேண்டிய ஒன்றாகும். திருவாசகத்திற்குப் பொருள் ஈசனே என்பதைச் சிவப்பிரகாசர் தெளிவுபடுத்திய பின்பும் அதில் தடுமாற்றமேன்?

இம்மை மறுமைப் பயன் கருதிச் செய்யப்படும் வேள்வியில், பிறவிக் கட்டறுத்து வீடுபெற வேண்டி நிற்கும் சிவபுராணத்தை அவிசொரிதலுக்குப் பயன்படுத்துவது முற்றிலும் முரண்பாடா னது என்பதை எடுத்து விளக்கி இருக்கும் பான்மை பலகாலும் எண்ணிப்பார்ப்பதுடன் ஏற்க வேண்டியதுமாகும்.

பேராசிரியர். சாமி. தியாராகராசனிடம் நாம் சிலபோது உரையாடியிருக்கின்றோம். ஆனால் திருமுறைகளில் குறிப்பாகப் பெரிய புராணத்தில் இவ்வளவு ஆழமானவர் என்பதை இந்த நூலின் வழியேதான் அறியும் வாய்ப்புக் கிடைத்தது. இறையருள் வாய்க்கப் பெற்றோரே இத்தகைய சிந்தனையையும் போக்கையும் கொள்வர் என்னும் நமது எண்ணம் இந்த நூலின்வழி உறுதிப்படுகின்றது.

அடைந்துபோன குன்றக்குடி குருமகா சந்நிதானம் அவர்கள், சரியான நபரைத்தான் பணிகொண்டிருக்கிறார்கள். அவர்களிடத்து நூலாசிரியருக்கு இருக்கும் பக்தி அளவிடற்கு அரியது. அவர்கள் திருவடிகளுக்கு இந்த நூலைப் பேராசியர் காணிக்கையாக்கியிருப்பது முற்றிலும் சரியே!

பழமையில் காலூன்றிப் புதுமையைப் போற்றிக்கொண்டு சைவ சமய நுட்பத்தினையும், திருமுறைகளின் நெறியையும், பெரியபுராணத்தின் சீர்மையையும், தமிழ்மொழி கடவுள் மொழியாக நிற்கும் திறத்தினையும் இந்த நூல். சமயப் பற்றும், மொழிப் பற்றும், பரமனிடத்துப் பக்தியும் உடையார் யாவரும் பயின்று உணர்வதற்குரியதாகும். உணர்ந்தார் பிறருக்கு உணர்த்தலும், பயில நூலினைக் கொடுத்துதவலும் 'திருநெறிய தமிழ்'ப் பணியாகும்.

சமுதாய மாற்றம் என்பது நடந்துகொண்டே இருக்கின்றது; நமது சமயங்களிலும் காலத்துக்கு ஏற்பச் சில மாற்றங்கள் நிகழ்வதுண்டு. அது இயற்கை. அதேபோது நமது சமயங்களில் சில அடிப்படைகள் மாறாமலிருக்கும். இந்த அடிப்படைகளையே நாம் மரபு என்கிறோம். அந்த மரபினைப் போற்றுவதும், காப்பதுவும், மாற்றாமல் இருப்பதுவுமே ஆதீனங்களின் தலையாய கடமை. இந்த அடிப்படையினைப்

போற்றும், சைவ ஆதீனத் திருமடங்களைச் சிலர் தவறாகத் தொடர்ந்து விமர்சித்து வருவதையே தொழிலாகக் கொண்டிருப்பதும், அதற்குச் சிலர் ஆதரவு தருவதும் வருத்தத்தைத் தருகிறது. ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு!

நூற்றுக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பு நம் முன்னோர்களால் உருவாக்கப்பெற்ற அறங்களையும் மரபுகளையும் காப்பதுதான் ஆதீனத் தலைவர்களின் மடாதிபதிகளின் கடமையாகும். புதிய தத்துவங்களையோ, புதிய கிரியைகளையோ உருவாக்க அவர்களால் இயலாது. அவ்வாறு உருவாக்கினால் அது முன்னோர்கள் எண்ணிச் செய்தவைகளுக்கு முரணானவையாகும்.

ஓர் ஆசாரியன் வழி உபதேசிக்கப்பட்டு அது வழிவழி வந்தால்தான் மந்திரங்களாகும். அப்போதுதான் அவற்றிற்கு வலிமை உண்டு. நூல்கள் வழி படித்துள்ளேன் என்று ஒருவர் மந்திரம் சொல்லப் புறப்பட்டால், அது மந்திரமாக இருக்க முடியாது. இது பற்றிச் சைவ ஆதீனங்களும் திருமடங்களும் (காத்தாள்பவர்) தனிக்கவனம் செலுத்த வேண்டும் என்று வேண்டி, கேட்டுக்கொள்கின்றோம். குருமகா சந்நிதானங்கள் இந்த நூல் முழுவதையும் திருக்கண் சாத்தியருள வேண்டும் எனப் பிரார்த்திக்கின்றோம்.

பேராசிரியர் முனைவர் சாமி. தியாகராசன் அவர்களின் இந்த நூல் ஒரு நல்ல நூல். நூல் முழுவதும் நூலாசிரியரின் சிந்தனை விளங்கித் தோன்றுவது அறிந்து, இன்புறத்தக்கது. இந்த நூலை அனைவரும் படித்துப் பயன்பெற வேண்டும் என்பது நம் விருப்பம். பேராசிரியர் மேலும் பல நூல்களை எழுதவேண்டும்.

நமது அன்புக்குரிய பேராசிரியர் சாமி. தியாகராசன் அவர்கள் நால்வர் தமிழே போல் வாழ்க! வளர்க! எனச் செந்தில்பதிவாழ் கந்தவேள் திருவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்!

சிவ சிவ.

## Sonnal Virotam Aayinum Sollukiren: A Review.

-Dr. T.N. Ramachandran,
5-D. Selvam Nagar,
Thanjavur – 613 007.

The Tirutthondar Puranam of St. Sekkizhaar is Applied Saiva Siddhanta. The Periya Puranam is indeed the mail of adamant unto the Tirumurais.

The 26th Guru Maha Sannithanam of Dharmapuram Aadheenam is my Ammai – Appar. His Holiness has blessed the Dharmapuram Aadheenam's publication of the first Kaandam of the Twelfth Tirumurai. Every Saivite should study in depth the benedictory message of His Holiness to gain a true understanding of Saivism.

Thus spake His Holiness.

"The Vedas, Saiva Agamas, Puranas, Ithihasas, Tirumurais and Siddhanta Sastras are the basic statutory opuses of our Saivism. The conduct of the pursuers of the Saivite way should be in conformity with the prescriptions laid down in these works."

"The Constitution of India is the basic statute of India that is Bharat. All the States in India must revere, foster and adhere to this statute."

"Similarly, the Constitution of Savisim evolved out of the Vedas etc., is inviolable. If every one begins to follow his fancy and devises his own path, the discipline of the nation will be upset. Saivites must follow their scriptures and never deviate from them. This is vital, very vital."

Deeming the Tail scriptures to be superior to the Vedas is improper. Tevaaram is the quintessence of the Vedas.

Besides Saivism, the Vedas have dealt with other faiths too. However the true essence of the Vedas is Saivism only. The late lamented scholar Arunai Vadivel Mudaliyar had clearly stated in his commentary on the Sixth Tirumurai that the sextad of faiths, namely Saivism, Saktam, Vaishnavam, Gaanaapatyam. Kaumaaram and Sauram are in consonance with the contents of the Vedas.

The aspirant has to climb, rung by rung, the spiritual ladder reach Saivism. Having reached it, he must live in conformity with it.

Essays indited by Tiru Sami. Thiyagarajan bear the title: 'Sonnal Virotham Aayinum Sollukiren.' These articles bear testimony to the author's progress in his investigations. May our Lord-God Siva bless him with long life, highlighted by his spiritual progress from strength to strength. May he be blessed with the valiancy to express appositely his findings. This is my prayer.

There is no scope for any language problem in Saivism. Both Sanskrit and Tamil are the gifts of siva to Saivites. Sanskrit is Deva Bhasha and Tamil is Mahadeva Bhasha. it is thus they are to be cultivated by the Saivities.

Sanskrit was evolved out of Veda-mozhi. And Sanskrit is not the mother-tongue of any one. Spoken Sanskrit is Prakrutam. It is different from Sanskrit. Sen-Tamizh is not the same as Kodum – Tamizh. Yet difference, in this context, is not contradicition.

St. Tirumular speaks of siva as having mercifully taught Uma both Sanskrit and Tamil. He has also affirmed that both

Tamil and Sanskrit reveal the way to gain Siva. In this context Sanskrit refers to Veda – Agama mozhi.

St. Appar hailed Siva thus: "Behold Him, the Aryan and the Tamizhan" The 26th Guru Maha Sannithanam of Dharmapuram Adineenam was pleased to bring to our notice the fact that it was St.Appar who first used the word Tamizhan, in Tamil literature.

St. Tirumular sees no difference between the Vedas and the Saivagamas. He says it is so, even so, according to the enlightened (sages).

St. Tirugnanasambandhar made his avatar for the flourishing of the Vedic way and the Agamic path. The Tevaram Trio, in toto, followed the Vedas and the Agamas.

Why are the Vedas called 'General'? The Vedas, be it known, speak of five other faiths besides Saivism. The Saiva Agamas speak wholly, solely and exclusively of Saivism. So, they are regarded as "Special".

Distanced from Saivism, the fords of other faiths are fraught with danger. Unaware of this, Marullneekkiyar became entangled and suffered. He rued much his ignoration of his elder sister who fostered Saivism and stood as his guardian. The reconverted Vaakisar (St. Appar) confessed his deviation. Indeed he had administered a warning to us who are prone to err.

Today some saivites damage Saivism because they stray away from Saivism. Unable to stomach this. Sami. Thiagarajan is out to administer correctives to the erring ones.

Sivagnanayogi is hailed as the divine heirloom of the Tiruvaavaduthurai Aadheenam. The great yogi was blessed with

the authority to explicate the subtleties of Saivism. He is the official interpreter of Saiva Siddhanta. Of him, Sami. Thiagarajan says:

"He fenced the field of Saivam and protected its crop. It is improper to criticize him on the basis of his knowledge of Sanskrit and of the clan in which he was born."

Sami. Thiyagarajan could have pummeled the critics. From this he desisted. He merely referred to their error and left is at that. This bespeaks his magnanimity and compels our admiration for him.

I should say that I am not able to subscribe to a few views of our author. I need not refer to them. We will meet each other, discuss and arrive at the truth.

May the lofty endeavours of Sami. Thiagarajan who has provided us with admirable and manifold food for thought, fructify and benefit Saivism.

**Place**: Thanjavur, **-T.N. Ramachandran.**
**Date**: 03.03.2008

# கருத்துரை

**பேராசிரியர் முனைவர் தி. அரங்கநாதன்,**
தமிழ்த்துறைத் தலைவர்,
அரசு கலைக் கல்லூரி (குன்னாட்சி)
கும்பகோணம் 612 001.

எனது மதிப்பிற்கும் மரியாதைக்குமுரிய என் ஆசிரியப் பெருமான் பேராசிரியர் சாமி. தியாகராாசன் அவர்களின் வீட்டிற்குச் சென்றபோது "சொன்னால் விரோதம் ஆயினும் சொல்லுகிறேன்" என்னும் தலைப்பிலான இந்த நூலின் சில பகுதிகளைப் படிக்கும் வாய்ப்புக் கிடைத்தது. அப்போது ஆசிரியர் என்னிடம் இந்த நூலுக்கு ஓர் ஆய்வுக் கட்டுரை எழுதுங்கள் என்றார்கள். உங்கள் நூலுக்கு நான் ஆய்வு எழுதுவதா! தயவு செய்து சோதிக்க வேண்டாம் என்றேன். சரி! அப்படியாயின் கருத்துரை என்ற வகையில் எழுதலாமே என்றார்கள். மிக்க மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டேன். ஆதலால் இது கருத்துரையே அன்றி ஆய்வுரையன்று என்பதை முதலில் சொல்லிக்கொள்கின்றேன்.

*"உரைக்கப் படும்பொருள் உள்ளத் தமைத்து*
*விரையான் வெகுளான் விரும்பி முகமலர்ந்து*
*கொள்வோன் கொள்வகை அறிந்தவன் உளங்கொளக்*
*கோட்டமில் மனத்தில்நூல் கொடுத்தல்" (வேண்டும்)*

என்று பாடம் சொல்லும் ஆசிரியனுக்கு இருக்க வேண்டிய தகுதிகளை நன்னூல் வரையறை செய்யும். என் ஆசிரியரிடத்து சட்டென்று வரும் கோபத்தைத் தவிர மற்ற இலக்கணங்கள் அத்தனையும் நாங்கள் பார்த்தோம்; படித்தோம்; அனுபவித்தோம்.

நூலைப் படிக்கத் தொடங்குபவர்கள் குழப்பத்திற்கு ஆட்படாமல்

இருக்க நூலின் முகப்பில் பேராசிரியர் ம.ரா.போ. அவர்களின் கட்டுரைகளைச் சேர்த்திருப்பது நல்ல செயல். இந்தக் கட்டுரைகளைப் படித்து வந்தால்தான் நூலாசிரியர் கேள்விகள் யாரை நோக்கி இருக்கின்றன, எதனை நோக்கி உள்ளன என்பது புரியும்.

நூலைப் படிப்போர் தெளிவுபெறுதலைக் கருதி கூறப்பெறும் செய்திகளை நன்குணரும் வண்ணம் பல உள் தலைப்புகளைப் பொருத்தமாக அமைத்துள்ள முறை பாராட்டுக்குரியது. உள் தலைப்புகள் நூல் நுவலும் செய்திகளைப் புரிந்துகொள்ள மிகுந்த உதவியாக உள்ளன.

நூலின் தலைப்பினை விளக்குவது போல நூலின் தொடக்கமே சூடு பிடிக்கின்றது. தமிழ் வாழ்வை ஒரு குறிப்பிட்ட சாதியினர் கெடுத்துவிட்டனர் என்பது தக்க ஆதாரங்களுடன், அதாவது, "ஆட்சியில் ஆவணத்தில் அன்றி மற்று அயலார் தங்கள் காட்சியில்" கொண்டுவந்து நிரூபிக்கப்பட வேண்டுமேயொழிய பொதுவாகச் சொல்லிச் செல்வது எவ்வாறாயினும் ஏற்புடையதாகாது. "சமஸ்கிருத மேலாண்மையை வேறு வழியில்லாமல் ஏற்றுக்கொண்டு" எனப் பேராசிரியர் ம.ரா.போ எழுதியிருக்கும் கருத்தினை ஆசிரியர் மிக அழகாக ஆய்வு செய்துள்ள திறம் அனுபவித்துப் படிக்க வேண்டிய இடம்.

மனுநூல் என்பது பழந்தமிழர் மரபாகக் கையாண்டு வந்த நீதிநூல் என்றும், காலம்தொறும் திருத்தப்பெற்றும் சேர்க்கப்பெற்றும் வருணத்திற்கேற்ப விதிகளைக் கூறும் ஆரிய மனுநூல் அன்று என்றும் சேக்கிழார் வாக்கினைக் கொண்டே நிறுவுவது சிந்திக்கத்தக்கதொரு கருத்தாகும்.

திருமறைக்காட்டுநிகழ்ச்சியாக ஆசிரியர் சொல்லியுள்ள செய்திகள் சிறந்தவை. தமிழ் வடமொழி இவ்விரண்டும் ஈசனுக்கு உரியதாயினும் ஈசனே கொஞ்சம் வேறுபாடு காட்டி சற்றே தள்ளியிரும் பிள்ளாய் என வடமொழியைச் சொல்ல வேண்டிய நிலை ஏன் ஏற்பட்டது என்பதை அற்புதமாக விளக்கியுள்ளார். எது குற்றம்? அருமையான விளக்கம்.

மறுக்க முடியாது ஏற்க வேண்டுமே தவிர வேறு சிந்திக்க முடியாதது.

மரபு மீறல் சரியான இடம். திருஞானசம்பந்தரின் "மண்ணில் நல்லவண்ணம்" எனத் தொடங்கும் பாடல் திருமணச் சடங்கிற்குப் பொருந்தாது என்னும் பான்மையை விரிவாகவே விளக்கியுள்ளார் ஆசிரியர். இந்தப் பாடலுக்கு இதுதான் பொருள் என்பதனை நானும் இப்போதுதான் உணர்ந்தேன். தமிழ் வழி வேறு, தமிழ்த் திருமுறை வழி வேறு என்பது நன்கு விளக்கப்பட்டுள்ளது. சம்பந்தமுடையோர் இந்தப் பகுதியைப் படித்துத் தெளிய வேண்டும்.

பார்ப்பதற்கும் படிப்பதற்கும் பெரியபுராணம் எளிதாக இருப்பது போலத் தோன்றும். ஆனால் அது ஆழமான கருத்துக்களைத் தன்னிடத்தே பொதிந்து வைத்திருப்பதாகும். பேராசிரியர் சாமி. தியாகராசன் அவர்களிடம் நேரில் பாடம் கேட்டவன் என்ற தகுதியில், அவர் இலக்கியங்களில் எந்த அளவுக்கு ஆழங்காற்பட்டவர் என்பதை அறிந்தவன் என்ற வகையில் பெரியபுராணத்திற்கு அவர் சொல்லும் பொருள் சரியானதே என்பதை என்னால் உறுதியாகக் கூற முடியும்.

பகுதி 2இல் வேள்வி பற்றியும், வேள்வி செய்தற்கான கருவி நூலாகிய வேதம் பற்றியும் விரிவாகப் பேசப்படுகின்றது. இன்றும் தமிழகத்தில் வேள்விச் சார்பில்லா வழிபாடு நடைபெறுவதை யாவரும் அறிவர். புதிது புதிதாகத் தோன்றும் குடியிருப்புகளில் கட்டப்படுகின்ற கோயில்களே குடமுழுக்குகளை அதிகம் கொள்கின்றன. சிலருக்கு இது நல்ல வருவாய்க்கான வழியாக அமைந்துள்ளது.

நான் வைணவ இலக்கியத்தில் ஆய்வு மேற்கொண்டு முனைவர் பட்டம் பெற்றவன் என்ற வகையில் வைணவ சம்பிரதாயங்கள், திருக்கோயில்கள் பற்றிய செய்திகளை ஓரளவு நன்கு அறிந்தவன். சைவத் திருமுறைகள், சைவ சமய நெறிகள் ஆகியவற்றையும் ஓரளவு நன்கு அறிந்தவன். தேவார திருவாசகங்களிலும், பெரியபுராணத்திலும், வைணவர்கள் பாராட்டும் திருவாய்மொழி மற்றும் பிரபந்தங்களிலும் வேதம், நான்மறை, மறை என்ற சொற்கள் கையாளப்படும் இடங்களில் எல்லாம் அவை வடமொழி வேதங்களையே சுட்டி நிற்கின்றன

என்பது தெளிவு. இது பற்றித் தனி நூலே எழுதலாம். மற்றபடி தமிழ் நான்மறை இருந்தது என்பதும், அதனைக் கடல் கொண்டுபோயிற்று என்பதும், வடவர்கள் நம்மை வஞ்சித்துவிட்டார்கள் என்பதும் நூறு ஆண்டுகளுக்கு முன்பு தேவையான கருத்தாக இருந்திருக்கலாம்: ஆனால் இப்போது அது எடுபடாது.

அயல் வழக்கு என்பது ஆரியர் அதாவது பார்ப்பனர் வழக்காகாது, அது புத்தர் சமணர் வழக்குகளே என்பதை நூலாசிரியர் "புத்தரோடு சமணர் சொற்கள் புறனுரை என்றிருக்கும் பத்தர்வந்து" என்னும் சம்பந்தர் தேவாரம் கொண்டு நிறுவுவது போற்ற வேண்டிய ஒன்றாகும். புறனுரை அயல் வழக்கு மிகவும் பொருத்தம். வேதியர் குடியில் பிறந்த சம்பந்தர் தாம் பிறந்த வேள்வியர் குலத்திற்கு உரிய வேதத்தை "அயல் வழக்கு" எனக் கொள்வார் என்பதும், அதனையே சேக்கிழர் வழிமொழிந்துள்ளார் என்பதும் எந்த விதத்திலும் சரியாக இருக்காது.

நான்மறை தமிழ் நான்மறை என்ற தலைப்புக்களில் நமது நால்வரின் அருளிப்பாடுகளே (மூவரின் தேவாரம், மாணிக்கவாசகரின் திருவாசகம்) தமிழ் நான்மறை எனக் கொள்வதற்கான காரணம் மிகச் சரியாகச் சொல்லப்பட்டு உள்ளது. படித்து அனுபவிக்க வேண்டிய பகுதி.

கயிலைமலைக்கு மற்றொரு பெயர் மகேந்திரம் என்பதும், அந்தக் கயிலையிலிருந்தே ஈசன் வேதங்களையும், ஆகமங்களையும் அருளிச் செய்தான் என்பதும், அதன் பொருட்டு அவன் அமர்ந்த இடம், கொண்ட கோலம் ஆகியவை பற்றியும், வேதம் வடமொழியில் ஆக்கப்பட்டதற்கான காரணம் பற்றியும் ஆசிரியர் வகுத்துக் காட்டும் செய்திகள் நல்ல சான்றுகளுடன் சொல்லப்பட்டுள்ளன. காய்தல் உவத்தல் இன்றி இந்தப் பகுதிகளை ஊன்றிப் படித்து ஏற்பன கொள்வது நல்லது.

பகுதி 3இன் தொடக்கம் கண்ணப்பர் செய்தி தொடர்பானது. நம் நாட்டில் பல மேடைப் பேச்சாளர்கள், சில எழுத்தாளர்கள் சிவகோசரியாருக்கு ஈசனிடத்துப் பக்தி இல்லை என்பது போலவும்,

அவரைப் பெருமான் ஏற்றுக்கொள்ளாதது போலவும் பேசியும் எழுதியும் வருவது எனது நெஞ்சிலும் காயத்தை உண்டுபண்ணியிருந்தது. அந்தக் காயத்திற்கு அரு மருந்தாக இருக்கிறது என் ஆசிரியரின் விளக்கம். சிவகோசரியாரின் மனக்கலக்கம் பூசையைப் பற்றியதே அன்றி மொழியைப் பற்றியது அன்று என்பதைக் கண்ணப்பர் கதையைத் தெரிந்து வைத்திருப்பவர்கள் அனைவரும் அறிவர்.

ஆனால் பேராசிரியர் ம.ரா.போ. அவர்கள் சிவகோசரியாரின் கலக்கம் மொழியைப் பற்றியது என்பது போலப் பொருள் கொண்டு, வடமொழி தோற்றது தென்மொழி வென்றது எனச் சொல்வது எந்த அடிப்படையில் என்பது புரியவில்லை. மாறுகொளக் கூறல், மயங்கவைத்தல், வெற்றெனத் தொடுத்தல், மற்றொன்று விரித்தல் ஆகியவையே பேராசிரியர் மா.ரா.போ அவர்களின் கட்டுரைகளைப் பற்றி நிற்கின்றன என்பதனை என் ஆசிரியர் விளக்கிக்காட்டிச் செல்வது மனங்கொளத்தக்கது.

சுந்தரர் வரலாறு மிகமிக அருமையாக ஆய்வு செய்யப்பட்டுள்ளது. நான் அறிந்த வரையில், படித்த வகையில் இதுபோன்ற ஆய்வு வந்ததில்லை. சுந்தரரின் முன் பிறப்புத் தொடர்பே அவரைத் தமிழில் பாடுக என ஈசன் இட்ட கட்டளைக்குக் காரணம் எனக் கண்டு காட்டியிருப்பது நெஞ்சத்தில் நிறுத்திக்கொள்ள வேண்டிய ஒன்றாகும்.

திருக்குறளுக்குப் பரிமேலழகர் பொழிப்புரை சொல்லி அதன் பின்பு விசேட உரை சொல்லுவார். இந்த விசேட உரைதான் அவர் உரைப்போக்கின் உச்சி என்பர். அதுபோல இந்த நூலைப் பொறுத்தமட்டில் "தமிழ் என்பதன் பொருள்" என்னும் தலைப்பில் தொடங்கி (பக்கம் 189) நூல் முடியும் வரை உள்ள பகுதியினை நூலின் உச்சி எனச் சொல்லலாம்.

"தமிழ்" என்ற சொல்லுக்குப் பலவகையாகப் பொருள் கொள்ளினும் திருமுறைகளைப் பொறுத்தமட்டில் "தமிழ்" என்னும் சொல் பக்திப் பாடல்களையே குறித்து நிற்கின்றது என்பதனை ஞானசம்பந்தர்

வாக்குக் கொண்டு நிறுவுவதும்; திருக்கோயிலைச் சார்ந்து செய்யப்படும் வேள்வியில் தமிழ்மொழிப் பிரச்சினையில்லை, தமிழ் மொழி மந்திரப் பிரச்சினையில்லை, அது பற்றி யாருக்கும் அட்டி இல்லை என்பதைத் தெளிவுபடக் கூறுவதும், திருமுறைகளை அவி சொரியும்போது பயன்படுத்துவது சமய நோக்கில் ஏற்புடையது அன்று என்பதனைத் தக்க ஏதுக்களுடன் எடுத்துக் காட்டியிருப்பதும்; இம்மை மறுமை இன்பம் கருதிச் செய்யப்படும் வேள்வியில் பிறவிப்பிணி அறுக்க வேண்டி நிற்கும் சிவபுராணம் பயன் தராது என்பதனைக் காட்டியிருக்கும் நேர்த்தியும்; மாற்றுக் கருத்துடையோரும் மனம்கொளத் தக்கவைகளாகும்.

நூலின் நிறைவுப் பகுதியை அடுத்துப் பணிவான வேண்டுதல் என்ற தலைப்பில் காணப்படும் செய்திகளைக் கட்டாயம் படிக்க வேண்டும். பதினான்கு ஆண்டுகளில் தமக்கு ஏற்பட்ட கருத்து மாற்றத்திற்குப் பெரியோர்கள் வழிகாட்டியாக இருந்தனர் என்பதை மிக நாகரிகமாக என் ஆசிரியப் பெருமான் குறிப்பிட்டிருப்பது அறிந்து இன்புறத்தக்கது.

திருநெறிய தமிழின் மாண்பினையும், தேவாரம் திருவாசகம் பெரியபுராணம் முதலான திருமுறைகளில் காணப்படும் நுட்பத்தினையும் இந்த நூல் நன்கு விளக்குகின்றது. இதற்குக் கருத்துரை எழுத வாய்ப்புக் கொடுத்த என் ஆசிரியர் முனைவர் சாமி. தியாகராசன் அவர்களுக்கு எனது வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக்கொள்கின்றேன். தமிழ் மொழிப் பற்றும் சமய நம்பிக்கையும் கொண்டு அனைவரும் படித்து உணர வேண்டியது இந்த நூல். பேராசிரியர் முனைவர் சாமி. தியாகராசன் அவர்கள் இதுபோன்ற பல நூல்கள் எழுதி நமக்கு உதவிட மெய்நலம் பெற்று வாழ வேண்டும் என அம்மன்றுளே ஆடுவானின் மலர் கழல் சிந்தித்து வணங்கி வேண்டுகின்றேன்.

குடந்தை
04.03.2008

தி. அரங்கநாதன்.

# நடந்ததும் நன்றியும்

நான் கும்பகோணத்தைச் சேர்ந்தவனாகினும், கடந்த மூன்றாண்டுகளாகச் சென்னையிலே தங்கியிருக்க வேண்டிய சூழ்நிலை. அவ்வப்பொழுது குடந்தைக்கு வந்து செல்வேன். அவ்வாறு ஒருமுறை வந்தபோது கும்பகோணம் தெய்வச் சேக்கிழார் மன்றச் செயலாளர் திரு. ந. பன்னீர்செல்வம் அவர்களும், தலைவர் திரு. க. இராமையா அவர்களும் என்னிடம் இரண்டு கடிதங்களைத் தந்தனர். அவற்றில் ஒன்று பேராசிரியர் முனைவர் தமிழண்ணல் அவர்கள் தருமபுர ஆதீனத் தலைவருக்கு எழுதிய கடிதத்தின் நகல்.

கடிதத்தைப் படித்ததும் எனது உள்ளத்தில் மிகுந்த வருத்தமும் சிறிது கோபமும் உண்டாயின. தமிழண்ணலா இப்படி எழுதியுள்ளார்? என்ற வியப்பும் என்னுள் எழுந்தது. பேராசிரியரிடத்து எனக்கு நேர்முகப் பழக்கமில்லையாயினும், அவருடன் பழகியவர்கள், அவரிடம் படித்தவர்கள் வழியாகவும், அவர் எழுதியுள்ள நூல்கள் வழியாகவும் அவரை அறிந்தவன், மதிப்பவன். நான் அறிந்த வரையில் அவர் 'வாணிகப் புலவர் அல்லர்' என்பது உண்மை. தமிழைப் பண்டமாற்றாகவும், வியாபாரப் பொருளாகவும் கருதுபவர் அல்லர். ஆதீனத் தலைவரின் சென்னைப் பேச்சின் கருத்துத் திரிக்கப்பட்டு, திசைதோறும் பரவியதை அடுத்து (இது பற்றிப் பின்னரே நான் நன்கு விசாரித்து அறிந்தேன்) பேராசிரியர் செவிக்கும் அவ்வாறே அது சென்று சேர்ந்தது போலும்.

ஒன்றைப் பற்றி ஒருவர் கருத்துக் கூறக்கூடாது என்று சொல்வதற்கு யாருக்கும் உரிமையில்லை. கூறுபவர் கருத்துச் சரியன்று எனக் கருதினால், அதனைத் தக்க சான்றுகளுடன் மறுக்க வேண்டுமே தவிர, அவரை நேரிடையாகவும், மறைமுகமாகவும், கூட்டம் சேர்த்தும், தகாத சொற்கள் கொண்டு பேசுவதும், எழுதுவதும் கூடாது. இந்த ஒழுக்க நெறியினை நன்கறிந்த பேராசிரியர், தமது கடிதத்தில் ஆதீனத் தலைவரைத் தனிப்பட்ட முறையில் கடுமையான சொல்லால் குறிப்பிட்டிருந்ததும்; பெரியபுராணத்தில் திருஞானசம்பந்தர்

வரலாற்றைக்கூறிவரும்சேக்கிழார்வாக்கின்இரண்டுதொடர்களுக்கு மிகவும் பிழையான பொருள் சொல்லியிருந்ததும் அவருக்குக் கடிதம் எழுத வேண்டும் என்ற உணர்வை என்னுள் தூண்டின.

பேராசிரியர் தருமபுர ஆதீனகர்த்தரை எந்தக் கடுமையான வார்த்தையால் குறிப்பிட்டிருந்தாரோ, அதே வார்த்தையை அவருக்கு நானும் பயன்படுத்திப் பெரிய புராணத் தொடர்களுக்கு நீங்கள் எழுதியுள்ள பொருள் தவறானது என்பதையும் சுட்டிக்காட்டிக் கடிதம் எழுதினேன். மேலும் இரண்டு கடிதங்கள் எழுதினேன். இக்கடிதங்களை எழுதும்போது நான் மிகுந்த துன்பச் சூழலில் இருந்தேன். மூன்றாவது கடிதம் எழுதிய பதினோராாவது நாளில் யாராலும் எதனாலும் எப்படியும் ஈடு செய்ய முடியாததும்; நீரினில் மூழ்கி நினைப்பு ஒழிய முடியாததுமாகிய பேரிழப்பிற்கு உள்ளானேன்.

நவம்பர் மாதம் சென்னையிலிருந்து வந்திருந்த நான், கும்பகோணம், தெய்வச் சேக்கிழார் மன்றப் புரவலர் திரு. எஸ்.எம். சுவாமிநாதன் அவர்கள் கடைக்குச் சென்று உட்கார்ந்தேன். அங்கே மேசை மீது 2007 நவம்பர் திங்களுக்கான பேரூர் ஆதீன 'சிவசாந்தலிங்கர்' இதழ் கிடந்தது. ஈசன் செயலோ என்னவோ நான் அறியேன். அந்த இதழை எடுத்துப் புரட்டிப் பார்க்க நேரிட்டது. அதில் கோயம்புத்தூர் பேராசிரியர் முனைவர் ம.ரா.போ. குருசாமி அவர்கள், "சொந்த மொழியும் வந்த மொழியும்" என்ற தலைப்பில் எழுதியிருந்த கட்டுரை கண்ணில்பட்டது. (1968இல் நான் கோவை அரசு கல்லூரியில் சிறிதுகாலம் பணியாற்றினேன். அப்போது ஓரிருமுறை ம.ரா.போ அவர்களைப் பார்த்தது நினைவிற்கு வந்தது. இப்போது அவர்களைப் பார்த்தால் எனக்கு அடையாளம் தெரியாது.) பேராசிரியரின் கட்டுரையைக் கடையில் ஒருதடவையும், வீட்டில் பலதடவையும் படித்தேன். யாரையோ மனமகிழச் செய்யவும், எதனையோ எதிர்பார்த்தும் அக்கட்டுரை எழுதப்பட்டுள்ளதாக எனக்குத் தோன்றியது. போலிக் கருத்துக்களே அடங்கிய இந்தக் கட்டுரைக்கு மறுப்பு எழுத வேண்டும் என்ற எண்ணத்தில் சென்னை சென்றேன்.

"சொன்னால் விரோதம் ஆயினும் சொல்லுகிறேன்" என்ற தலைப்பில், 'வீதிவிடங்கன்' என்ற பெயரில் ம.ரா.போ. அவர்களின் கருத்துக்களை ஆய்வு செய்தும், மறுத்தும் மூன்று கட்டுரைகள் (கால இடைவெளிவிட்டு) எழுதி, "சிவசாந்தலிங்கர்" இதழின் பதிப்பாசிரியர் 'இளைய அடிகளார்' என அழைக்கப்பெறும் தவத்திரு. மருதாசல அடிகளார் அவர்களின் சமூகத்திற்கு அனுப்பி, அவர்கள் இதழில் வெளியிட வேண்டிக்கொண்டேன். ஏனோ அவர்கள் எனது கட்டுரைகளை வெளியிடவில்லை; வெளியிடாதது பற்றித் தெரிவிக்கவும் இல்லை; திருப்பி அனுப்பவுமில்லை.

பேராசிரியர் தமிழண்ணல் அவர்களுக்கு நான் எழுதிய கடிதங்கள் பற்றியும். பேராசிரியர் ம.ரா.போ. அவர்களின் கட்டுரைக்கு நான் எழுதிய மறுப்புக் கட்டுரைகளைச் "சிவசாந்தலிங்கர்" வெளியிடாதது பற்றியும், சேக்கிழார் மன்றச் செயலாளரும் தலைவரும் அறிவர். இவ்விருவரில் செயலாளர், திருப்பனந்தாள் காசித் திருமடத்திற்கு வேண்டப்பட்டவர். அவர் எனது செயல்பாடுகளைக் காசித் திருமடத்து அதிபரிடம் சொல்லியிருப்பார் போலும். இந்த நிலையில் நான் குடந்தைக்கு வந்தேன்.

மன்றச்செயலாளர்ஒருநாள்என்னிடம்'யஜமான்'உங்களைப்பார்க்க வேண்டும் எனக் கூறியது என்றார். காசித் திருமடத்துத் தலைவரை நான் நன்கறிவேன். 'குருபூஜை'யன்றும், 'கலைமகள் விழா'வன்றும் நான் குடந்தையில் இருந்தால், தவறாமல் திருப்பனந்தாள் சென்று அவர்களை வழிபட்டு வருவது வழக்கம்.

ஒருநாள் கடிதங்களையும், கட்டுரைகளையும் எடுத்துக் கொண்டு கும்பகோணம் தெய்வச் சேக்கிழார் மன்றப் பொறுப்பாளர்கள் நாங்கள் நால்வர் திருப்பனந்தாள் சென்றோம்.

சுவாமிகளைக் கண்டு ஆசிபெற்ற பின்னர், நான் கட்டுரைகளையம், கடிதங்களையும் அவர்களிடம் தந்தேன். அவர்கள் அவற்றை மேலோட்டமாகப் படித்துப் பார்த்துவிட்டு, 'என்ன செய்வதாக உத்தேசம்?' என்றார்கள். 'பேராசிரியர் ம.ரா.போ குருசாமி அவர்களது

கட்டுரையைத் தலைக்கீடாகக் கொண்டு, நால்வர் வாக்குகளும், சேக்கிழார் வாக்கும் நமது சமயத்தினரால் எவ்வாறெல்லாம் பழுதுபடுத்தப்படுகின்றன என்பது பற்றி எனக்குத் தெரிந்த அளவில் ஒரு நூலை எழுதலாம் என எண்ணுகிறேன். அதற்குத் தாங்கள் நூல்கள் தந்துதவ வேண்டும்' எனக் கேட்டுக்கொண்டேன்.

அதன் பின்பு, சேக்கிழார் மன்றப் புரவலர் திரு. எஸ்.எம். சுவாமிநாதன் அவர்கள் சுவாமிகளிடம், தாங்கள் தொடுத்திருக்கின்ற வழக்கை அருள்கூர்ந்து திரும்பப் பெற்றுக்கொள்ள வேண்டும் என வேண்டிக்கொள்வதற்காகவே பேராசிரியருடன் நாங்களும் வந்தோம் என்றார். ஏதோ ஒன்றைக் கேட்பதற்காகவே நீங்கள் எல்லாரும் சேர்ந்து வந்துள்ளீர்கள் என நான் ஒருவாறு ஊகித்துக்கொண்டேன். அதுபற்றிப் பரிசீலிக்கின்றேன் என்றார்கள். அதன் பின்பு நாங்கள் விடைபெற்றுக் குடந்தைக்கு வந்தோம். பின்னர் நான் சென்னைக்குச் சென்றேன். வழக்கைத் திரும்பப் பெற்றுக் கொண்டதாக யஜமான் செய்தி சொல்லியனுப்பியது என மன்றச் செயலாளர் சென்னையில் இருந்த எனக்குத் தொலைப்பேசி வழித் தகவல் தந்தார்கள்.

*"அவளா எனக்கு மகளானாள்*
*அவளுக்கு நானே மகனானேன்!"*

என்னும் இந்தத் திரைப்படப் பாடல் வரிகளுக்குக் கண்கூடான காட்சி–சாட்சி வேண்டுமாயின், அது என் மகள் தி.வானதி, எம்.ஏ., எம்.எல்., தான். ஈசன், எங்கள் பொருட்டே பிறக்கச் செய்த பிள்ளை என் மருமகன் திரு. க. முருகவேல், பி.ஏ., பி.எல்., அவர்கள். 'அன்பு நுகர்தல்' என்பார் சேக்கிழார். அதனை என் மாப்பிள்ளையிடம் அனுபவிக்கலாம். எல்லாருக்கும் இனியவர். 'நான் குடந்தைக்கு வந்து தங்கியிருந்து நூல் எழுதப் போகிறேன்' என்பதற்கு அவர்கள் முதலில் உடன்படவில்லை. பின்பு ஒருவாறு தேற்றிக்கொண்டு, எனக்கு இது ஒரு மடைமாற்றாக இருக்கும் என்பதால் ஒப்புக்கொண்டனர். குடந்தையில் வந்து தங்கினேன். இந்த நூலை எழுதி நிறைவுசெய்தேன்.

என்னிடத்துக் கொண்டிருக்கும் அன்பு ஒன்றையே முன்னிட்டு

இந்த நூலுக்கு மனமுவந்து வாழ்த்துரை வழங்கியருளியுள்ள காசித் திருமடத்து அதிபர் "கயிலைமா முனிவர்" தவத்திரு. முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின் திருவடிகளுக்கு முதற்கண் எனது நெஞ்சார்ந்த நன்றியையும், வணக்கத்தையும் பணிவுடன் உரித்தாக்கிக் கொள்கின்றேன்.

'ஒருபார்வை' என்ற வகையில் நூல் பற்றி ஆய்வு செய்து, ஆங்கிலத்தில் எழுதியுள்ள "சேக்கிழார் அடிப்பொடி" முதுமுனைவர் தி.ந.இராமச்சந்திரன் அவர்களுக்கு எனது நன்றி. வணக்கம்.

கருத்துரை என்ற வகையில் நூல் பற்றி எழுதியுள்ள கும்பகோணம், அரசு கலைக் கல்லூரித் (தன்னாட்சி) தமிழ்த் துறைத் தலைவர், பேராசிரியர் முனைவர் தி. அரங்கநாதன் அவர்களுக்கு எனது நன்றி.

இந்நூலைக் கணினியில் அச்சேற்றி, நூல் முழுமை பெறுதற்கு உதவிசெய்த முனைவர் க. அன்பழகன் அவர்களுக்கு எனது நன்றி.

இந்த நூலைக் கும்பகோணம் தெய்வச் சேக்கிழார் மன்றம் வெளியிடுகின்றது. மன்றப் பொறுப்பாளர்கள் அனைவருக்கும் எனது நன்றி. வணக்கம்.

பெரியபுராணத்தின் உயிர்ப்பு எது? தொண்டு, வெறும் தொண்டன்று அது. திருத்தொண்டு. அது நட்பில், ஆற்றல்மிக்க அன்பில் வளர்கிறது. அதனால் அன்பு உறுதிப்படுகின்றது என்பதை என்போன்றோர்க்கருளிச் செய்து; தாம் அந்நெறி நின்று வாழ்ந்துகாட்டி, எனது நெஞ்சம் இடமாகக் கொண்டு பரிபூரணமற்ற எளியேனின் ஞானாசிரியர், "அருள்நெறித் தந்தை", "தமிழ்மாமுனிவர்", தவத்திரு குன்றக்குடி குருமகா சந்நிதானம் அவர்களின் திருவடிப்போதுகளைத் தலைமேல்கொண்டு இந்த நூலை அவர்களுக்குக் காணிக்கையாக்குகின்றேன்.

சாமி. தியாகராசன்

# திறனுரை

**திரு. கே. வைத்தியநாதன்**
'தினமணி' நாளிதழ் ஆசிரியர்
17.06.2012

சில புத்தகங்களை இத்தனை நாள் படிக்காமல் விட்டோமே என்று நம்மை நாமே கடிந்து கொள்ளத் தோன்றும். அப்படி ஒரு புத்தகம் சாமி. தியாகராாசன் எழுதிய **'சொன்னால் விரோதம் ஆயினும் சொல்லுகிறேன்.'**

கருத்து வேறுபாடுகள் இருப்பதும். விவாதங்கள் நடைபெறுவதும்தான் மனிதகுல வளர்ச்சியின் ஆதாரம். மொழி வளர்ச்சிக்கும், சமயத் தத்துவ ஆராய்ச்சிக்கும் விவாதங்கள்தான் அடிப்படை, அந்த வகையில் சாமி. தியாகராாசனின் கருத்துகளை. யாரையோ வசைபாடுவதற்காக எழுதப்பட்டதாக எடுத்துக்கொள்ள வேண்டியதில்லை. சில கருத்துக்களும் விவாதங்களும். அவருக்குத் திருமுறைகளிலும் சங்க இலக்கியத்திலும் இருக்கும். ஆழங்காற்பட்ட தேர்ச்சியை வெளிப்படுத்துகின்றன.

'என்னைப் பாடிப் புகழ்வாயாக' என்று சிவபெருமான் சுந்தரமூர்த்தி நாயனாருக்குக் கட்டளையிட, 'நான் என்ன பாட. எப்படிப் பாட?' என்கிற அவரது கேள்விக்கு, ஈசன் 'நம்மைச் சொற்றமிழ் பாடுகென்றார் தூமறைபாடும் வாயார்' என்று கூறுவார் சேக்கிழார் பெருமான்.

ஆளுடையப் பிள்ளையிடமும் (திருஞானசம்பந்தர்), நாவுக்கரசரிடமும் 'தமிழில் பாடுக!' என்று கட்டளையிடாத சிவபெருமான், சுந்தரமூர்த்தி நாயனாரிடம் மட்டும் தன்னைத் தமிழில் பாடும்படி பணித்ததேன் என்கிற கேள்வி பலராலும் எழுப்பப்படுவதும், அதற்குப் பலரும் பல விளக்கங்கள் தருவதும் தொடர்கிறது. சாமி. தியாகராாசன் இந்த விவாதத்திற்கு ஒரு புதிய விளக்கம் தந்திருக்கிறார்.

அது ஏற்புடையதும்கூட.

சுந்தரமூர்த்தி நாயனார் அருளிய திருப்புன்கூர் திருப்பதிகத்தில் ஒரு நெருடலான இடமுண்டு. திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் குற்றம் செய்ததாகவும், ஆனாலும் அவர்தம் குற்றத்தைக் குணமாகக் கொண்டருளினான் இறைவன் என்றும் சுந்தரர் குறிப்பிடுவார். அது என்ன குற்றம் என்பது அதிகமாக விவாதிக்கப்படாத ஆனால், விவாதத்துக்குரிய ஒன்றாகத் தொடர்கிறது. சாமி. தியாகராசனார் இதற்கும் ஓர் அருமையான விளக்கம் தந்திருக்கிறார்.

குற்றம் காண்பதற்காக எழுதப்பட்ட புத்தகம் என்று ஒதுக்கிவிடாமல், சொன்னால் விரோதம் என்று தெரிந்தும் துணிந்து தனது கருத்தைப் பதிவு செய்திருக்கும் சாமி. தியாகராசனாரின் வாதங்களில் பல, புதிய கோணத்தில் அமைந்த ஆய்வுகள். 'சொன்னால் விரோதம் ஆயினும் சொல்லுகிறேன்' தமிழ் மாணாக்கர்கள் குறிப்பாக சைவ இலக்கிய ஆய்வாளர்கள் படித்திருக்க வேண்டிய புத்தகங்களில் ஒன்று.

# இரண்டாம் பதிப்பிற்கான எனதுரை

இந்த நூல் வெளிவந்த பின்பு நூற் செய்திகள் குறித்து வாசகர்கள் மத்தியில் வரவேற்பு எப்படியுள்ளது என்பது பற்றி அறிய ஆவல் கொண்டிருந்தேன்.

பாராட்டுக்களே அதிகமாக வந்தன. காலம் சென்ற பெரும் பேராசிரியர் முனைவர் மா.ரா.போ. குருசாமி அவர்கள் ஒரு கடிதம் எழுதியிருந்தார். அக்கடிதத்தில் 'சிவசாந்தலிங்கர்' இதழில் வெளியான எனது கட்டுரை நான் எப்பொழுதோ எழுதியது. அதனை இப்போது எடுத்துப் போட்டிருக்கிறார்கள், எனது கட்டுரையை விமர்சித்து எழுதியதின் மூலம் நீங்கள் மனமகிழ்ச்சி கொள்வீர்கள் என்றால் அது எனக்கு மகிழ்ச்சியே தவிர, வேறு சொல்வதற்கு ஒன்றுமில்லை" என எழுதியதுடன் "அக்கட்டுரையின் தொடர்ப் பகுதிகளையும் அனுப்பியுள்ளேன், படித்துப் பார்த்து, மேலும் விமர்சனம் செய்யலாம்" என ஒருவித விரக்தி மனப்பான்மையுடன் எழுதியிருந்தார்.

இந்த நிலையில் 'தெய்வ முரசு' இதழின் ஆசிரியர். திரு. சத்தியவேல் முருகன் அவர்கள் மானமேலீட்டால் அவர் இதழில் "புலவராம் பைந்தமிழுக்கு எதிராக நூல் படைப்பாராம்" என்ற தலைப்பிட்டு, எனது நூல் கருத்துகட்கு மறுப்பு என்ற வகையில் பிழைப்புக்கருதி, நூலைப் பற்றிச் சிறிதும் அறியாதார் மத்தியில் தான் பெரும் ஆற்றலுடையவர் போன்ற ஒரு தோற்றத்தை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற நோக்கில் சில எழுதினார். அதனைக் கண்ணுற்ற என் நண்பர்கள் அவர் கருத்துக்களை மறுக்க வேண்டும் என்றனர். மூவகைப் போர்களிலும் சம நிலையில் உள்ளோர் மாட்டே போர் புரிய வேண்டும் என்பது நியதி. தெய்வமுரசு ஆசிரியரின் எழுத்துக்களைப் படித்துப் பாருங்கள், அவர் எனக்குச் சமமானவர் அல்லர் என்பது உங்கட்குப் புரியும், ஆதலின் அவர் கூற்றைப் பொருட்படுத்தி நான் மறுப்பு எழுதுவது என்பது எனது நிலைக்கு ஏற்றதன்று எனச் சொல்லி வாளா இருந்துவிட்டேன்.

நான் வாளா இருந்துவிட்டாலும், நூலை வெளியிட்ட தெய்வச் சேக்கிழார் மன்றச் செயலாளர் திரு.ந. பன்னீர்செல்வம் அவர்கள் வாளா இல்லாமல், எங்கள் பேராசிரியர் எழுதியுள்ள நூலில் தமிழுக்கு எதிரான கருத்துக்கள் ஏதும் இல்லாதபோது தமிழுக்கு எதிராக நூல் படைத்துள்ளார் என நீங்கள் எழுதியுள்ளதில் நியாயமில்லை, அப்படி ஒரு கருத்தை எங்கள் பேராசிரியர் மீது நீங்கள் திணிக்க முயற்சித்தால் "பொறியாளராம் பைந்தமிழைப் பணம் பண்ணுவாராம்" என்ற தலைப்பில் நாங்கள் எழுத நேரிடும் எனக் கடிதம் எழுதியுள்ளார். இது பற்றி எனக்குத் தெரியாது. செயலாளர் எழுதிய தனிப்பட்ட கடிதத்தைத் தனது 'தெய்வமுரசு' இதழில் வெளியிட்டதுடன், கருத்துக்குக் கருத்து உரசிப் பார்ப்பதுதான் நாகரிகமே தவிர இதுபோன்ற தலைப்பைத் தருவது நாகரிகம் அன்று எனக் குறிப்பும் எழுதியுள்ளார் திரு. சத்தியவேல் முருகன்.

அதனைக் கண்ணுற்ற மன்றச் செயலாளர் திரு. பன்னீர் செல்வம் அவர்கள் 'தெய்வ முரசு' ஆசிரியருக்கு மேலும் ஒரு கடிதம் எழுதி அதனை அவரிதழில் வெளியிடவேண்டும் எனக் கேட்டிருக்கிறார். செயலாளரின் வேண்டுதல் கடிதத்தை வெளியிடாததுடன், அதனை வெளியிட இயலாது எனவும் எழுதிவிட்டார் திரு. சத்தியவேல் முருகன்.

அவர் வெளியிட இயலாது எனச் சொல்லிய மன்றச் செயலாளரின் கடிதத்தை அப்படியே தருகிறேன். படித்துப் பாருங்கள். அவர் தமிழைப் பணம் பண்ணுபவரா இல்லையா என்பது அப்போது புரியும்.

## கடிதம்

24.07.2008

ந. பன்னீர்செல்வம்
செயலாளர்
தெய்வச் சேக்கிழார் மன்றம்
110 விவேகானந்தா நகர்
கும்பகோணம் 612 001,

அன்புடைய 'தெய்வ முரசு' ஆசிரியர் அவர்களுக்கு, வணக்கம்.

நான் கண்புரை அறுவை மேற்கொண்டதால் உரிய காலத்தில் ஜூலைத் திங்கள் இதழிற்கான தொகையை அனுப்ப முடியாமல் போயிற்று. பொறுத்துக் கொள்க.

15.06.08 என நாளிட்ட எனது கடிதம் தங்களுக்குக் தனிப்பட்ட முறையில் எழுதப்பட்டதாகும். அதனைப் பலர் அறிய வெளியிட்டுள்ளீர்கள். தனிப்பட்ட கடிதம் என நான் குறிக்க வில்லை என்பதைக் காரணம் காட்டி அதனால் வெளியிட்டேன் என நீங்கள் கூறலாம். எனினும் கடிதத்தின் தன்மை அறிந்து இதழாசிரியர்கள் இது தனிப்பட்டது, இது இதழில் வெளியிடப்பட வேண்டியது எனப் பகுத்துக் கொள்வர். இதுவே நடைமுறை.

தனிப்பட்டுத் தங்களுக்கு எழுதிய கடிதத்தை வெளியிட்டதின் மூலம் பிறர் தங்கள் மீது அனுதாபத்தையும் எங்கள் மீது பகை உணர்வையும் கொள்ள வேண்டும் என்பது கருதியே வெளியிட்டுள்ளீர்கள் என நினைக்க வேண்டியுள்ளது.

எனது கடிதத்தின் அச்சுப் பகுதியின் முடிவில், ஆசிரியர் குறிப்பு என்ற வகையில் கருத்துக்குக் கருத்து உரசிப் பார்ப்பதுதான் நாகரிகம் எனக் குறிப்பிட்டுள்ளீர்கள். உண்மை. இதில் இரண்டு கருத்துக்கள் இருக்க இடமில்லை. எங்கள் நூலின் கருத்துக்குக் கருத்து நீங்கள்

எழுதத் தொடங்கும்போது கருத்துக்களுக்கான பதிலைச் சொல்வது போன்ற தலைப்பைத்தானே தேர்ந்தெடுத்திருக்க வேண்டும். அப்படிப்பட்ட தலைப்பையா நீங்கள் தந்துள்ளீர்கள்? இல்லையே! தனி மனிதத் தாக்குதலாகத்தானே அந்தத் தலைப்பு இருக்கின்றது.

'புலவராம் பைந்தமிழுக்கு எதிராக நூல் படைப்பாராம்' என நீங்கள் தந்துள்ள தலைப்பைப் படிப்போர் என்ன நினைப்பர். எங்கள் நூலாசிரியர் தமிழ் மொழிக்கு எதிரானவர், பகைவர் என்றல்லவா நினைப்பர். அவ்வாறு பிறரை நினைக்கத் தூண்டி விடுவதுதானே தலைப்பின் உள்நோக்கமாக இருக்கின்றது. எங்கள் நூலில் எங்கேயாவது தமிழ் மொழிக்கும் தமிழ்ப் பண்பாட்டுக்கும் எதிரிடையான கருத்துக்கள் சொல்லப் பட்டுள்ளன என்று உங்களால் காட்டமுடியாத போது இதுபோன்ற தலைப்பைத் தந்துள்ள உங்கள் செயல் நாகரிகமா? இது தனிப்பட்ட காழ்ப்புணர்ச்சியைக் காட்டவில்லையா? இது தோல்வித்தானம் இல்லையா? அவசரத்தாலும், அச்சத்தாலும், ஆத்திரத்தாலும் தரப்பட்ட தலைப்புத்தானே இது. 'பைந்தமிழுக்கு எதிராக நூல் படைப்பாராம்' என்ற தொடரில் பைந்தமிழ் என்னும் சொல்லை நீங்கள் எந்தப் பொருளில் கையாளுகின்றீர்கள் என்பது புரியவில்லை. பொதுவாகத் 'தமிழ்மொழி' என்ற பொருளையே கொள்ளுகிறீர்கள் என்று கருதுகின்றேன்.

இப்படியெல்லாம் உங்களைப் போன்றோர் எழுதுவார்கள், பகை உணர்வைத் தூண்டுவார்கள், அணி சேர்ப்பார்கள், தமிழ்த் துரோகி என்பார்கள் என்பது கருதியே நூலாசிரியர் தமிழ் என்பதன் பொருள் என்னும் தலைப்பில் பக்கம் 189 – 192 வரை அருமையான விளக்கம் தந்துள்ளார். அதாவது 'தமிழ்' என்ற சொல் இவ்விடத்தில் திருமுறைகளைக் குறித்து நிற்கின்றது எனத் தெளிவாக விளக்கியுள்ளார். தாங்கள் வசதியாக இவ் விடத்தை விட்டுவிட்டீர்கள்.

திருமுறைப் பாடல்களைக் கையாளுவதில், பயன்படுத்துவதில், பொருள் சொல்வதில் எங்கள் நூலாசிரியர் சில செய்திகளை எடுத்துக் கருத்துச் சொல்கின்றார். கருத்துக்களில் வேறுபாடு இருக்கலாம்,

அந்தக் கருத்துக்கள் சரியா? தவறா? என்பதைப் படிப்போர் உணரும் வகையில் தலைப்புத்தராமல் ஒட்டு மொத்த மாகத் தமிழுக்குப் பகைவர் எனத் தலைப்புத் தருவது எந்த வகையில் நியாயம்? நாகரிகம். இதுவாக கருத்தோடு கருத்து உரசிப் பார்க்கும் பாங்கு? பண்பாடு.

தாங்கள் தனிப்பட்ட காழ்ப்புணர்ச்சியோடு தந்த தலைப்புத் தான் 'பொறியாளராம் பைந்தமிழைப் பணம் பண்ணுவாராம்' என்று நாங்கள் தலைப்புத் தர காரணமாயிற்று. மேலும் இவ்வாறு தலைப்பு தர நாங்கள் எண்ணியதற்கு வேறு ஒரு காரணமும் உண்டு.

'டாக்டர் பிரமோத் கரண் சேத்தி' என்னும் மாமனிதர் சென்ற சனவரித் திங்களில் காலமானார். (28.11.1927 06.01.2008) காலிழந்த லட்சக்கணக்கான ஏழைகளின் நடைப் பயணம் இன்றும் சேத்தி உருவாக்கிய காலினால்தான் நடக்கின்றது. 'ராம் சந்திரா' என்ற கைவினைக் கலைஞருடன் சேர்ந்து அவர் உருவாக்கிய செயற்கைக் காலுக்கு வணிக நோக்கில் காப்புரிமை எடுக்க சேத்தி மறுத்துவிட்டார். பலரின் கூட்டு முயற்சியால் உருவான இது ஒரு பொதுச் சொத்து என அறிவித்து, நாங்கள் கண்டுபிடித்த இதனை யாரும் செய்து பயன்படுத்தலாம் எனப் பிரகடனப் படுத்தினார். அதற்கு அவர் உரிமை கொண்டாடவில்லை. இன்று அது 'ஜெய்ப்பூர் கால்' என்று அழைக்கப்பெற்றுப் பலருக்குப் பயன்பட்டு வருகின்றது. இவரன்றோ மனிதரில் புனிதர். இவரன்றோ சமூக உணர்வுடையவர். இவரன்றோ சமூகக் காப்பாளர். இவரன்றோ தெய்வம்.

டாக்டர் சேத்தி செய்தி இவ்வாறு இருக்க உங்கள் செய்தி எவ்வாறு இருக்கின்றது? 'செந்தமிழாகம குடநீராட்டு நன்னூல்' என்னும் நூலில் 'சட்ட விளைவு சாற்றுதல்' என்ற தலைப்பில் கட்டம் கட்டி ஒரு செய்தி வெளியிட்டுள்ளீர்கள். அதில் இந்நூலில் காட்டிய சடங்கு முறைகளையும் உடங்கிய ஒண் தமிழ் மந்திரங்களையும் முழுமையாகவோ அல்லது நூலின் ஒரு பகுதியையோ ஆசிரி–யரின் முன் அனுமதி இன்றி எவரும் பயன்படுத்தக் கூடாது என எச்சரிக்கப்படுகின்றது என்றும், மீறினால் சட்ட நடவடிக்கை

எடுக்கப்படும் என்றும் கூறியுள்ளீர்கள்.

'யாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம்' என்றும், 'எல்லாரும் இன்புற்றிருப்பதல்லால் வேறு ஒன்று அறியேன் பராபரமே' என்றும் கூறிச் சென்ற நமது தமிழ்ச் சான்றோர் கூற்றினை உங்களால் வெறுக்கப்படும் வட புலத்து மக்களுள் ஒருவராகிய டாக்டர் சேத்தி தலைமேல் கொண்டு செயல்பட, தமிழராகிய நீங்கள் அதற்கு மாறாக எச்சரிக்கை விடுக்கிறீர்கள். வேடிக்கையாக இல்லையா?

நீங்கள் என்ன செய்திருக்க வேண்டும்? இதோ நான் அரிதின் முயன்று தொகுத்துத் தந்துள்ள இந்த நூலினைப் பின்பற்றித் தமிழகத்தின் மூலை முடுக்கெல்லாம் தமிழில் வேள்வி செய்ய முந்துங்கள். இந்த எனது தொகுப்பு எல்லார்க்கும் சொந்த மானது. இதில் காணப்படும் செய்திகளை, சடங்குகளை எடுத்தாளவும் செய்யவும் எனது அனுமதி தேவையில்லை எனப் பறைசாற்றியிருக்க வேண்டும். செய்தீர்களா? செய்ய வில்லையே! வறுமையின் உச்சியில் இருந்த பெருஞ்சித்திரனார் தனது மனைவியிடம் இது குமணன் தந்த செல்வம், இதனை எல்லார்க்கும் கொடு எனச் சொல்லியதைப் போலச் சொல்லியிருக்க வேண்டும். இவ்வாறு செய்திருந்தால் நீங்கள் இருக்கும் திசை நோக்கித் தொழுது உங்களை உச்சி மேல் கொண்டு வழிபடுவோம்.

மாறாக என்ன செய்துள்ளீர்கள்? சட்ட நடவடிக்கை எடுப்பேன் என்கிறீர்கள். இந்த நூலுள் சொல்லப்படும் செய்திகள் அனைத்தும் உங்களுக்குச் சொந்தமானவையா? சொந்தமானவை எனக் கூறிக் காப்புரிமை வாங்கியுள்ளீர்களா? காப்புரிமை வாங்கியுள்ளேன் என்றால் அது வணிகமாகாதா? பணம் பண்ணும் வழி ஆகாதா? காப்புரிமை வாங்கவில்லை, இதன் உரிமை அறிவு சார்ந்த சொத்துரிமை ஆகும் என்கிறீர்களா? அப்படியாயின் 'பில்கேட்சின்' அறிவு போன்று தனிப்பட்ட உங்கள் அறிவினைக் கொண்டு உருவாக்கப்பட்டதா இந்த நூல்? அப்படியும் இல்லையே! பல அருளாளர்களின் பாடல்கள் மற்றும் கருத்துக்களின் தொகுப்பாகத்தானே இந்த நூல்

காட்சியளிக்கின்றது. வேள்விக் குண்டங்களின் அமைப்பு முறை உங்கள் கண்டுபிடிப்பா? இல்லையே! சடங்கு முறைகள் உங்களால் உருவாக்கப்பட்டனவா? இல்லையே! அவையெல்லாம் நமது முன்னோர்கள் கொண்டவையாயிற்றே! அவற்றின்மீது நீங்கள் எவ்வாறு உரிமை கொண்டாட முடியும்?

'எனதுரை' என்ற தலைப்பில் பக்கம் ஏ 25 ல் குடமுழுக்கு உட்பட அனைத்து வழிபாட்டுச் சடங்குகளையும், திருமணம், திருவடிப் பேறு போன்ற வாழ்வியல் சடங்குகளையும் பெரும்பான்மையாகத் திருமுறைத் தமிழிலிருந்தே பாடல்களைத் தெரிந்தெடுத்துக் கோவை செய்தேன். திருமந்திரம் அதில் பெரும் பங்கு வகித்தது என நீங்களே ஒப்புதல் வாக்குமூலம் அளித்து விட்டு எனது அனுமதியின்றி இவற்றை எடுத்தாண்டால் சட்ட நடவடிக்கைக்கு உள்ளாக்குவேன் என்பது பணம் பண்ணும் நோக்கமல்லாமல் வேறு என்னவாக இருக்க முடியும்? இந்த நோக்கத்தில்தான் எச்சரிக்கை விடுத்துள்ளீர்கள் என நாங்கள் கருத இடமிருக்கிறதே. ஆதலால்தான் நாங்கள் அந்தத் தலைப்பினைத் தந்தோம். கண்ணாடி வீட்டில் இருந்து கொண்டு கல் எறிந்தது யார்? நீங்கள் தானே!

டாக்டர் சேத்தி போன்று வாழ்பவனே வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன். அவன்தான் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படுவான் என்பதனை அன்பு கூர்ந்து நினைவு கூர வேண்டும் என்பதுடன், உங்களை எங்கே வைப்பது என்பதனையும் தெரிவித்துதவ வேண்டுகிறேன்.

அன்புடன்,

குறிப்பு

1. இந்த எனது கடிதத்தைத் தங்கள் இதழில் வெளியிட்டு உதவ வேண்டுகின்றேன்.

2. எங்கள் நூல் விற்பனையாகின்ற தொகையில் ஒரு ரூபாயைக் கூட நூலாசிரியர் பெறுவதில்லை. 25 விழுக்காடு சேக்கிழார்மன்றத்திற்கும் 75 விழுக்காடு அவர் தலைமையில் நடைபெறும் திருக்கோயில் திருப்பணிக்கும் தந்து விடுகின்றார். நூல் எழுதிப் பணம் பண்ணவில்லை. அதற்கான தேவை அவருக்கில்லை.

3. நூல் பற்றி நீங்கள் எழுதும் செய்திகள், கருத்துக்கள் மீது நூலாசிரியர் கருத்துரைப்பார்.

அடுத்து, 'மண்ணில் நல்லவண்ணம்' எனத்தொடங்கும் சம்பந்தர் பாடல் திருமணச் சடங்கிற்குப் பொருந்தி வராது என நான் எழுதியுள்ள காரணங்களை மேலும் விளக்க வேண்டும், என்று அன்பர்கள் கேட்டுக் கொண்டதன் பேரில் அதற்கான பகுதியில் விரிவாக எழுதியுள்ளேன். இரண்டு முறை எழுதப்பட்டுள்ளதால், ஓர் இடத்தில் கூறப்பட்டுள்ள செய்திகள் படிப்போர் விளங்கிக்கொள்ள வேண்டும் என்ற நோக்கத்தில் மீண்டும் வரும். அதனை அன்பர்கள் பொறுத்தாற்ற வேண்டுகின்றேன்.

இந்த இரண்டாம் பதிப்பை, சென்னை வேத விஞ்ஞான ஆராய்ச்சி மையம் வெளியிட முன்வந்தமைக்கு எனது நன்றி.

இந்த நூலை வரவேற்றுப் போற்றிக் கொண்டாடிய அத்தனை பேருக்கும் எனது நன்றி

சென்னை
10.5.2014

சாமி. தியகராாசன்



# வேண்டுகின்றேன்

இந்த நூல் மூன்று பகுதிகளாக எழுதப்பட்டுள்ளது. முதல் பகுதியின் முகப்பிலும் மூன்றாம் பகுதியின் முகப்பிலும் பேராசிரியர் முனைவர் ம.ரா.போ. குருசாமி அவர்களின் கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன. அவற்றை ஒருமுறைக்கு இருமுறை படித்து உள்வாங்கிக்கொண்டு, அதன்பின்பு நூலைப் படிக்கத் தொடங்குக! என அன்புடன் வேண்டிக்கொள்கின்றேன்.

முதல் பகுதியின் முகப்பில் உள்ள பேராசிரியரின் கட்டுரைத் தொடர்பான எனது ஆய்வுக் கருத்துக்கள்: அக்கட்டுரையின் கடைசியில் தொடங்கி முதலில் முடிவடைகின்றன என்பதை அன்புகூர்ந்து கவனித்து உள்ளத்தில் கொள்ள வேண்டுகின்றேன்.

ஆசிரியர்.

# சொந்த மொழியும் வந்த மொழியும்

*அன்பிற் பெருகிய சிறப்பின் மிக்க*
*அருச்சனை பாட்டே யாகும்.*

என்று சொன்னதோடு,

*ஆதலால் மண்மேல் நம்மைச்*
*சொற்றமிழ் பாடுக.*

என்று சிவபெருமான் அருளினார். ஒரு வேளை இந்தச் சிவபிரான் 'திராவிடச் சிவனோ' என்று ஐயப்பட்டுவிடக்கூடாதே! தமிழில் பாடு என்று கட்டளை இட்ட சிவபிரானைத் 'தூ(ய) மறை பாடும் வாயார்' என்று விளக்குகிறார், சேக்கிழார்.

வேதத்தையே பாடுகின்ற சிவபெருமான் ஆதிசைவப் பிராமணருக்கு இடுகின்ற கட்டளை 'அருச்சனை என்பது பாட்டுத்தான்; ஆதலால் புகழ்மிக்க தமிழாலே பாடுக' என்பது.

ஒருவேளை அருச்சனைச் சடங்குக்கு மட்டும் தமிழ்ப்பாட்டு இருக்கலாமோ என்று ஐயப்படவேண்டாம். 'எந்தச் சடங்காக இருந்தாலும் சமசுகிருதம் தான்' என்று பீடாதிபதிகள் ஓதியருளுவார்கள்.

இந்தப் பெரியபுராணப் பாடலுக்கு உரை எழுதும் போது இருபதாம் நூற்றாண்டுச் சேக்கிழாராகிய சிவக்கவி மணியவர்கள் வரைந்துள்ள சில விளக்கங்கள் இங்கே தரப்படுகின்றன.

அர்ச்சனை இங்குத் தொண்டு செய்யும் பலவகை வழிபாடு களையும் உட்கொண்ட பொதுப்பெயராய் நின்றது. மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுக இம்மண்ணுலகிலே நாம் விரும்பி எழுந்தருளிய தானங்கள்தோறும் சொல் தமிழ்ப் பாட்டுக்களால் நம்மைப்பாடுக.

மறை பாடுவார் – இவரது தமிழ்ப் பாட்டை விரும்பினார் என இவற்றின் பெருமையையும், அதனிலும் பார்க்கத் தமக்கு இவற்றில் மிக விருப்பமுடைமையையும் இவற்றின் பயன்மிகுதியையும் காட்டியவாறு.

நாம் மறை சொன்னோம் நீ அதனையே ஒத்த தமிழ்ப் பாட்டுக்களை உனக்குள்ளிருந்து சொல்லும் எமது உரையையேயாக உலகம் உய்யப்பாடுக என்றபடி"

சம்பந்த சரணாலயராகிய சிவக்கமணியவர்களின் விளக்கம் தமிழ் வழிபாட்டுக்கே ஆதரவாக இருப்பதை இதனால் உணரலாம்.

முதலில் பரபக்க வாதங்கள் பார்த்தோம். அடுத்துச் சுபபக்கச் செய்திகளை உணர்ந்தோம். எந்தக் காலத்திலுமே இப்படியும் அப்படியுமாகப் பேசும் ஊசலாடிகள் இருப்பார்கள்.

அனுபவிக்கும் சலுகைகள் காரணமாகவும் மேலிடத்திலிருந்து எல்லாரையும் மேய்ப்பராக இருப்பதில் உள்ள வசதி காரணமாகவும் ஆங்கில ஆதிக்கத்துக்குத் துதி பாடுவார், உயர் உத்தியோகக் கூட்டத்தார். ஆனால், புதிய விழிப்பு எற்படுவதைக் காணும் போது தமிழையும் விடமாட்டாமல் தமிழாளிகளாகவும் மேட்டுக் குடியினர் சனநாயகத் தத்துவிகளாகத் தோற்றம் அளிப்பர். ஆம் ஆம்... தமிழ் இல்லாமலா! கொள்கையளவில் எங்கும் எதிலும் தமிழ்தான். அதிலே ஐயமே இல்லை, இல்லை. ஆனால் Let us hasten slowly என்று மந்திரம் ஓதுவார்கள். மெல்ல மெல்ல விரைவோம், ஆமைபோல் விரைவோம் என்பது இந்தப் புதுச் சாதியாரின் விளக்கம்.

வடமொழியை விட்டு விலகாமல் பற்றிக் கொண்டு தமிழ்மொழியிடத்துப் பற்றுக்கொண்ட பார்வை காட்டி, ஒரு புதிய சாதி சில நூற்றாண்டுகளுக்கு முன் தமிழ்ச் சமய அரங்கிலே உருவாயிற்று. தங்களை வடமொழியாளர் சூத்திரர் என்று

சொன்னதை அவர்களால் மனதார ஏற்க முடியவில்லை. ஆனால் தேவமொழியாளர்களைச் சார்ந்திருப்பதால் ஏற்படும் சலுகை நிலையை விடவும் முடியவில்லை. 'நாங்கள் சூத்திர குலம் இல்லை, சூத்திர நற் குலம்' என்று சொல்லி மனப் புழுக்கத்தை மறைத்துக் கொண்டார்கள். வருணாசிரமிகளும் சூத்திர நற்குலம் விளங்க வந்த' வேளாளர்களும் ஐக்கிய முன்னணி அமைத்துப் 'பஞ்சமர்' என்ற ஐந்தாம் குலத்தைப் புதிதாக உருவாக்கினர். தமிழ்நாட்டிலே சிலர் சத்திரியர் ஆயினர்; வேறு சிலர் வைசியர் ஆயினர்; வேளாளர் சூத்திர நற்குலத்தினராயினர். பஞ்சமர் என்பவர் தீண்டப்படாத குலத்தினராயினர். நால்வருணம் ஐந்து சாதியாக மாறிற்று.

சமஸ்கிருத மேலாண்மையை வேறு வழி இல்லாமல் ஏற்றுக்கொண்டு, தமிழ்ச் சைவமரபைப் புறக்கணிக்கவும் முடியாமல் வேதத்தின் கரும காண்டத்தையும் ஞான காண்டத்தையும் புதிய புதிய சமாதானங்களாய் விளக்கி யுள்ளதைச் சிவஞான பாடியத்தின் சிறப்புப் பாயிர விளக்கத்தால் உணர முடிகிறது. புலமைச் சிறப்பாலும், பரம்பொருள் நாட்டத்தாலும் எல்லாவகையிலும் போற்றுதலுக்கும் வணக்கத்துக்கும் உரியவர்களாகிய சைவத் தலைவர்கள், பெரும்பாலும் வேளாளர்கள், அன்றைய சமுதாயத்தில் பெற்றிருந்த சலுகைகளால் செய்த சமுதாய; சமயப் பிழைகளால் தமிழ் வாழ்வையே கெடுத்தனர். தமிழகச் சமய வரலாற்றை விருப்பு வெறுப்பு நீக்கி நடுவுநிலை பேணிப்பார்த்தால் இருண்ட காலத் தமிழகத்து மேல்சாதியினர் இன்றைய உத்தியோக சாதியினரைப் போலவே இருந்தனர் என்பதை உணர முடியும்.

இடைக்காலச் சமயவாதிகளும் இன்றைய உத்தியோகச் சாதியினரும் சொந்த மொழியின் எல்லை எது, வந்த மொழியின் எல்லை எது என்பதைத் தெரிந்தே உழப்பிக் குழப்பி விட்டார்கள்.

*(ஆக்கம்: முனைவர். ம.ரா.போ குருசாமி) சிவசாந்தலிங்கர் - நவம்பர் 2007)*

# சொன்னால் விரோதம் ஆயினும் சொல்லுகிறேன்

## பகுதி I

**எல்லை எது?**

ஒரு செய்தியின் அல்லது ஒரு பொருளின் எல்லை தெரியாதவர்கள்தான் தங்கள் கருத்தாலும் காட்சியாலும் பிறரைக் குழப்புவார்கள். ஏனெனில் அவர்களுக்கு அந்த எல்லை புரியாமல் விளங்காமல் போவதால் என்க. ஆனால் எல்லை தெரிந்தவர்கள் குழப்புகிறார்கள் என்றால் அதற்கான காரணம் இருக்க வேண்டும்.

பேராசிரியர் தமது கட்டுரையில் "எல்லை எது என்பதைத் தெரிந்தே உழப்பிக் குழப்பி விட்டார்கள்" எனத் தெளிவாகக் குறிப்பிடுகின்றனர். இவ்வாறு தெளிவாகக் குறிப்பிடுவதிலிருந்தே பேராசிரியருக்கு அந்தக் காரணம் தெரிகின்றது என்பது புலனாகின்றது.

காரணத்தைத் தெரிந்து வைத்திருக்கின்ற பேராசிரியர் என்ன செய்ய வேண்டும்? தனக்குத் தெரியும் காரணத்தை வெளியிட்டு அனைவரும் அதனைத் தெரிந்துகொள்ள வகைசெய்ய வேண்டும். அப்போதுதான் என்னைப் போன்ற சாமான்யர்கள் பயன்பெறுவர். ஆனால் பேராசிரியர் அந்தக் காரணத்தை வெளியிடாமல் பொதுவாகச் சொல்லிச் செல்கிறார். இவ்வாறு பொதுவாகச் சொல்லுதல் என்பது, இருக்கின்ற குழப்பங்களுக்கு மேலும் ஒரு குழப்பத்தை உண்டாக்குமே தவிர பயன் தராது. சொந்த மொழியின் எல்லை இது வந்த மொழியின் எல்லை இது என வரையறை செய்து அதற்கான காரணங்களைப் பேராசிரியர் விளக்குவாரேயானால் தமிழுலகம் நன்றி பாராட்டும்.

## குற்றச்சாட்டு

"தமிழகச் சமயவரலாற்றை விருப்பு வெறுப்பு நீக்கி நடுவு நிலைபேணிப் பார்த்தால் இருண்ட காலத் தமிழகத்து மேல் சாதியினர் இன்றைய உத்தியோகச் சாதியினரைப் போலவே இருந்தனர் என்பதை உணர முடியும்" எனப் பேராசிரியர் குறிப்பிடும் பகுதியிலிருந்து என்ன விளங்குகிறது?

இதுநாள்வரை தமிழகச் சமய வரலாற்றை விருப்பு வெறுப்பு இல்லாமல் நடுவு நிலையோடு யாரும் பார்க்கவில்லை என்ற மனக்குறை பேராசிரியருக்கு இருக்கிறது என்பது விளங்குகிறது. இந்த மனக்குறையே தமிழக சமய வரலாற்றை எழுதியவர்கள் மீது குற்றச்சாட்டாக அமைகிறது.

இந்தக் குற்றச்சாட்டை முன்வைக்கும் பேராசிரியர் இருண்ட காலத் தமிழகம் என்பது எது? அந்த இருண்டகாலத் தமிழகத்தில் அங்கம் கொண்ட மேல்சாதியினர் யார் யார்? இன்றைய உத்தியோகச் சாதியினரின் இயல்பு எத்தகையது? இந்த உத்தியோகச் சாதியினரின் இயல்பு அன்றைய மேல் சாதியினருக்கு எவ்வாறு பொருந்துகிறது? என்பன போன்ற பல செய்திகளை எழுதி தமிழக சமய வரலாற்றில் நடுவுநிலையைப் பேணலாமே! இவ்வாறு செய்ய ஒட்டாமல் பேராசிரியரைத் தடுப்பது எது? போகிற போக்கில் இது போன்ற பொதுவான குற்றச்சாட்டை வீசிச் செல்வதில் என்ன பயன் ஏற்படும்? ஏற்படாது என்பதுடன் இயலாமையையும் அது புலப்படுத்தி நிற்கும்.

விருப்பு வெறுப்பு நீக்கி நடுவுநிலை பேண வேண்டும் என்று கூறும் ம.ரா.போ "சைவத் தலைவர்கள் பெரும்பாலும் வேளாளர்கள் அன்றைய சமுதாயத்தில் பெற்றிருந்த சலுகை களால் செய்த சமுதாய, சமயப் பிழைகளால் தமிழ் வாழ்வையே கெடுத்தனர்" என வெறுப்பின் உச்சியில் ஏறிநின்று குறிப்பிட்ட சாதியினர் மீது கடுமையாகக் குற்றம் சுமத்துகிறார்.

இவ்வாறு கடுமையாகக்' குற்றம் சுமத்தும் பேராசிரியர், தான்

சுமத்தும் குற்றங்களுக்கான காரணங்களை அடுக்கிக் காட்ட வேண்டாமா? காரணம் காட்டாமல் குற்றம் சுமத்துவது ஏற்புடைய தாகுமா? இதுவா அறிஞர்க்கழகு? ஆய்வுக்கழகு?

இதுபோன்ற பொதுவான குற்றச்சாட்டுகளைக் கூலி கொடுத்து அழைத்து வரும் கூட்டத்தில் கூறினால், அவர்கள் வாங்கிய கூலிக்கு வஞ்சகம் செய்யாமல் கைதட்டி ஆரவாரம் செய்து வாழ்த்துச் சொல்லுவார்கள். ஆனால் அறிஞர் உலகில் கற்றவர் அவையில் இவை ஒருகாலமும் ஏறா என்பது திண்ணம்.

## வேளாளர்களா தமிழ் வாழ்வைக் கெடுத்தனர்?

"அன்றைய சமுதாயம்" என்றும் "சில நூற்றாண்டுகளுக்கு முன்" என்றும் ஏதோ காலத்தை மனத்தில் கொண்டு பேராசிரியர் கூறுகிறாரே தவிர அதற்கான எல்லையைச் சுட்டிக் காட்டவில்லை. இதனையும் பொதுவாகவே கூறிச் செல்கிறார். எனினும், அவர் மனத்தில் கொண்டுள்ள கால எல்லையை அவரது சொற்கள்கொண்டு ஒருவாறு யூகிக்க முடியும். 'சூத்திர நற்குலம்' என்னும் சேக்கிழார் வாக்கினைப் பேராசிரியர் எடுத்தாளுவது கொண்டும், "சிவஞான பாடியத்தின் சிறப்புப் பாயிர விளக்கத்தால் உணரமுடிகிறது" என்னும் தொடரினைக் கொண்டும் கி.பி. 12ஆம் நூற்றாண்டு தொடங்கி கி.பி. 16ஆம் நூற்றாண்டு வரை எனக் காலத்தை யூகிக்கலாம்.

மேலும் இதனை விளங்கிக்கொள்ள சைவ சமய குரவர்கள் காலம் என வரலாற்று ஆசிரியர்களால் குறிப்பிடப்படும் நால்வர்காலத்தையும் (கி.பி. 7 தொடங்கி கி.பி. 9–10 வரை) கருத்தில் கொண்டு சைவ சமயச் சான்றோர்களின் குலங்களைப் (சாதியினை) பார்ப்போம்.

1. திருஞானசம்பந்தர் – அந்தணர்
2. திருநாவுக்கரசர் – வேளாளர்
3. சுந்தரமூர்த்தி சுவாமிகள் – ஆதிசைவர்
4. மாணிக்கவாசகர் – அந்தணர்

இவர்கள் பாடல்களின் தொகுப்பினை எட்டுத் திருமுறைகள் என்பர்.

ஒன்பதாம் திருமுறைப் பாடல்களை ஒன்பது சான்றோர்கள் அருளியுள்ளனர். அவர்கள் பெயர்களையும் குலத்தினையும் பார்ப்போம்.

| | |
|---|---|
| 1. திருமாளிகைத்தேவர் | வேளாளர் |
| 2. சேந்தனார் | புலையர் |
| 3. கருவூர்த்தேவர் | குலம் தெரியவில்லை |
| 4. பூந்துருத்தி நம்பி காடநம்பி | அந்தணர் |
| 5. கண்டராதித்தர் | அரசர் |
| 6. வேணாட்டடிகள் | அரசர் |
| 7. திருவாலியமுதனார் | அந்தணர் |
| 8. புருடோத்தமநம்பி | அந்தணர் |
| 9. சேதிராயர் | அரசர் |

பத்தாம் திருமுறை திருமந்திரமாகும். இதனை அருளியவர் திருமூலர். இடையர்குலம்.

பதினோராம் திருமுறையில் காணப்படும் பாசுரங்களில் இறைவன் அருளியதாகக் கூறப்படும் திருமுகப்பாசுரத்திற்கு உரியவரான ஈசனை விடுத்து மற்ற பிரபந்தங்களை இயற்றி யருளிய அருளாளர்கள் பதினொருவர். அவர்கள் பெயர்களையும் குலத்தினையும் காண்போம்.

| | |
|---|---|
| 1. காரைக்கால் அம்மையார் | வணிகர் |
| 2. ஐயடிகள் காடவர்கோன் | அரசர் |
| 3. சேரமான் பெருமாள் நாயனார் | அரசர் |
| 4. நக்கீரதேவர் | குலம் தெரியவில்லை |

| | |
|---|---|
| 5. கல்லாட தேவர் | குலம் தெரியவில்லை |
| 6. கபில தேவர் | குலம் தெரியவில்லை |
| 7. பரண தேவர் | குலம் தெரியவில்லை |
| 8. இளம்பெருமானடிகள் | குலம் தெரியவில்லை |
| 9. அதிராவடிகள் | குலம் தெரியவில்லை |
| 10. திருவெண்காட்டடிகள் | வணிகர் |
| 11. நம்பியாண்டார்நம்பி | ஆதிசைவர் |

பன்னிரண்டாம் திருமுறை ஆசிரியர் தெய்வச் சேக்கிழார் பெருமான். இவரைத் தொண்டை மண்டல முதலியார் வகுப்பு என்பர் ஒரு சாரார். வேளாளர் என்பர் இன்னொரு சாரார்.

இங்கே காட்டப்பட்டுள்ள திருமுறை ஆசிரியர்களில் திருநாவுக்கரசர், திருமாளிகைத்தேவர் ஆகியோரே வரலாற்று ஆசிரியர்களால் தெளிவாக வேளாளர்கள் எனக் குறிக்கப் பெறுகின்றனர்.

திருநாவுக்கரசரும் திருமாளிகைத் தேவரும் சமுதாயச் சலுகைகள் பெற்று தமிழ் வாழ்வைக் கெடுத்தனர் எனப் பேராசிரியர் கருதிச் சொல்கிறார் எனச் சொல்லமுடியாது. ஏனெனில் "சில நூற்றாண்டுகளுக்கு முன்" என்னும் தொடரில் அவர்கள் வர இயலாது. ஆக, பேராசிரியரின் நோக்கு சேக்கிழார் காலம் தொடங்கி சந்தான குரவர்கள் காலத்தைத் தொட்டு நிற்கிறது எனக் கருதலாம்.

சைவசமய தோத்திர நூல்களாகிய பன்னிரண்டு திருமுறைகளைப் போன்று சைவ சமய சாத்திர நூல்கள் (14) பதினான்காகும். இந்நூல்களை மெய்கண்ட சாத்திரநூல்கள் என்பர். இந்தச் சாத்திரநூல்களை இயற்றி அருளியோர் சந்தான குரவர்கள்என அழைக்கப்படுவர். இவர்களின் பெயர்களையும் குலத்தையும் காண்போம்.

| நூல் பெயர் | ஆசிரியர் | குலம் |
| --- | --- | --- |
| 1. திருவுந்தியார் | உய்யவந்ததேவ நாயனார் | தெரியவில்லை |
| 2. திருக்களிற்றுப்படியார் | திருக்கடவூர் உய்யவந்த தேவர் | தாழ்ந்த குலம் |
| 3. சிவஞானபோதம் | மெய்கண்டார் | வேளாளர் |
| 4. சிவஞானசித்தியார் | அருணந்திசிவம் | ஆதிசைவர் |
| 5. இருபா இருபது | | |
| 6. சிவப்பிரகாசம் | | |
| 7. திருவருட்பயன் | | |
| 8. வினாவெண்பா | | |
| 9. போற்றிப்பஃறொடை | உமாபதிசிவம் | அந்தணர் |
| 10. கொடிக்கவி | | |
| 11. நெஞ்சுவிடுதூது | | |
| 12. உண்மைநெறி விளக்கம் | | |
| 13. சங்கற்பநிராகரணம் | | |
| 14. உண்மை விளக்கம் | மனவாசகம் கடந்தார் | தெரியவில்லை |

இங்கே தரப்பட்டுள்ள பட்டியல்களிலிருந்து தோத்திர நூலாகிய திருமுறைகளின் ஆசிரியர்களில் இருவர் வேளாளர்கள் சாத்திர நூலாகிய மெய்கண்ட நூல்களின் ஆசிரியர்களில் ஒருவர் வேளாளர் என்பது தெரிகிறது. இம்மூவர் மட்டும் எப்படித் தமிழ் வாழ்வைக் கெடுக்கமுடியும் என்றால்; சமயகுரவர்கள் சந்தான குரவர்களைப் பற்றி நான் கூறவில்லை ஒட்டுமொத்த வேளாளர்கள் பற்றியே நான் கூறுகிறேன் என்றும் பேராசிரியரால் கூறமுடியாது. ஏனெனில் "தமிழ்ச் சமய அரங்கு" எனப் பேராசிரியர் குறிப்பிடுவதால் சமயம் சார்ந்த

பெரியோர்களையே அவர்குறிப்பிடுகின்றார்என்பது வெள்ளிடைமலை. ஆதலால் ஏலவே நாம் கண்டு வந்தபடி பேராசிரியரின் நோக்கு (குற்றச்சாட்டு) சந்தான குரவர்களைச் சார்ந்தே இருக்கிறது எனக் கருதலாம்.

அவருள்ளும் மெய்கண்டார் என்னும் வேளாளர்குலத் தலைவரையும் அவர் இயற்றியருளிய சிவஞானபோதத்திற்கு மாபாடியம் வரைந்த சிவஞானமுனிவர் என்னும் வேளாளர்குலப் பெரியாரையும் ம.ரா.போ. மனத்துள் கொண்டு பேசுகிறார் என்று கருத வேண்டியுள்ளது.

மேலும் சந்தானகுரவர்கள் பரம்பரையை ஒட்டி சைவ ஆதீனங்கள் தோற்றம் கொள்ள அவ்வாதீனங்களின் தலைவர்களாக வேளாளர்கள் அமைய அவர்களே தமிழ்வாழ்வைக் கெடுத்தனர் என்ற முடிவுக்கு ம.ரா.போ. வந்திருக்கிறார் என்று எண்ணும்படியும் அவருடைய வாசகங்கள் அமைந்துள்ளன.

## வெறுப்பின் விளைவு

இவர்கள் தமிழ்வாழ்வைக் கெடுத்தனரா இல்லையா என்பதைப் பற்றிச் சிந்திப்பதற்கு முன் "வருணாசிரமிகளும் (அதாவது பிராமணர்களும்) வேளாளர்களும் ஐக்கிய முன்னணி அமைத்துப் பஞ்சமர் என்ற ஐந்தாம் குலத்தைப் புதிதாக உருவாக்கினர்" என்னும் பேராசிரியரின் கூற்றை ஆய்வுக்குக் கொள்வோம்.

*"கள்ளி யேய்ந்த முள்ளியம் புறங்காட்டு*
*வெள்ளில் போகிய வியலு ளாங்கண்*
*உப்பிலா அவிப்புழுக்கல்*
*கைக்கொண்டு பிறக்கு நோக்கா*
*இழிபிறப்பினோன் ஈயப்பெற்று*
*நிலங்கல னாக இலங்குபலி மிசையும்*
*இன்னா வைகல்"*

என்னும் இந்தப் புறநானூற்றுப்பாடலில் (புறம் 363) ஒரு செய்தி காணப்படுகிறது. சங்ககாலம் பொற்காலம். அக்காலத்தில் மக்களிலே

மேல் கீழ் இல்லை. அனைவரும் சமம் என்ற தத்துவம் தாண்டவமாடியது என நம்மவர்களில் பலர் வாய்ப்பறை அடிக்கிறார்களே, அந்தப் பறையை இந்தப் பாடலில் காணப்படும் செய்தி கிழித்தெறிகிறது.

பிறப்பின் சார்பால் ஒருவனை இழிபிறப்பினோன் என்று கூறி அவனை மக்களிலே மிகவும் கீழானவன் என்று அக்காலத்தில் கருதி வைத்திருந்தனர் என்பதை இப்பாடல் செய்தி தெளிவாகக் கூறுகிறது.

> பிறப்பின் சார்பால் ஒருவனை இழிபிறப்பினோன் என்று கூறி அவனை மக்களிலே மிகவும் கீழானவன் என்று சங்ககாலத்தில் கருதி வைத்திருந்தனர் என்பதை இப்பாடல் செய்தி தெளிவாகக் கூறுகிறது.

இந்த இழிபிறப்பினோனுக்குச் சங்க காலத்தில் வைக்கப்பட்ட பெயர் என்ன இங்கே கூறப்படும் புலையன் அதாவது இழிபிறப்பினோன் வேற்றுமை தெரிந்த நாற்பாலுள் அடங்குவானா? அல்லது வேறு வகையுள் அடங்குவானா? அரசன் அந்தணன் வணிகன் வேளாளன் எனச் சங்ககால நால்வகையில் ஏதேனும் ஒரு வகையில் பிறந்த எவனையும் இழிபிறப்பாளன் என்று கூறுவார்களா? கூறமாட்டார்கள். கூறியதாகச் சான்றில்லை. அப்படியாயின் புலையனை எந்த வரிசையில் வைப்பது? நான்குக்குஅடுத்து ஐந்துதானே வரும். ஆறு என்ற எண் வாராதே. ஆதலால் புலையனை ஐந்தாவது இடத்தில்தான் வைக்க முடியும். 'பஞ்சமன்' என்ற சமஸ்கிருத சொல் ஐந்தாமவன் என்ற தமிழ்ச் சொல்லின் மொழியாக்கம்தானே. புறம்: 360ஆம் பாடலில் 'புலையன்' என்ற சொல் ஆளப்படுகிறது. இந்தப் புலையன் புறம்: 82, 289 ஆம் பாடல்களில் இழிசினன் என்ற சொல்லால் குறிக்கப்படுகிறான். அதாவது இழிவானவன் என்பதாகும்.

சங்ககாலச் செய்தி இப்படி இருக்க ம.ரா.போ. அவர்கள் சில நூற்றாண்டுகளுக்கு முன்பு தமிழ்ச் சமய அரங்கிலே பிராமணர்களும் வேளாளர்களும் ஐக்கிய முன்னணி அமைத்துப் 'பஞ்சமர்' என்னும் பெயரில் தீண்டப்படாத குலத்தினரை உருவாக்கினார் எனக்கூறுவது வேடிக்கையாக இல்லையா?

வேளாளர்கள் மீது ஏதோ காரணம்பற்றி வெறுப்புக் கொண்டுள்ள

ம.ரா.போ., வரலாற்றுச் செய்திகளையும் பண்டைத் தமிழ்ச் சமூக அமைப்பினையும் சரியாகப் புரிந்து கொள்ளவில்லையோ! என்று ஐயமுண்டாகிறது.

## பாடியத்தில் படிந்த எண்ணம்

இனி, ம.ரா.போ. சிவஞானமுனிவர் பற்றிக் கூறும் செய்திகளைப் பார்ப்போம்.

(சிவஞான முனிவர் என்னும் வேளாளர்)

"சமசுகிருத மேலாண்மையை வேறுவழியில்லாமல் ஏற்றுக்கொண்டு தமிழ்ச் சைவமரபைப் புறக்கணிக்கவும் முடியாமல் வேதத்தின் கருமகாண்டத்தையும் ஞானகாண்டத் தையும் புதிய புதிய சமாதானங்களாய் விளக்கியுள்ளதைச் சிவஞான பாடியத்தின் சிறப்புப் பாயிர விளக்கத்தால் உணரமுடிகிறது" (ம.ரா.போ. சிவசாந்தலிங்கர் கட்டுரை)

இந்தப் பகுதியின் வழி, ம.ரா.போ. சுட்டிக்காட்ட விரும்புவது சிவஞானமுனிவர் சமஸ்கிருத மேலாண்மையை ஏற்றுக்கொண்டு வேத வழியில் நின்று சைவ மரபைப் புறக்கணிக்க முடியாமல் புதிய புதிய சமாதானங்கள் கூறி விளக்குகிறார் என்பதாகும். அதாவது சைவ மரபினை விளக்குவதற்கு வேதங்களைச் சாட்சிக்குக் கொண்டு வந்து விளக்குவது தவறு என்றும் இவ்வாறு செய்ததால் சிவஞானமுனிவர் தமிழ் வாழ்வைக் கெடுத்துவிட்டார் என்றும் ம.ரா.போ. கருதுகிறார்.

இவ்வாறு பேராசிரியர் கருதுவதற்கு மெய்கண்டார் அருளிய சிவஞானபோதச் சிறப்புப்பாயிரத்துக்கு (சிவஞான பாடியத்துக்கன்று) சிவஞான முனிவர் எழுதிய விளக்கமே சான்று காட்டப்படுகிறது. அதனைப் பார்க்கலாம். சிறப்புப்பாயிரத்தில்

*"மயர்வற நந்தி முனிகணத்து அளித்த*
*உயர்சிவ ஞான போதம் உரைத்தோன்"*

என்னும் வரிகளுக்கு.

"மயக்கவாசனை அற்றுச் சிவாநுபவம் பெறுதற் பொருட்டு சீகண்ட தேவர்பால் கேட்டருளிய நந்திபெருமான் சனற்குமார முனிவன் முதலிய முனிவர் கணங்கட்கு முறையானே அளித்து அருளப்பட்ட சரியை முதலிய மூன்று பாதப்பொருள்களை ஆராயும் நூல்களின் மேற்பட்ட சிவஞானபோதம் என்னும் வடநூலை மொழிபெயர்த்துக் கூறி வார்த்திகம் எனப்படும் பொழிப்புரை செய்தோன்" எனச் சிவஞான முனிவர் விளக்கவுரை சொல்கிறார். மேலும், நூலாசிரியராகிய மெய்கண்டார், தாம் இயற்றியருளிய நூலுக்குச் "சிவஞான போதம்" எனப் பெயர் வைத்தது "ஏவம் வித்யாச் சிவஞான போதே சைவார்த்த நிர்ணயம்" என வடமொழிச் சிவஞான போதத்து இறுதிச் சூத்திரத்து ஓதியவாறு பற்றியே என அதற்கான காரணத்தையும் சிவஞானமுனிவர் சொல்கிறார்.

சிவஞான முனிவரின் பாடியம் சரியா?, தவறா?, ஏற்புடையதா?, இல்லையா? என்பது பற்றிய ஆராய்ச்சி இங்கே தேவையில்லை. அவர் எழுதிய உரையைக் கொண்டு அவர் பிறப்பின் சார்பால் வந்த குலம் குற்றமுடையது, தமிழ்வாழ்வைக் கெடுத்துவிட்டது என்று கூறலாமா? கூறக் கூடாதா? என்பது பற்றியே இங்கே பேசுகிறோம்.

ஒரு நூலுக்கு ஒருவர் உரை சொல்வதைக்கொண்டு அவர் சமூகத்திற்குத் தீங்கிழைத்துவிட்டார் என்றோ, தீங்கு செய்கிறார் என்றோ முடிவு சொல்லமுடியாது. கருத்து வேறுபாடு ஏற்பட்டால் தக்க ஏதுக்களை எடுத்துக்காட்டி அவர்கூற்றை மறுப்பதுதான் அழகு.

இந்த வகையில், சிவஞானமுனிவர் என்னும் வேளாளரின் கருத்தை 'மனோன் மணீயம்' என்னும் ஒப்பற்ற நூலை நமக்குத் தந்த பேராசிரியர் சுந்தரம் பிள்ளை என்னும் வேளாளர், சுவாமி வேதாசலம் (மறைமலைஅடிகளார்) என்னும் வேளாளர், கா.சு.பிள்ளை என்னும் வேளாளர் ஆகியோர் நன்கு ஆராய்ந்து முற்றாக நிராகரித்துள்ளனர். இப்பெருமக்களின் கருத்துக்களை உளம்கொண்டு ம.சுப்பிரமணிய முதலியார் என்பவர் 120 காரணங்கள்காட்டிச் சிவஞானமுனிவரின் கருத்தை மறுத்துச் சிவஞானபோதம் தமிழ் நூலே என நிறுவியுள்ளார்.

நமது பேராசிரியர் இந்த மூன்று வேளாளர்களையும் முதலியாரையும் தமிழ் வாழ்வைக் கெடுத்துவிட்டவர்கள் என்று கூறுவாரா? நான் சொல்வது சைவத் தலைவர்களைப் பற்றித்தானே தவிர சைவ வேளாளர்களைப்பற்றியன்று என்று வேண்டுமானால் கூறித்தப்பிக்கலாம். எப்படிக்கூறினும் ஒருவர் கருத்தினை ஆய்வுக்குக் கொள்ளும்போது அவர் பிறப்பின் வகையால் வரும் சாதியினைச் சொல்லிக்காட்டுவது என்பது மிகவும் வருந்தத்தக்கது என்பதில் ஐயமில்லை.

## சேக்கிழாரும் சாதியும்

அடுத்து "நாங்கள் சூத்திரகுலம் இல்லை, சூத்திர நற்குலம்" என்று சொல்லி மனப்புழுக்கத்தை மறைத்துக் கொண்டார்கள் எனப் பேராசிரியர் குறிப்பிடும் பகுதியைக் காண்போம்.

சேக்கிழார் தமது திருத்தொண்டர் புராணத்தில் "இளையான் குடிமாறன் நாயனாரை"ப்பற்றி அறிமுகப்படுத்தும் போது சூத்திர நற்குலம் என்னும் வாசகத்தைப் பயன்படுத்துகின்றார்.

சேக்கிழார் காலத்திலும் சரி அவருக்கு முற்பட்ட காலத்திலும் சரி தமிழ்நாட்டில் படிநிலைச் சாதிப்பாகுபாடுகள் இருந்தன என்பது உண்மை. தொல்காப்பியத்திலும், புறம் ஆகிய சங்கப் பனுவல்களிலும் வேளாளர், வணிகர் எனக் குறிக்கப்படும் பிரிவினர் சேக்கிழார் காலத்தில் சூத்திரர் என்று அழைக்கப்பட்டனர் என்பதும் உண்மை. இவ்வாறு இவ்விரு பிரிவினரையும் 'சூத்திரர்' என்னும் பெயரிட்டு அழைத்தவர்கள் பிராமணர்கள் என்னும் பிரிவினர் ஆவர்.

சேக்கிழார் தாம் இயற்றியருளிய பெரியபுராணத்தில் பிராமணர் என்ற சொல்லை ஆளவில்லை. சேக்கிழார் காலத்துக்கு முன்னிருந்த திருமூலர் பிராமணர் என்னும் சொல்லை ஆளுகின்றார். அதுவும் எப்படி ஆளுகின்றார்?

*"சத்தியம் இன்றித் தனிஞானம் தானின்றி*
*ஒத்த விடயம்விட் டோரும் உணர்வின்றிப்*
*பத்தியும் இன்றிப் பரன்உண்மை யின்றிப்*
*பித்தேறும் மூடர் பிராமணர் தாமன்றே"*

என்னும் பாடலில் இறைவன் என்று ஒருவன் உளன் என்னும் உண்மை யில்லாமல் பித்தேறியது போன்று ஆன்மவாதம் பேசும் மூடர்கள் பிராமணர் எனப்படுவர் என்ற கருத்தில் பிராமணரைக் குறிப்பிடுகின்றார். இந்த மூடர்கள்தான் பரன் உண்மையைக் கொண்டு ஒழுகும் வேளாளர்களையும், வணிகர்களையும் சூத்திரர் (தாழ்ந்தவர்கள்) என்ற சொல்லால் குறிப்பிட்டு வழங்கினர்.

பிராமணர்களால் தாழ்ந்தகுலம் எனக் குறிப்பிடப்படும் பிரிவினரை அவர்கள் தாழ்ந்த குலத்தவர் அல்லர் எனக்கூறி பிராமணர் கூற்றை மறுத்தும் மாற்றியும் சொல்ல வேண்டும் என்ற நோக்கத்தில் சேக்கிழார் சூத்திரர் எனச் சொல்லப்படும் நல்ல குலம் எனப்பேசுகிறார். பேராசிரியர் குறிப்பிடும் மனப் புழுக்கத்தின் தாக்கமே இது என்பதில் ஐயமில்லை.

சைவசமயம் என்ற குடையின்கீழ் தங்கும்போது சாதி என்னும் வெயில் தாக்காது தாக்கக்கூடாது. இந்தக் கொள்கையில் உறுதியாக நிற்கும் சேக்கிழார், பிறப்பால் உயர்ந்தவர்கள் என்போர் தங்களுக்கு இட்டு மகிழும் பட்டப் பெயர்களைக் குறிப்பாக 'ஐயர்' என்னும் பெயரினைப் பிறப்பால் தாழ்த்தப்பட்டவர்கள் என ஒதுக்கிவைக்கப்பட்டவர்களுக்குச் சூட்டி மகிழ்கின்றார்.

பிறப்பால் தாழ்ந்த குலத்தினரான திருநீலகண்ட யாழ்ப்பாணரைப் பிறப்பால் உயர்ந்த குலம் எனப்பட்ட சம்பந்தரைக் கொண்டு "ஐயரே" என அழைக்கச் செய்கின்றார்.

தில்லை அந்தணர்களைக் கொண்டு புலையனான நந்தனை "ஐயரே" என அழைக்கச் செய்து மகிழ்கிறார்.

வேடர் குலத்தவரான கண்ணப்பரைத் தாமே "ஐயர்" என்று சொல்லி மகிழ்கின்றார்.

சேக்கிழாரின் இந்தச் செயல்பாட்டிலிருந்து என்ன தெரிகிறது? வருணாசிரமிகள் என ம.ரா.போ. குறிப்பிடும் பிராமணர்களோடு சூத்திரர்கள் அதாவது வேளாளர்கள் ஐக்கிய முன்னணி அமைக்கவில்லை என்பது தெரிகிறது. ஆனால் பிராமணர்களோடு வேளாளர்கள் ஐக்கியமுன்னணி அமைத்தார்கள் என்கிறார் ம.ரா.போ. இது விந்தையே!

யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுகநாவலர் தமது பெரியபுராண உரைநடை நூலுக்கு முன்னுரை எழுதும்போது "ஸ்மார்த்த பிராமணர்கள் சைவசித்தாந்திகட்கு முதல் எதிரிகள்" என எடுத்த எடுப்பிலேயே எழுதிச் செல்வதைப் பார்க்கும்போது சிவபரம் பொருளைத் தலைவராகக் கொண்டுள்ள வேளாளர்கள், பிராமணர்களோடு எக்காலத்திலும் கூட்டணி வைத்ததில்லை வைப்பதில்லை என்பது நன்கு புலப்படும்.

பெரியபுராணத்தில் குறிக்கப்பெறும் ஞானசம்பந்தர் உள்ளிட்ட பன்னிரண்டு பேரும் திருமூலர் குறிப்பிடும் பிராமணர்களில் அடங்கமாட்டார்கள். அவர்கள் அந்தணர்கள், அவர்கள் அத்தனைபேரும் சாதி வேறுபாடு பார்த்ததே இல்லை. சான்றுக்கு இரண்டு இடங்கள்.

பெரியபுராணத்தில் குறிக்கப்பெறும் ஞானசம்பந்தர் உள்ளிட்ட பன்னிரண்டுபேரும் திருமூலர் குறிப்பிடும் பிராமணர்களில் அடங்கமாட்டார்கள். அவர்கள் அந்தணர்கள், அவர்கள் அத்தனைபேரும் சாதி வேறுபாடு பார்த்ததே இல்லை.

திருநீலநக்கர் அந்தணர். அவரை அழைத்து நீலகண்டப் பெரும்பாணர் (இவர் தாழ்த்தப்பட்ட குலத்தினர்) தங்க ஓர் இடம் தந்து அருளுவீர்! எனச் சம்பந்தர் சொல்ல, தமது வீட்டின் நடுவில் இருக்கும் முத்தீ வேதியின் பக்கம் பாணனார் பள்ளிகொள்ள இடம் தருகின்றார் நீலநக்கர். (வேதியின் பக்கம் யாரும் படுக்கமாட்டார்கள்)

தனது மனைவியுடன் பாணனார் குண்டத்தின் அருகில் செல்லும்போது வேதித்தீ வலம் சுழித்து ஓங்கி ஒளிரக் கண்ட நீலநக்கர், மட்டற்ற மகிழ்ச்சி கொண்டார். தீ வலம் சுழித்து வளர்ந்து எழுந்தது; நீலநக்கர் செயல் மிகவும் சரியானதே! என ஈசன் ஏற்றுக்கொண்டதற்கு அடையாளமாகும். பாணனாரும் பாணினியாரும் அங்கே பள்ளி கொண்டனர்.

அந்தணராகிய நமிநந்தி, திருவாரூர் பெருமான் திருமணலிக்கு எழுந்தருளியபோது சேவிக்கச் சென்றார். முன்னிரவு வீடு திரும்பியவர் பெருமானை வழிபட எல்லாச் சாதியினரும் வந்திருந்ததால் தன்னை இழிவு தொடங்கிற்று (தீட்டுத் தொடங்கியது) எனக் கருதி வீட்டுக்குள் செல்லாமல் வெளித் திண்ணையிலேயே படுத்துவிட்டார்.

நமிநந்தியார் கனவில் எழுந்தருளிய வீதிவிடங்கப் பெருமான், "ஆரூர் பிறந்தார் எல்லாரும் நங்கணங்கள்" எனச் சொல்லியருள விடியலில் புறப்பட்டுத் திருவாரூர் சென்றார் நமிநந்தி. திருவாரூர் எல்லையை மிதித்தபோது எல்லா உயிரினங்களும் சிவகணங்களாகக் காட்சியளிக்க, உச்சிமீது கைகுவித்துத் தரையில் விழுந்து வணங்கினார்.

இந்த இரண்டு அந்தணர்கள் வரலாற்றிலிருந்து சேக்கிழார் நமக்கு என்ன செய்தி சொல்கிறார்? அந்தணர் ஆயினும், அரசராயினும், ஆதீனத் தலைவராயினும், சாதாரணக் குடியினராயினும் சைவ சமயத்தவர் என்றால் அங்கே சாதிப் பிரிவு பார்க்கக் கூடாது என்கின்ற சைவ சமயக் கொள்கையைச் சொல்கிறார். இதனைச் சைவர் அனைவரும் உள்ளத்தில் கொள்ள வேண்டும்.

## தத்துவ எதிர்ப்பு தனிமனித எதிர்ப்பாகாது

பிராமணர்கள், சைவ சித்தாந்திகளுக்கு எதிரிகள் எனக் குறிப்பிடுவது அவர்களுடைய பிறப்பின் சார்புபற்றியன்று என்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும். பிராமணர்கள், சமூகத்தில் பெற்றுள்ள பெற்றிருந்த நிலைக்கும் சமயக்

கொள்கைக்குமிடையே உள்ள வேறுபாட்டை விளங்கிக்கொள்ள வேண்டும்.

வேதத்திற்கு அவர்கள் தரும் விளக்கத்திற்கும், சைவர்கள் தரும் விளக்கத்திற்கும், கடவுள் கொள்கையில் அவர்கள் கொண்டிருக்கும் நிலைப்பாட்டிற்கும், சைவர்கள் கொண்டுள்ள நிலைப்பாட்டிற்கும் இடையேயான தத்துவங்களில்தான் அவர்கள் எதிரியே தவிர வேறு வகையில் அன்று என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

வேதத்திற்கு அவர்கள் தரும் விளக்கத்திற்கும், சைவர்கள் தரும் விளக்கத்திற்கும், கடவுள் கொள்கையில் அவர்கள் கொண்டிருக்கும் நிலைப்பாட்டிற்கும், சைவர்கள் கொண்டுள்ள நிலைப் பாட்டிற்கும் இடையேயான தத்துவங்களில்தான் அவர்கள் எதிரியே தவிர வேறு வகையில் அன்று என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

"சைவம் சிவனுடன் சம்பந்தமாவது" என்பது திருமூலர் திருவாக்கு. சிவபரம் பொருளைத் தலைவனாக ஏற்றுக்கொண்டு வாழ்க்கையை அமைத்துக்கொண்ட அத்தனைப் பிராமணர் களும் சைவர்களே. அவர்களே அந்தணராவார். இந்த அந்தணர்கள் சைவ சமய நாயன்மார்களாகத் திகழும் திறத்தைப் பெரியபுராணம் கொண்டு அறியலாம். அவருள்ளும் திருஞானசம்பந்தரை நமது சைவ சமயம் முதல் குரவராகத் தலைமேல் கொண்டு போற்றுவதை அனைவரும் அறிவர்.

திருஞானசம்பந்தர் வேதங்களைக் கொண்டாடும் வேதியர் குலத்தோன்றல், வேள்விக்கு இவர் அவதரித்த குலம் தலையாய இடம் தரும். தலையாய இடத்தை இவர் குலம் தந்தாலும், பிற வேதியர்கள் போன்று நாராயணன், இரணிய கருப்பன், இந்திரன், அங்கி, சூரியன் முதலியோருக்கு முதலிடம் தராமல் சிவன் ஒருவனையே இவர் குலத்தவர் முதன்மைப்படுத்துவர்.

## மொழி மேலாண்மை

சிவஞான முனிவர் சமஸ்கிருத மொழியைக் கற்றதால், அம்மொழியில் ஆக்கப்பட்டுள்ள வேதத்தை அறிந்திருந்ததால், தமிழ் வாழ்வை அதாவது சமய வாழ்வைக் கெடுத்தாரா? இல்லையா? என்பது பற்றிக் கவனிப்போம். 'சைவம் சிவனுடன் சம்பந்தமாவது' என்னும் திருமூலர் திருவாக்கை மீண்டும் நினைவில் கொள்வோம்.

சைவம் எந்த மொழியுடனும், எந்த இனத்துடனும், எந்த நாட்டினுடனும் சம்பந்தமாவதன்று. எந்த மொழி, எந்த இனம், எந்த நாடு சிவ பரம்பொருளை ஏற்றுப் போற்றுகிறதோ, அங்கே சைவம் சம்பந்தமாகிறது. தென்னாட்டில் சிவன் போற்றப்பட்டால் அவன் தென்னாடுடைய சிவனாகக் கொள்ளப்படுகிறான். மலை நாட்டில் போற்றப்பட்டால் மலை நாடுடைய சிவனாகிறான். அமெரிக்காவில் போற்றப்பட்டால் அமெரிக்க நாடுடைய சிவனாகிறான். அவ்வளவே. இந்த அளவுகோல் உலகில் உள்ள அனைத்து மதங்களுக்கும் பொருந்தும்.

தமிழ் வாழ்வு என்பதில் தமிழர்களின் மொழி, பண்பாடு, அரசியல், நாகரிகம், வீரம், காதல், கலை, சமயம் முதலான இன்ன பிறவும் அடங்கும். இங்கே சிவஞான முனிவரைப் பொறுத்தமட்டில் தமிழர்கள் பண்டைக் காலம் தொட்டுப் போற்றிப் பாதுகாத்து வரும் சைவம், வைணவம் ஆகிய இரண்டு சமயங்களில் சைவ சமயத்தையே சார்ந்தவர் என்பதும், அவர் சமய உணர்வில் மட்டுமே தலைப்பட்டவர் என்பதனையும் நினைவில் கொண்டு அவரை அணுக வேண்டும். வேறு இலக்கண இலக்கிய செய்திகளைக் கொண்டு அவரை அணுகிக் குழப்பக்கூடாது. மகாகவி பாரதி போன்று சிவஞான முனிவர் திகழவில்லையே எனக்கூறி வருத்தப்படக்கூடாது. குற்றம் சுமத்தக்கூடாது.

சிவஞான முனிவர் தாம் சார்ந்த சைவ சமயத்தை வளர்த்து மேலோங்கச் செய்ய அவரது சொந்த மொழியாகிய தமிழையும்,

பேராசிரியர் கருத்துப்படி வந்த மொழியாகிய சமஸ்கிருதத்தையும் (சமஸ்கிருதம் வந்த மொழியன்று: அதுவும் நமது சொந்த மொழியே எனக் கூறுபவர்களும் உண்டு) கசடறக் கற்றவராவார்.

நமது பேராசிரியரோ, "சமஸ்கிருத மேலாண்மையை வேறு வழியில்லாமல் ஏற்றுக்கொண்டு" என்கிறார். இந்தக் கருத்தை எந்த எண்ணத்தில் வெளிப்படுத்துகிறார் என்பது புலப்படவில்லை. எனினும் அவர் எழுத்துப் பற்றிச் சிந்திப்போம்.

ஒருமொழியை வயிற்றுப்பாட்டிற்காக அதாவது பிழைப்பிற்காக கற்பதை "வேறு வழியில்லாமல்" என்னும் வகையுள் அடக்கலாம். நாம் இன்றுவரை ஆங்கில மொழிக்கு அடங்கிக்கிடப்பதை இதற்குச் சான்றாக்கலாம்.

மேலாண்மை என்பது ஒருவர் ஒருவரை அடக்கி நிற்பதாகும். ஒருமொழி அரசாங்க மொழியாக ஆக்கப்பட்டு அதுவே ஆட்சி மொழி, பிறமொழிகளெல்லாம் அதற்குள் அடக்கம் என்றால் அது மொழி மேலாண்மை.

சமஸ்கிருத மொழி நமது பாரதநாட்டில் எந்தக் காலத்திலும் ஆட்சி மொழியாக இருந்ததில்லை. சொல்லப் போனால் அது பேச்சுமொழியாகக்கூட இருக்கவில்லை. ஆதலால் அது மற்ற மொழிகளை அடக்கி ஆள்வது எனச் சொல்வதற்கில்லை. மாறாக மற்ற மொழிகள் அதனை ஏற்றுக்கொண்டன. மேலும் அதனை நமது தமிழர்கள் வயிறு வளர்க்க கற்கவில்லை. மொழியின் சிறப்பு நோக்கியே கற்றுள்ளனர். இன்னும் சொல்லப்போனால் சமஸ்கிருதம் தமிழோடு கலக்கும்போது இந்த வகையில் கலக்க வேண்டும் என வரையறையும் செய்தனர்.

சிவஞானமுனிவர் தாம் வயிறு பிழைக்கவோ, ஆட்சிக்கு அடங்கியோ சமஸ்கிருதத்தைக் கற்றார் எனக்கூற முடியாது.

அந்த மொழியின் செம்மை கருதியும், அருமை கருதியும் வேதங்களும் ஆகமங்களும் அந்த மொழியின்பாற்பட்டே இருப்பது கருதியும் ஒருவர் தாம் சார்ந்த சமயத்தின் தத்துவத்தை நிலைநாட்ட அந்தக் காலத்தில் வேதங்களையே அளவு கோலாகக் கொண்டது கருதியும் சமஸ்கிருதத்தைக் கசடறக் கற்றார் எனக்கொள்வதே ஏற்புடையதாகும். இனி வேதம் பற்றிச் சுருக்கமாகக் காண்போம்.

> சிவஞானமுனிவர் தாம் வயிறு பிழைக்கவோ, ஆட்சிக்கு அடங்கியோ சமஸ்கிருதத்தைக் கற்றார் எனக்கூற முடியாது. அந்த மொழியின் செம்மை கருதியும், அருமை கருதியும் வேதங்களும் ஆகமங்களும் அந்த மொழியின்பாற்பட்டே இருப்பது கருதியும் ஒருவர் தாம் சார்ந்த சமயத்தின் தத்துவத்தை நிலைநாட்ட அந்தக் காலத்தில் வேதங்களையே அளவு கோலாகக் கொண்டது கருதியும் சமஸ்கிருதத்தைக் கசடறக் கற்றார் எனக்கொள்வதே ஏற்புடையதாகும்.

## வேதம்

வேதம் என்பது கருமகாண்டமாகும். இது வேத முதல்வனை (வேத முதல்வன் யார்? என்பது கொள்வோர் கொள்கையைப் பற்றியது) ஆராதிக்கும் யாக யக்ஞ கர்மங்களைச் (வழிகளை) சொல்லுகிறது–

வேதாந்தம் என்பது ஞான காண்டமாகும். இது வேத முதல்வனைப் பற்றி விளக்குகிறது. (முதல்வனைப் பற்றிய விளக்கம் அவரவர் கொள்கைக்குத்தக அமையும்).

ஆகவே வேதம் அவரவர் கொள்கைப்படி கொள்ளும் இறைவனை ஆராதிக்கும் வழிகளைக் கருமகாண்டமாகக் கூறிவிட்டு, ஆராதிக்கப்படுபவனாகிய இறைவனைப்பற்றி ஞானகாண்டமாக உபநிடதங்களில் கூறுகிறது.

வேதம் என்பதற்கு "அர்த்தலாபசாதனம்" என்று வேதத்திலேயே அதற்கான பொருள் கூறப்பட்டுள்ளது. இந்த சமஸ்கிருத வாசகத்திற்கு, "வேண்டிய பொருளை அடைவதற்கான கருவி" எனப் பொருள் கூறுவர். அதாவது கைவசப்பட்டதையும் இனி கைவசப்பட வேண்டியதையும், ஐம்புலனுக்கு அகப்படுவதையும் அப்புலன்களுக்கு

அப்பாற்பட்டதையும் அடைவதற்கான கருவி எனத் தெரிவிக்கின்றது.

உபநிடதம்: வேதச் சிந்தனையின் இறுதி முடிவாக விடிந்திருப்பதே உபநிடதம் என்றும், உபநிடதக் கருத்துக்கள் என்றும் சொல்லப்படுகிறது. ஆதலால் இதனை வேதத்தின் 'வைரமுடி' என்பர். வழிபடப்படும் பரமாத்மாவைப் பற்றியும், அவரை அடைவது பற்றியும் கூறுகிறது. அதுவே இறுதி நிலையான வீடுபேறுபற்றியும் கூறுகிறது. இந்த வீடுபேறு பற்றிச் சமயவாதிகள் பலவாறு விளக்கம் தருவர்.

'உபநிடதம்' என்ற சொல்லுக்கு அருகில் இருந்து கேட்கும் அல்லது சொல்லும் ஞானம் என்பது பொருளாகச் சொல்லப்படுகிறது. இந்த ஞானத்தால் இறைவனுக்கு அருகில் செல்ல முடியும் என்பதே இதன் ஒப்பற்ற தன்மையாகும்.

வைதிக மதத்தை நிறுவ முற்படும் ஒருவர், பலவாகப் பரந்துபட்டுக் கிடக்கும் உபநிடதங்களில் (எண்ணிறந்த புனித வேதம் என்கிறார் சேக்கிழார்) மிக முக்கியமானவை எனக் கருதப்படுபவற்றிக்குத் தம் கொள்கைக்கு ஏற்ப விளக்கவுரை இயம்பினால் போதும், அவர் தம் கொள்கையை நிறுவினார் என்பதாகக் கொள்ளப்படும். இதுவே வேதசாரம்.

இந்த அடிப்படையில் உபநிடதங்களுக்கு விளக்கம் கூறித் தத்தம் கொள்கைகளை நிறுவியவர்களில் சங்கரர், இராமானுசர், மத்வர், வல்லபர், பாஸ்கரர், வேதாந்த தேசிகர், நீலகண்டர் என்போர் முக்கியமானவர்களாகவர்.

இங்கே குறிக்கப்பட்டுள்ள சமயச் சான்றோர்கள் சமஸ்கிருதத்தில் கரைகண்டவர்கள். இவர்களுக்குச் சற்றும் குறையாத நிலையில் சமஸ்கிருதத்தைப் பழுதறக் கற்ற தால்தான் நமது மாதவச் சிவஞானமுனிவர், மேற்கண்ட வர்களின் கொள்கைகளை மறுத்து, வேதம் என்னும் மரத்தின் உச்சியில் (உபநிடத்தில்) பழுத்த சைவசித்தாந்தம் என்னும் ஆரா இன்ப அருங்கனி பிழிந்து அதன்

தேன் ஒத்த சாறு வழங்கி உபகரித்தார். "மிண்டிய மாயா வாதம்" என நமது மாணிக்கவாசகரால் குறிக்கப்படும் ஏகான்மவாதம் என்னும் கொள்கை, நமது முனிவர் பெருமானால் தக்க சான்றுகளுடன் மறுக்கப்பட்டுள்ளதை அவர் நூல் கற்றார் அன்றி மற்றையோர் அறியார்.

சைவப் பயிரை வேத வேலி கட்டிக் காப்பாற்றிய சிவஞான முனிவரை, அவர் கற்ற சமஸ்கிருத மொழிகொண்டும், பிறந்த குலம் கொண்டும் வேறு வகையாகப் பார்ப்பது தக்கதன்றாம்.

> சைவப் பயிரை வேத வேலிகட்டிக் காப்பாற்றிய சிவஞான முனிவரை, அவர் கற்ற சமஸ்கிருத மொழிகொண்டும், பிறந்த குலம் கொண்டும் வேறு வகையாகப் பார்ப்பது தக்கதன்றாம்.

## நம்மாழ்வார்

வைணவ சமயத்தின் ஆழ்வார்கள் பன்னிருவரில் நம்மாழ்வரை "உயிர்" என்றும் மற்றைய ஆழ்வார்களை 'உடல்' என்றும் கூறுவார்கள். நம்மாழ்வார் இயற்றிய நான்கு பிரபந்தங்களும் "நான்கு வேதங்களின் சாரம்" என்பர்.

வில்லிப்புத்தூரார் இவரைச் "சதுர் மறைப் புரோகிதர்" என்பார். "வேதம் தமிழ் செய்த மாறன்" என வைணவ சமயத்தினர் இவரைக் கொண்டாடுவர். இப்பேர்ப்பட்ட பெருமைக்குரிய நம்மாழ்வார் வேளாளர். இவர் வடமொழியில் வல்லவர் என்பதால் தமிழ் வாழ்வைக் கெடுத்துவிட்டார் எனக் கூறமுடியுமா? இப்படிச் சொன்னால் வைணவ உலகம் வாளா இருக்குமா? நம்மாழ்வாரின் வடமொழி ஆற்றல் தமிழ் வாழ்வைத் தாங்கி நிற்கின்றது என்பதுதானே அறிஞர் முடிபு.

## சுவாமி சித்பவானந்தர்

"தமிழைத் தென்மொழியென்றும் சமஸ்கிருதத்தை வடமொழி என்றும் பகர்வது வழக்கம். தென்னாட்டிலிருக்கும் திராவிட பாஷைகளுக்கெல்லாம் அடிப்படையானது தமிழ். ஆதலால் அதற்கு அப்பெயர் வழங்குகின்றது. வடநாட்டில் இருக்கும் பாஷைகளுக்கெல்லாம் மூல மொழியாயிருப்பது சமஸ்கிருதம். அதை முன்னிட்டு அது வடமொழி எனப்படுகிறது. ஆயினும்

திராவிட மொழிகளிலும் அது வேண்டியவாறு இடம்பெற்றிருக்கிறது. மிகக்குறைந்த அளவில் சமஸ்கிருதப் பதங்களைப் பிரயோகிப்பது தமிழ் ஒன்றே. அதை ஒதுக்கி வைக்கும் மனப்பான்மை நூலோர்களிடத்து ஒருபொழுதும் இருந்ததில்லை; ஒதுக்கிவைக்கவும் முடியாது."

"சமஸ்கிருதத்தில் ஐம்பத்தோர் எழுத்துக்கள் இருக்கின்றன. ஆதலால் உலகத்தில் உள்ள பாஷைகள் அனைத்தின் ஓசைகளை உள்ளபடி உச்சரிக்க சமஸ்கிருதம் கற்றவனுக்கு இயலுகிறது."

"கற்றவர்களுக்கு உதவுவது போன்று மற்றவர்களுக்குச் சமஸ்கிருதம் உதவாது. கசடறக் கற்றவர்கள் யாண்டும் மிகச் சிலரே. காஷ்மீரத்திலிருந்து கன்னியாகுமரி வரையில் அகில பாரதத்திற்கும் பல்லாயிரம் ஆண்டுகளாக சமஸ்கிருதம் பொது மொழியாக இருந்து வந்தது."

"பழைய சாஸ்திரங்கள் பல சமஸ்கிருதத்தில் புதைந்து கிடக்கின்றன. ஆறு சமயங்களுக்கும் உரிய சாஸ்திரங்கள் அதில் அமைக்கப்பெற்றிருக்கின்றன. ஆகமங்கள் ஆனதும் அதே மொழியிலாம்." (பக்கம் 32 – 35; திருவாசகம் முகவுரை– சுவாமி சித்பவானந்தர்)

இவ்வாறு சமஸ்கிருத மொழியின் பெருமையினைப் பலபடக்கூறி சைவ சமய தோத்திர நூலாகிய திருவாசகத்திற்கு வேத உச்சியாகிய உபநிட மந்திரங்களைக் கொண்டு விளக்கம் சொல்லும் சுவாமி சித்பவானந்தர், தமிழ் வாழ்வைக் கெடுத்துவிட்டார் என்றும், சமஸ்கிருத மேலாண்மையைப் பிழைப்பிற்காக வேறு வழியின்றி ஏற்றுக்கொண்டார் என்றும் கூற முடியுமா? சுவாமி சித்பவானந்தர் பிறந்த கவுண்டர் சாதியைக் குறிப்பிட்டு அச்சாதி, தமிழ் வாழ்வைக் கெடுத்துவிட்டது எனக் கூறமுடியுமா?

சுவாமி சித்பவானந்தர் பிறந்த கவுண்டர் சாதியைக் குறிப்பிட்டு அச்சாதி, தமிழ் வாழ்வைக் கெடுத்துவிட்டது எனக் கூறமுடியுமா? அவ்வாறு சொன்னால் கூறினால் சான்றோர் ஒப்புவார்களா? கோவை கோபப்படாதா?

அவ்வாறு சொன்னால் கூறினால் சான்றோர் ஒப்புவார்களா? கோவை கோபப்படாதா?

நம்மாழ்வாரும், சிவஞான முனிவரும், சுவாமி சித்பவானந்தரும் நமது போற்று தலுக்கும் வணக்கத்துக்கும் உரிய குருமார்கள். அவர்களுக்கு வடமொழியும், தென் மொழியும், சமய ஞானமும் கைவரப்பெற்றிருந்தன. அவர்களுடைய அஃகி அகன்ற ஞானத்தைப் போற்ற வேண்டுமே தவிர குறுகிய கண்கொண்டு பார்க்கக்கூடாது.

அதிலும் சைவப் பரம்பரையில் வந்தவர் எனத் தன்னைக் கூறிக்கொள்ளும் ம.ரா.போ. அவர்கள், சாதிக்கண் கொண்டு பார்ப்பது கூடவே கூடாது. இவ்வாறு பார்ப்பது வருத்தத்தைத் தருகின்றது. இத்தகையப் போக்குத் தமிழ் வாழ்விற்கு நன்மை பயக்காது. மாறாகத் தீமையையே தரும்.

சைவப் பரம்பரையில் வந்தவர் எனத் தன்னைக் கூறிக்கொள்ளும் ம.ரா.போ. அவர்கள், சாதிக்கண் கொண்டு பார்ப்பது கூடவே கூடாது. இவ்வாறு பார்ப்பது வருத்தத்தைத் தருகின்றது. இத்தகையப் போக்குத் தமிழ் வாழ்விற்கு நன்மை பயக்காது. மாறாகத் தீமையையே தரும்.

## நண்பர் கருத்தும் நமது எண்ணமும்

'சொந்த மொழியும் வந்த மொழியும்' என்னும் தலைப்பிலான கட்டுரை முழுதும் ஆதாரங்கள் அற்ற ஒன்றாகும். வேளாளர்கள் மற்றும் பிராமணர்கள்மீது கொண்டு வெறுப்பாலும், சமஸ் கிருத மொழி யின்மீது கொண்ட பகையாலும் எழுதப் பட்டது. ஆதலால், இதன்மீது ஆராய்ச்சி அநாவசியம். இதற்குச் செலவிடும் நேரத்திற்கு வேறு வேலைகள் பார்க்கலாம் என்றார் என்னுடைய கற்றறி நண்பர் ஒருவர். இக்கூற்று அவர் அறிவிற்குப் பொருத்தமேயாம். எனினும் கட்டுரைச் செய்திகள் போலியானவை என்பதை அறியும் திறம் இல்லாதவரெல்லாம் அவற்றை மெய்யெனக் கருதி மயங்குவர். ஏனெனில், எழுதி இருப்பவர் சிறந்த பேராசிரியர். குன்றக்குடி ஆதீனம் உள்ளிட்டு வேளாளர்களைத் தலைவராகக் கொண்டுவரும் பீடங்கள் சமுதாய சமயப் பிழைகள் செய்து தமிழ்வாழ்வைக் கெடுத்தன என நம்புவர். 'தீண்டப்படாத குலம்' என்ற ஒன்றை இவர்கள் உண்டாக்கினர்

என உறுதிகொள்வர். 'பீடாதிபதிகள் தமிழுக்குப் பகையானவர்கள்' என எண்ணுவர். சேக்கிழார் திராவிடச் சிவனை, ஆரியச் சிவனாக மாற்றிவிட்டார் என்னும் பேராசிரியரின் 'அற்புதக் கண்டுபிடிப்பை' எண்ணி வியப்பர்.

இவற்றையெல்லாம் மனத்தில் கொண்டு "அரவின் குட்டி சிறிதாயினும் பெருங்கோல் கொண்டு அடித்தல் வேண்டும்" என்னும் பழமொழிக்கிணங்க பேராசிரியர் கட்டுரைச் செய்திகள் ஆய்வு செய்யப்படுகின்றன. வேறு எந்த தனிப்பட்ட பகையோ, நோக்கமோ கிடையாது. இனிக் கட்டுரையின் முதல் பகுதியைப் பார்ப்போம்.

*"அன்பிற் பெருகிய சிறப்பின் மிக்க*
*அருச்சனை பாட்டே யாகும்."*

என்று சொன்னதோடு,

*"ஆதலால் மண்மேல் நம்மைச்*
*சொற்றமிழ் பாடுக!"*

என்று சிவபெருமான் அருளினார். ஒருவேளை இந்தச் சிவபிரான் 'திராவிடச் சிவனோ' என்று ஐயப்பட்டுவிடக்கூடாதே! 'தமிழில் பாடு' என்று கட்டளையிட்ட சிவபிரானைத் 'தூ(ய) மறைபாடும் வாயார்' என்று விளக்குகிறார் சேக்கிழார்.

வேதத்தையேபாடுகின்றசிவபெருமான்ஆதிசைவப்பிராமணருக்கு இடுகின்ற கட்டளை 'அருச்சனை என்பது பாட்டுத்தான்; ஆதலால் புகழ்மிக்க தமிழிலே பாடுக!' என்பது.

ஒருவேளை அருச்சனைச் சடங்குக்கு மட்டும் தமிழ்ப் பாட்டு இருக்கலாமோ? என்று ஐயப்படவேண்டாம். 'எந்தச் சடங்காக இருந்தாலும் சமஸ்கிருதம்தான்' என்று பீடாதிபதிகள் ஓதியருளுவார்கள், இவ்வாறு எழுதிய பேராசிரியர் "இப்பகுதியை முடிக்கும்போது சிவக்கவிமணி அவர்களின் விளக்கம் தமிழ் வழிபாட்டுக்கே ஆதரவாக இருப்பதை உணரலாம்" என முடிக்கிறார்.

இனி இவர் கருத்தினை ஆய்வோம். தமிழில் பாடுக! எனப் பெருமான் இட்ட கட்டளைப் பற்றிப் பின்பு விரிவாக ஆராய்வோம்.

## வேத வேதியர் சிவ வேதியர்

சைவத் தமிழ் மக்களுக்குப் பெரியபுராணம் என்னும் நூல் உயிர்போன்றது. இந்நூலைத் தெய்வச் சேக்கிழார் இயற்றியருளிச் செய்யாதிருந்தால் தேவாரம் என்னும் தமிழ் மறையின் வரலாறும், பொருளும் புலப்படுவது அரிதாகப் போயிருக்கும். மூவர் தேவாரப் பாடல்களுக்குச் சேக்கிழார் சொல்லிச் செல்லும் விளக்கங்கள் அறிந்து இன்புறத்தக்கன. பெரிய புராணத்துள் தமிழர்களின் பழக்க வழக்கங்கள், மரபுகள் போற்றப்படும் மாண்பு, எண்ணி எண்ணி வியக்கத்தக்க தொன்றாகும். படிமுறையில் பெரியபுராணம் பன்னிரண்டாவது. இந்தப் பன்னிரண்டாவது படியில் ஏறியே மற்றப் படிகளுக்குச் செல்ல வேண்டும். இதுவே நமது திருமுறைகளுக்கு அடித்தளமானது. இவ்வடித்தளம் இல்லையேல் மேல் தளத்தை நாம் அடைய முடியாது; பார்க்க முடியாது. ஏற்கெனவே பார்த்துவந்தபடி நமது சேக்கிழார் பிராமணர் என்ற சொல்லை ஆளவில்லை. அதற்கான காரணத்தையும் கண்டு வந்தோம். 63 தனியடியார்கள் 9 தொகையடியார்களைப் பற்றிய வரலாறே பெரியபுராணம். இந்த 63 தனியடியார்களில் 12 பேர் இப்போது நாம் கூறிவருகின்ற சொல்லால் சுட்டினால் பிராமணர்கள்: 1. கலயர்; 2. முருகர்; 3. பசுபதியார்; 4. சிறப்புலியார்; 5. கணநாதர்; 6. பூசலார்; 7. சண்டேசர்; 8. சோமாசிமாறர்; 9. நமிநந்தி; 10. சம்பந்தர்; 11. அப்பூதி; 12. நீலநக்கர். தில்லைவாழ் அந்தணர் தொகையடியார்களில் ஒருவர். இங்கே குறிக்கப்பட்டுள்ள பதின்மூவரும் வேத வேள்வி செய்யும் வேதியர் குலத் தோன்றல்கள்; மற்ற பிராமணர்களுக்கும் இவர்களுக்கும் உள்ள அடிப்படை வேறுபாடு, இவர்கள் சிவபரம்பொருளைத் தலைவனாக ஏற்றுக்கொண்டதே. இவர்கள் வேள்வித் தலைவன் சிவபிரானே. இந்த நாயன்மார்களைக் குறிப்பிடும்போது மட்டுமே அந்தணர், மறையோர், வேதியர், மறை, வேதம், வேள்வி என்பனவாகிய மொழிகளைச் சேக்கிழார் கையாளுகின்றார்.

சுந்தரமூர்த்தி சுவாமிகளைக் குறிப்பிடும்போது வேதியர் குலத்துள் தோன்றியவர் என்றும், மறையில் சொல்லிய வண்ணம் பூணூல் அணிந்தவர் என்றும், இவருக்குப் பெண் எடுக்க நினைத்த குலம் பற்றிக் கூறும்போது, சைவ அந்தணர் குலம் என்றும், மறையோன் (அதாவது வேதம் படித்தவர்) என்றும் சொற்களைப் பயன்படுத்தும் சேக்கிழார், இவர் 'வேள்வி செய்யும் வேதியர் குலத்துள் உதித்தவர்' என்று சொல்லவில்லை.

மேலே குறிக்கப்பெற்றுள்ள பதின்மூன்று அந்தணர்கள் வேள்வி செய்யும் வேதியர் குலத்துள் தோன்றியவர்கள். இவர் வேள்வி செய்யாத, ஆனால் வேதத்தைப் போற்றும் குலத்துள் தோன்றியவர் என்பதைச் சேக்கிழார் தெளிவுபடுத்துகிறார். அதாவது இவர் குலம் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் தானங்களில், அவனுக்கான அர்ச்சனைகள் செய்யும் குலம் என்பதைக் குறிப்பிடுகின்றார். இக்கால வழக்கில் குருக்கள். அக்கால வழக்கில் ஆதிசைவர்.

ஞானசம்பந்தர் உள்ளிட்ட பன்னிருவரும் திருக்கோயிலுக்குச் சென்று பூவும் புனலும் இட்டு வழிபாடாற்றும் அர்ச்சகர் மரபினர் அல்லர். வேள்வி வாயிலாகவே அவர்கள் வழிபாடு நடக்கும். அவர்கள் வேள்வி திருக்கோயிலைச் சார்ந்திருக்கவில்லை. வேள்விக்கெனத் தனியே குறிக்கப்படும் இடங்களிலேயே நடந்துள்ளது. வீட்டில் அவர்கள் வைத்து வளர்க்கும் முத்தீ வேள்வித் தீயாகும். இவர்களை வேத வேதியர் என்பர்.

சுந்தரர் குலம், அர்ச்சகர் குலம் என்பதை அவர் அவதாரம் பற்றிச் சொல்லும்போது, எடுத்த எடுப்பிலேயே "மாதொரு பாகனார்க்கு வழிவழி அடிமை செய்யும் வேதியர் குலம்" எனத் தெளிவாகக் குறிப்பிடுகின்றார். இவர்களைச் சிவ வேதியர் என்பர்.

மேலே காட்டிய பன்னிருவரில் பலர் சிவபெருமானை வழிவழி வழிபட்டுவரும் குலத்தில் தோன்றியவர்கள் அல்லர். எனினும் அவர்கள் வேத வழக்கத்தை விட்டுவிட்டுச் சிவனைப் பற்றி நின்றதால்,

சிவ வேதியராயினர். சான்றுக்குச் சண்டேசுவரரைக் கொள்ளலாம்.

பெருமானுக்கு வழிவழி அடிமை செய்யும் சிவவேதியர் எத்தகையவர்? அவர்குலம் எப்படிப்பட்டது? என்பதனை "முப்போதும் திருமேனி தீண்டுவார் புராணம்" கொண்டு தெளிவாக அறியலாம்.

*"தெரிந்துணரின் முப்போதும் செல்காலம் நிகழ்காலம்*
*வருங்கால மானவற்றின் வழிவழியே திருத்தொண்டின்*
*விரும்பிய அர்ச்சனைகளில் சிவவேதியர்க்கே உரியனஅப்*
*பெருந்தகையர் குலப்பெருமை யாம்புகழும் பெற்றியதோ?"*

என்னும் சேக்கிழார் திருவாக்கில் அர்ச்சிக்கும் மறையோர் குலம் பற்றி நன்கறிய முடிகிறது.

அர்ச்சனை என்பது பூவும் புனலும் இட்டுத் தூபதீபம் எடுத்து இறைவனின் பெருமையை வழுத்தி வழிபடும் முழுமையான பூசனை முறையாகும். இதனைத்தான் "தாம் விரும்பும் உண்மையாவது பூசனை" என இறைவன் அம்மையிடம் சொல்லி அருளினான் எனச் சேக்கிழார் கூறுகிறார். இவ்வாறு வழிபடும் தன்மை பற்றியே இவர்களைச் சேக்கிழார் முதற்சைவர் அதாவது ஆதிசைவர் என்கிறார். பூசனை அருச்சனை இவை பற்றி விரிவாகப் பின்னர் காண்போம்.

அர்ச்சனை என்பது பூவும் புனலும் இட்டுத் தூபதீபம் எடுத்து இறைவனின் பெருமையை வழுத்தி வழிபடும் முழுமையான பூசனை முறையாகும். இதனைத்தான் "தாம் விரும்பும் உண்மையாவது பூசனை" என இறைவன் அம்மையிடம் சொல்லி அருளினான் எனச் சேக்கிழார் கூறுகிறார்.

இறைவனால் ஆட்கொள்ளப்பட்டபின்பு, 'திருத்துறையூர்' செல்லும் சுந்தரர் அவ்வூரில் எழுந்தருளியிருக்கும் ஈசனை, 'தவநெறிதந்தருள்' எனத் திருப்பதிகம் பாடி, அவனுடைய திருப்பாதம் மலர்கொண்டு போற்றிசைத்து வழிபட்டது அவரது அர்ச்சிக்கும் உரிமை பற்றியதேயாம். ஞான சம்பந்தரோ அப்பரோ சுந்தரர் போன்று திருமேனி தீண்டி வழிபட்டதாகச் சரித்திரம் இல்லை.

"சிவாசாரியர் குடியில் தோன்றி சிவாகமங்களைக் கற்காமலும், தீக்கை முதலியன செய்துகொள்ளாமலும், தீக்கை செய்துகொண்டு அதற்குரிய அநுட்டானங்களை முறையாகக் கடைபிடிக்காமல் இருந்து வருகின்றவர்கள் சிவாசாரியார் எனக் கூற முடியுமா? சைவ முறைப்படி பரார்த்தமாக மூர்த்தியைத் தீண்டுதற்குரிய தகுதி தருவதாகிய தீக்கை முதலான முறையாகப் பெற்றவர்கள் திருக்கோயிலில் செய்துகொள்ளலாம். இதுதான் தமிழகத்துத் திருக்கோயில் வழிபாட்டுப் பழைய நெறிமுறை. இதனை தீக்கை பெற்றுக் கொண்டவர்கள் அனைவரும் திருக்கோயில்களில் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற வழிபாட்டுக்கு உரியவர்கள் என்கிறார் நாவலர் என்று கருத்துரைக்கும் அடிகளாரின்" கருத்தில் இரண்டு கருத்துக்கள் இல்லை. அரசும் இதனைச் செய்ய முயற்சிக்கிறது. வரவேற்கத்தக்கது. ஆனால், அதேபோது தீக்கைத் தருபவர்கள் யார்? என்பதில் மிகுந்த கவனம் தேவை.

## திராவிடச் சிவன்

இனிவரும் செய்திகள் மிகுந்த கவனத்துக்குரியன. ஏனெனில் சைவர்களால் மிகவும் போற்றப்படும் சேக்கிழார் பற்றி நமது பேராசிரியரின் அணுகுமுறை எப்படி இருக்கிறது? என்பதைப் பற்றியதால் என்க.

சுந்தரரைத் தடுத்தாட்கொண்ட பிற்பாடு தம்மைச் 'சொற்றமிழ் பாடுக!' எனப் பணித்தார் ஈசன். இது நிகழ்ச்சி. இந்த நிகழ் வினைச் சொன்ன சேக்கிழார் சுந்தரரைப் பணித்த ஈசன் இப்படிப்பட்டவர் எனச் சொல்லுகிறார். எப்படிச் சொல்கிறார்? 'தூமறைபாடும் வாயார்' எனச் சொல்லுகிறார். இந்தத் தொடர் மொழிதான் நமது ம.ரா.போ. அவர்களை மிகவும் சங்கடப்படுத்துகிறது.

*சொற்றமிழ் பாடுக என்றார் சுடர்விடும் சோதிப் பெம்மான்*
*சொற்றமிழ் பாடுக என்றார் சொற்களை அறிந்த தூயோன்*
*சொற்றமிழ் பாடுக என்றார் தூதமிழ் பாடும் வாயார்*

என்பன போன்ற தொடர்களைக் கொண்டு செய்யுளை நிறைவு செய்யாமல் 'தூய வேதங்களைப் பாடும் வாயார்' என்று ஏன் சொல்ல வேண்டும்? என்ற கேள்வியை மனத்துள் கொண்டு சேக்கிழாரை அணுகுகிறார் பேராசிரியர். இந்தக் கேள்வியைக் கொண்டு சேக்கிழாரைப் பார்க்கும் பேராசிரியருக்கு என்ன நினைவுக்கு வருகின்றது? 'தூய மறை' என்றவுடன் அம்மறை வழங்கிவரும் மொழி நினைவுக்கு வருகின்றது. அது எந்த மொழி? சமஸ்கிருதம். 'சமஸ்கிருதம்' என்றவுடன் அந்த மொழிக்குரியவர்கள் எனப் பேராசிரியர் போன்று சிலர் நினைத்துக்கொண்டிருக்கும் ஆரியர் அவர் நினைவுக்கு வருகின்றனர். ஆரியர் என்பார் யார்? பார்ப்பனர் அல்லது பிராமணர் என்பது பேராசிரியர் எண்ணம், இந்தப் பிராமணர்களுக்குரிய வேதத்தைப் பாடும் வாயினை உடைய சிவன் தமிழால் சுந்தரரைப் பாடச் சொன்னான் என்பது கொண்டு அந்தச் சிவனை 'திராவிடச் சிவன்' (தமிழ்ச் சிவன்) என்று யாரும் நினைத்துவிடக் கூடாது. அவன் 'ஆரியச் சிவனே' என்பதை உறுதி செய்யவே சேக்கிழார் 'தூமறை பாடும் வாயார்' என்ற தொடரைப் பயன்படுத்தியுள்ளார் எனப் பேராசிரியர் கருதுகிறார்.

இந்தக் கருத்தினை உள்ளத்துள் கொண்டதால்தான் "ஒருவேளை இந்தச்சிவபிரான் திராவிடச்சிவனோ என்று ஐயப்பட்டுவிடக்கூடாதே" என்று எழுதுகிறார். அதாவது, சேக்கிழார் ஆரியச் சார்பானவர். அதனால்தான் 'தூமறை பாடும் வாயார்' என்னும் தொடரைக்கொண்டு செய்யுளை நிறைவு செய்கிறார் எனப் பேராசிரியர் எண்ணம் கொள்ளுகிறார். தமிழில் பாடு எனத் தமிழில் விருப்பம் கொண்டு கேட்ட 'தமிழ்ச் சிவனை' (பேராசிரியர் பிரயோகத்தில் திராவிடச் சிவன்) சேக்கிழார் ஒப்பாமல், அவனை 'ஆரியச்சிவன்' என்றே நமக்கு அடையாளம் காட்டுகிறார் என ம.ரா.போ. குறிக்கின்றார்.

எளியேன் அறிந்த வகையில் இதுவரை எந்த ஆசிரியரும் சிவபரம்பொருளை 'திராவிடச் சிவன்', 'ஆரியச் சிவன்' என்றும், சிவன் ஆரியச் சார்பானவன் என்றும் சொல்லியும் எழுதியும் கேட்டதில்லை. படித்ததில்லை.

எளியேன் அறிந்த வகையில் இதுவரை எந்த ஆசிரியரும் சிவபரம்பொருளை 'திராவிடச் சிவன்', 'ஆரியச் சிவன்' என்றும், சிவன் ஆரியச் சார்பானவன் என்றும் சொல்லியும் எழுதியும் கேட்டதில்லை. படித்ததில்லை. வடக்கே அமர்நாத், கேதார்நாத் தொடங்கி, தெற்கே இராமேஸ்வரம் வரையிலும், மேற்கே குஜராத் தொடங்கி, வடகிழக்கே காட்மாண்டு வரையிலும் எழுந்தருளியிருக்கும் பரமசிவம் ஒன்றே.

மொழிவழி இனங்களும், அந்த இனங்கள் சார்ந்த மாநிலங்களும் இருக்கும் நமது பாரத நாட்டில் இனவழிச் சிவன், மொழிவழிச் சிவன் இருக்கிறான் என்பதை நமது பேராசிரியர்தான் கண்டு காட்டியிருக்கின்றார். இதுபோன்ற கண்டுபிடிப்பு பேராசிரியரின் நூற்கல்வி மீதே நமக்கு ஐயத்தை உண்டாக்குகிறது. இதனைத்தான் திருவள்ளுவர்,

*"கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற*
*வல்லதூஉ மையந் தரும்."* - என்கின்றார்.

## சேக்கிழார் சிந்தனை

இனி நமது பேராசிரியர் சேக்கிழார் மீது கொண்டுள்ள பார்வை சரியன்று என்பதையும், சேக்கிழார் ஆரியச் சார்பானவர் அல்லர் என்பதையும், அவர் ஆரியச் சார்பான நூல் இயற்றவில்லை என்பதையும் பெரியபுராணம் கொண்டு தெளியலாம்.

சேக்கிழார் சிந்தனை முழுதும் தமிழே என்பதை முதலில் விளங்கிக்கொண்டால்தான் பின்னர் வருகின்ற செய்திகளையும் புரிந்தகொள்ள முடியும். மேலும் இன்று தமிழகத்தில் நமது சைவ சமயம் மற்றும் சைவத் தமிழ் சார்ந்து சிலரிடம் இருக்கும் மயக்க உணர்வு நீங்கும்.

"பெரியபுராணத்தின் சிந்தனை முழுதும் தமிழே என்னும் கூற்று நூற்றுக்கு நூறு சரி" என்று கருத்துரைக்கும் பரிபூரணமான தவத்திரு குன்றக்குடி அடிகளாரின் வாக்கினை உள்ளத்துள்கொண்டு சேக்கிழாரை அணுகுவோம்.

சேக்கிழார் நினைத்திருந்தால், அவருக்கிருந்த புலமை ஆற்றலாலும், தெய்வீகச் சிறப்பாலும் இராமாயணம், மகாபாரதம், சீவகன் கதை, உதயணன் கதை போன்ற வடபுலக் கதைகளையும், நாயகர்களையும் கொண்டு சிறந்த காவியம் ஒன்று செய்திருக்க முடியும்.

சிலப்பதிகாரம், மணிமேகலை போன்று வடபுலச் சிந்தனையில் தோன்றிய சமயக் கருத்துக்கள் அடங்கிய நூல்களை இயற்றியிருக்க முடியும்.

கந்தபுராணம், திருவிளையாடல்புராணம் போன்ற இறைவன் அருள் செயல்களைக் கொண்ட புராணங்களை யாத்திருக்க முடியும். செய்தாரா? செய்யவில்லையே. மாறாக என்ன செய்தார்?

வடவேங்கடம் தென்குமரிக்கிடைப்பட்ட நமது தமிழ்நாட்டில் பலருக்குத் தெரியாத சிற்றூர்களிலும் பேரூர்களிலும் தோன்றி வெளியில் தெரியாத வேர்களாக வாழ்ந்து இறையன்பில் திளைத்துத் தொண்டு செய்து, மறைந்த உத்தமர்களாகிய சாமான்யர்களின் வாழ்க்கைப் போக்கைத் தனக்குரிய கதைக்களமாகக் கொண்டார். இது ஒன்றே போதும் சேக்கிழார் தமிழ் உணர்வில் தலைப்பட்டவர் என்பதற்கு.

அக்காலத் தமிழர்களின் சமய உணர்வு, மொழி உணர்வு, இறைப்பற்று, ஈர அன்பு, வீர உணர்ச்சி, தாழ்வெனும் தன்மை, தொண்டு, ஞானம், நட்பின் திறம், விருந்தோம்பல், கொள்கை உறுதி, நடுவு நிற்றல், நன்றியறிதல், நீதியில் நிற்றல் மற்றும் இன்னோரன்ன பண்புகளைத் தம் புராணத்துள் பொதிந்து வைத்து நமது தமிழ் வாழ்வைத் தரணிக்குணர்த்தியவர் சேக்கிழார் என்பதில் ஐயமில்லை.

ஈர அன்பைக் கண்ணப்பரிடம் சென்று காணலாம். வீரத்தை எறிபத்தரிடம் நின்று காணலாம். தாழ்ச்சிக்குச் சேரமான், தொண்டுக்கு அப்பர். ஞானத்திற்குச் சம்பந்தர். நட்பின் திறத்தைச் சுந்தரரிடம் பார்க்கலாம். விருந்தோம்பலுக்கு அம்மையும், அப்பூதியும், கொள்கை உறுதியில் சிறுத்தொண்டர், இயற்பகை மற்றும் தண்டியடிகள். நடுவு நிலைக்கு ஈசன். நன்றிக்குக் குலச்சிறை. நீதியில் நிற்றலுக்கு மனுச் சோழன்.

## தமிழ் வாழ்வின் மாண்பு

இனித் தமிழ் வாழ்வை சேக்கிழார் நமக்குக் காட்டும் நிறம் பற்றிப் பார்ப்போம்.

*"தமிழ்நாட்டிலே சாஸ்திரங்கள் இல்லை.*
*உண்மையான சாஸ்திரங்களை வளர்க்காமல்*
*இருப்பனவற்றையும் மறந்துவிட்டுத்*
*தமிழ்நாட்டுப் பார்ப்பார் பொய்க்கதைகளை*
*மூடரிடம் காட்டி வயிறு பிழைத்து வருகிறார்கள்"*

—மகாகவி பாரதி.


*"தமிழ்நாட்டிலே சாஸ்திரங்கள் இல்லை.*
*உண்மையான சாஸ்திரங்களை வளர்க்காமல்*
*இருப்பனவற்றையும் மறந்துவிட்டுத்*
*தமிழ்நாட்டுப் பார்ப்பார் பொய்க்கதைகளை*
*மூடரிடம் காட்டி வயிறு பிழைத்து வருகிறார்கள்"*

– மகாகவி பாரதி.


ஒருவன் குற்றம் செய்தால் அவனுக்குத் தண்டனை உறுதி. செய்த குற்றத்தின் தன்மைக்கேற்ப தண்டனை தரப்படும். தரப்பட வேண்டும். இங்கே, அவன் செய்த குற்றம்தான் பார்க்கப்பட வேண்டுமேயொழிய, செய்தவன் எந்தக் குலம்? செல்வம் படைத் தவனா? இல்லாதவனா? அதிகாரம் உள்ளவனா? இல்லையா? மேல் சாதியா? கீழ்சாதியா? உறவா? என்பன போன்றவற்றைப் பார்க்கக்கூடாது. இதுதான் ஒரு காலத்தில் தமிழகத்தில் நீதிக்கென கொண்டிருந்த சாஸ்திரமாகும். பெரியபுராணச் சிந்தனையும் இதுவேயாகும்.

பிற்காலத்தில் இந்த அளவுகோல் மாறத் தலைப்பட்டது. செய்த குற்றத்திற்குரிய தண்டனை தரப்படாமல், அத்தண்டனை யிலிருந்து தப்பிக்க கழுவாய் அதாவது பிராயச்சித்தம் என்ற ஒன்று புகுத்தப்பட்டது. இந்தக் கழுவாயும், செய்த குற்றம் பார்க்காமல் அதனைச் செய்தவனைப் பார்த்து நிர்ணயம் செய்யப்பட்டது. மேல் சாதிக்காரன் செய்த குற்றத்திற்குக் கழுவாய் மூலம் அவன் அதிலிருந்த முழுவதுமாகத் தப்பிக்க முடியும். கீழ்ச்சாதிக்காரன் தப்பிக்க முடியாது. இதுவும் தமிழகத்தில் நீதிக்கென கொண்டிருந்த சாஸ்திரம்தான்.

இவ்விருவகை சாஸ்திரங்களைத்தான் நமது பாரதி

உண்மையான சாஸ்திரம் என்றும் பொய்க்கதை காட்டும் போலி சாஸ்திரம் என்றும் வகைப்படுத்துகிறான். வேதத்தின் பெயராலும் ஸ்மிருதிகளின் பெயராலும் பார்ப்பனர்கள் பொய்யான கதைகளை எழுதி வைத்துக்கொண்டு வயிறு பிழைக்க வேண்டி அவற்றையே சாஸ்திரங்கள் எனக் கூறினர் என்பது பாரதியின் கருத்து. இந்தக் கருத்து நூற்றுக்கு நூறு சரி என்பதனை உறுதிப்படுத்துவது போன்று நமது சேக்கிழார் இயற்றியருளிய பெரியபுராணத்தில் மிக அருமையான ஓர் இடம் இருக்கிறது. அதுவும் எடுத்த எடுப்பிலேயே இருக்கிறது. சேக்கிழார் காட்டும் தமிழர் சிந்தனையை இந்த இடம் கொண்டு அறிவோம்.

திருவாரூர் வீதியில் சோழன் மகன் சென்ற தேர்ச் சக்கரத்தில் பசுமாட்டுக் கன்று ஒன்று சிக்கி இறந்துவிட்டது. தாய்ப்பசு மணி அடித்து மன்னனிடம் முறையிட்டது. அரசன் நடந்ததை அறிந்து வருந்தினான். மாட்டின் முறையீட்டிற்கு மன்னன் பதில் சொல்லியாக வேண்டும்.

அமைச்சர்களை அழைத்து ஆலோசித்தான். அப்போது அமைச்சர்கள் "பசுவதை செய்தார்க்கு அப்பாவம் நீங்க வேண்டுமானால், தங்கத்தில் சிறு பசு உருவம் செய்து, அதை அந்தணர்களுக்குத் தானமாகத் தந்தால் பாவம் நீங்கும்" என்றார்கள். "இதுதான் மறை அந்தணர்கள் விதித்த முறைவழி நிறுத்தல்" என்று கூறினர்.

(இது என்ன வேடிக்கையாக உள்ளது) என் மகன் செய்த பாதகத்திற்கு அந்தணர்கள் கூறும்கழுவாய்செய்யஇசைந்து மகனுக்குத் தண்டனை தராமல் இருந்து விட்டு, இதே போன்ற கொலையை அந்நியன் ஒருவன் செய்தால் அவனுக்கு

என் மகன் செய்த பாதகத்திற்கு அந்தணர்கள் கூறும் கழுவாய் செய்ய இசைந்து மகனுக்குத் தண்டனை தராமல் இருந்து விட்டு, இதே போன்ற கொலையை அந்நியன் ஒருவன் செய்தால் அவனுக்கு எப்படி நான் தண்டனை தர முடியும்? அவனும் பிராயச்சித்தம் செய்வான். அவனை நான் விட்டுவிட வேண்டும். குற்றம் செய்யும் ஒவ்வொருவரும் பிராயச்சித்தம் செய்தால் நீதி என்னாவது?

எப்படி நான் தண்டனை தர முடியும்? அவனும் பிராயச்சித்தம் செய்வான். அவனை நான் விட்டுவிட வேண்டும். குற்றம் செய்யும் ஒவ்வொருவரும் பிராயச்சித்தம் செய்தால் நீதி என்னாவது? இதுவா நீதி முறையாகும்? நீங்கள் சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ளது என்னும் வார்த்தை எனது முன்னோர் கைக்கொண்டு வந்த நீதி வழங்கும் வழக்கத்தைச் சுத்தமாகத் துடைத்தெறியும் படியல்லவா இருக்கிறது. இதுவா மந்திரிகளுக்கு அழகு எனச் சொல்லிக் கண்டனம் தெரிவித்தான். பாடலைப் பார்ப்போம்..

*"என்மகன்செய் பாதகத்துக் கிருந்தவங்கள் செயஇசைந்தே*
*அன்னியன்ஓர் உயிர்கொன்றால் அவனைக்கொல் வேனானால்*
*தொன்மனுநூல், தொடைமனுநூல், துடைப்புண்ட தெனும் வார்த்தை*
*மன்னுலகில் பெறமொழிந்தீர் மந்திரிகள் வழக்கென்றான்."*

இந்தப் பாடலில் ஊன்றிப் பார்க்க வேண்டிய தொகைச் சொற்கள் இரண்டு. ஒன்று தொன்மனுநூல், மற்றொன்று தொடை மனு(நூல்) சோழன் காலத்தில் இரண்டு மனு நூல்கள் இருந்துள்ளன என்பது இந்த இரண்டு தொகைச் சொற்களால் தெளிவாகத் தெரிகிறது.

தொடைமனு நூல் என்றால், தொடுக்கப்பட்ட அதாவது எழுதப்பட்ட மனு நூல் என்பது பொருள்.

தொன் மனு நூல் என்றால் (எழுதப்படாத) பழைய மனு நூல் என்பது பொருள். ஒன்று எழுதப்பட்டது என்பதால், மற்றொன்று எழுதப்படாமல் வழக்கில் மட்டும் வழங்கி வந்தது என்பது அருத்தாபத்தியால் தானே போதரும். இரண்டுமே மனு என்ற பெயரிலேயே வழங்கிவந்துள்ளன.

ஒரு குற்றத்திற்கு இப்படித்தான் நீதி வழங்க வேண்டும் என்று பரம்பரைப் பரம்பரையாகத் தலைமுறைத் தலை முறையாகக் கைக்கொண்டு வரும் மரபு, வழக்கம் பழைய சாஸ்திரம். அந்தக் குற்றத்திற்கு

ஒரு குற்றத்திற்கு இப்படித்தான் நீதி வழங்க வேண்டும் என்று பரம்பரைப் பரம்பரையாகத் தலைமுறைத் தலை முறையாகக் கைக்கொண்டு வரும் மரபு, வழக்கம் பழைய சாஸ்திரம். அந்தக் குற்றத்திற்கு இப்படியும் தீர்ப்புச் சொல்லலாம், நீதி வழங்கலாம் என எழுதி வைத்துக்கொண்டது புதிய சாஸ்திரம்.

இப்படியும் தீர்ப்புச் சொல்லலாம், நீதி வழங்கலாம் என எழுதி வைத்துக்கொண்டது புதிய சாஸ்திரம்.

கொலைக்குக் கொலைதான் தண்டனை என்பது பழைய சாஸ்திரம். கொலைக்குப் பிராயச்சித்தம் செய்யலாம் என்பது புதிய சாஸ்திரம்.

இந்தப் புதிய சாஸ்திரத்திற்குச் சொந்தக்காரர்கள் அந்தணர்கள். அந்த சாஸ்திரத்திற்குப் பெயர் மறை. பழைய மனுவின் பெயரையே தங்கள் நூலுக்கும் அவர்கள் கொண்டார்கள்.

(சேக்கிழார் பிராமணர்களை, அந்தணர்கள் என்றும், அவர்கள் எழுதி வைத்திருந்த மனு சாஸ்திரத்தை 'மறை' என்றும் கூறுவது கொண்டு மயங்கக்கூடாது. இனம் பற்றி இவ்வாறு கூறிச் செல்வது அவர் வழக்கம். இடம் நோக்கிப் பொருள் கொள்ள வேண்டும்)

பண்டைத் தமிழகத்தில் கொலைக்கு மட்டும், கொலை தண்டனையாக விதிக்கப்படவில்லை. திருட்டுக்கும் கொலை தண்டனையாக விதிக்கப்பட்டது என்பதனைக்

*"கன்றியச் சிலம்பு அக்கள்வன் கையதாகில்*
*கொன்றச் சிலம்பினைக் கொணர்க"*

என்னும் பாண்டியன் கட்டளையிலிருந்து அதனைத் தெரிந்து கொள்ளலாம். இவ்வாறு தண்டனை வழங்கியதால்தான் அக்காலத்தில் மக்கள் அச்சமின்றி வாழ்ந்து வந்தனர். என்றைக்குக் கழுவாய் புகுத்தப்பட்டதோ அன்றைய நாளிலிருந்து நீதி வழுவத் தலைப்பட்டது. இதனைக் குறிப்பிட்டுத்தான் மனுச் சோழன் அந்தணர்கள் எழுதி வைத்துள்ள (குலத்திற்குத் தக்கவாறு) சாஸ்திரங்களை நான் பின்பற்றிச் சென்றால் எனது பரம்பரை நீதியை (உண்மையான, நேர்மையான நீதியை) நான் துடைத்து எறிந்தவனாவேன் என அமைச்சர்களிடம் சொன்னதுடன், அவர்கள் ஆலோசனையை (கழுவாய் செய்தல்) முற்றாக ஒதுக்கிவிடுகிறான்.

சேக்கிழார் "அனபாய சோழன்" ஆட்சியில் தலைமை அமைச்சராக

இருந்தவர் என்பது நாம் அறிந்த ஒன்றே. நீதி வழங்குவதற்கான நடைமுறை விதிகளை அவரைக் காட்டிலும் அறிந்தவர் யாரும் இருந்திருக்க முடியாது. மனு தர்மம் என அந்தணர்கள் எழுதி வைத்த சாஸ்திரம் நீதி முறைக்கு முற்றிலும் மாறுபட்டது என்பதை அவர் நன்கறிந்தவர். அது கொண்டே அவர் தான் இயற்றிய பெரியபுராணத்தில் தக்க இடத்தில் அதனை வெளிப்படுத்தி அருளினார். ஆரியச் சார்பு அவரிடத்தில் இருந்திருந்தால் கதையின் போக்கில் இவ்வாறு குறிப்பிடாமல் வேறு வகையில் குறிப்பிட்டுச் சென்றிருப்பார் என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

தெனாலிராமன் அந்தணர்களுக்குச் சூடு போட்ட கதை, பிராயச்சித்தம் செய்வதை மிகவும் அறிவுபூர்வமாக நமக்குத் தெரிவிக்கின்றது என்பதை இவ்விடத்தில் நினைவுகூரலாம்.

தெனாலிராமன் அந்தணர்களுக்குச் சூடு போட்ட கதை, பிராயச்சித்தம் செய்வதை மிகவும் அறிவுபூர்வமாக நமக்குத் தெரிவிக்கின்றது

## தமிழின் சிறப்பு

சேக்கிழார் காலத்தில் வடமொழி ஆதிக்கம் சைவ உலகில் நன்கு வேரூன்றிவிட்டது. அவர் காலத்திற்கு முன்பிருந்த மூவர் முதலிகள் தமிழில் சிறந்த பதிகங்களைத் தந்திருந்தும் திருக்கோயில்களிலும் பிற இடங்களிலும் வடமொழி போற்றப்பட்டிருக்கின்றது. அதனால்தான் சேக்கிழார் தாம் இயற்றிய பெரிய புராணத்தில் வாய்ப்புக் கிடைக்கின்ற இடங்களில் எல்லாம் தமிழ் மொழியின் சிறப்பை எடுத்துக்காட்டிச் செல்கின்றார். இவருடைய இந்தச் செயலுக்கு உந்து சக்தியாக இருந்தது ஞான சம்பந்தரின் திருவாக்கே எனலாம்.

ஞானசம்பந்தர் தாம் பாடியருளிய பாசுரங்களில் தமிழ் மொழிக்குக் கொடுத்துச்சென்ற அடைமொழிகளையும், தமிழோடு சம்பந்தப்படுத்தித் தன்னைக் கூறிக்கொண்ட திறத்தையும் கூட்டிச் சேக்கிழார் தமது நூலில் பயன்படுத்திக் கொண்டுள்ள பாங்கு அறிந்து இன்புறத்தக்கது.

வண்டமிழ், செந்தமிழ், தீந்தமிழ், நெடுந்தமிழ், அருந்தமிழ், இசைத்தமிழ், நற்றமிழ், முத்தமிழ், செந்தமிழ், நறுந்தமிழ், தூநறுந்தமிழ், சொற்றமிழ், நிறைதமிழ், குலவுதமிழ் என்றெல்லாம் தமிழ் மொழியின் சிறப்பையும்; முத்தமிழ் விரகர், வண்டமிழ் நாயகர், தமிழ் விரகர், தமிழாகரர், மதுரமுத்தமிழ் வாசகர், ஞானத் தமிழாகரர், தமிழாளி என ஞானசம்பந்தருக்குத் தமிழோடு இணைந்து நிற்கும் திருப்பெயர்களையும் போற்றிக் கெண்டாடிய சேக்கிழாரையா நாம் சந்தேகப்படுவது?

## திருமறைக்காட்டு நிகழ்ச்சி

சேக்கிழார் தமிழ் உணர்வின்பால் கொண்டிருந்த அளவற்ற பற்றினை மேலும் ஓர் இடம் கொண்டு அறிவோம்.

திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும், திருமறைக் காட்டிற்கு வருகின்றனர். மாதவர்களும், மறையவர்களும், மற்றவர்களும் அவர்களை வரவேற்கின்றனர். இருவரும் கோயில் முன்றில் வலம்கொண்டு அருமறைகள் அருச்சித்துக் காப்புச் செய்த கதவுகள் கூடிய திருவாயிலுக்கு எதிரில் வந்து சேருகின்றனர்.

கதவுகள் மூடப்பட்டுள்ளன. பக்கத்தில் இருந்தவர்கள் செய்தியைச் சொல்லுகின்றனர். அவர்கள் செய்தி சொல்லும் பாங்கில் சேக்கிழார் அமைத்துக்கூறும் சொல் வழக்கு மிகவும் ஊன்றிக் கவனிக்கத்தக்கது. பாடலைப் பார்ப்போம்.

*"அருமறைகள் திருக்காப்புச் செய்து வைத்த அக்கதவம்*
*திறந்திட அம்மறைகள் ஓதும்*
*பெருகிய அன்புடை அடியார் அணைந்து நீக்கப் பெறாமையினால்*
*அன்று முதலாகப் பின்னை*
*ஒருபுடை ஓர் வாயில் அமைத்தொழுகும் தன்மை உற்றபடி*
*கேட்டருளி உயர்ந்த சண்பைத்*
*திருமறையோர் தலைவர் வியப்பெய்தி நின்று திருநாவுக்*
*கரசருக்கச் செப்பு கின்றார்."*

இப்பாடலில் கூறப்படும் 'அருமறைகள்' வடமொழி வேதங்களே

என்பதில் ஐயமில்லை. வேதங்கள் ஏன் கதவுகளை அடைத்தன என்பதற்குப் பெரியபுராணத்தில் காரணம் சொல்லப்படவில்லை.

அம்மறைகள் ஓதும் பெருகிய அன்புடை அடியார் அணைந்து நீக்கப் பெறாமையினால் கதவுகள் திறக்க முடியாமல் உள்ளன என மறைக்காட்டு அன்பர்கள் ஆளுடைய பிள்ளைக்கும் அரசுக்கும் சொல்லுகின்றனர்.

அம்மறைகள் ஓதும்
பெருகிய அன்புடை
அடியார் அணைந்து நீக்கப்
பெறாமையினால் கதவுகள்
திறக்க முடியாமல் உள்ளன

இக்கூற்றிலிருந்து ஒன்று தெரிகிறது அம்மறைகள் ஓதும் வேதியர்கள் ஈசனிடத்துப் பெருகிய அன்புடைய அடியார்களாக இல்லாமல், காதலாகிக் கசிந்து உருகும்பான்மையராக இல்லாமல் வெறுமனே மறைகளை ஓதிக் கொண்டிருந்தார்கள் என்பதும், அது காரணமாக வெறுப்புற்ற வேதங்கள் கதவுகளை மூடிவிட்டன என்பதும் தெரிகிறது. அதாவது ஈசனே அக்கதவுகளை மூடிவிட்டான் என்பது பொருள்.

பெருகிய அன்புடை அடியார்கள் வந்தால் கதவுகள் திறக்கும் என்பது குறிப்பு. அன்பெனும் பிடியுள் அகப்படும் மலை அவன். அன்பெனும் கடத்துள் அடங்கிவிடும் கடல் அவன். தொண்டர் அன்பு எனும் தூய நீரில் திளைத்து ஆடுவதையே விரும்புபவன் அவன். அன்புக்கு மட்டுமே ஆட்படும் அவனை வெறும் வார்த்தை சாலங்களால் அகப்படுத்த முடியாது. இதனைத்தான் நமது சிவப்பிரகாசர்,

*"வேதம் ஓதின் விழிநீர் பெருக்கி*
*நெஞ்சம்நெக் குருகி நிற்பவர்க் காண்கிலேம்*
*திருவா சகம்இங் கொருகால் ஓதின்*
*கருங்கல் மனமும் கரைந்துகக் கண்கள்*
*தொடுமணற் கேணியிற் சுரந்துநீர் பாய*
*மெய்ம்மயிர்ப் பொடிப்ப விதிர் விதிப் பெய்தி*
*அன்பர் ஆகுந ரன்றி*
*மன்பதை உலகில் மற்றைய ரிலரே"*

எனக் கூறியருளினார். அன்பை அடித்தளமாகக் கொண்டது தமிழ் வழிபாடு. அறிவாற்றலை அடித்தளமாகக் கொண்டது சமஸ்கிருத வழிபாடு. நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழி என்பது தொல்காப்பியம்.

அன்பை அடித்தளமாகக் கொண்டது தமிழ் வழிபாடு. அறிவாற்றலை அடித்தளமாகக் கொண்டது சமஸ்கிருத வழிபாடு. நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழி என்பது தொல்காப்பியம்.

## வியப்பு

ஊர் மக்கள் சொன்ன செய்தியை இருவரும்தான் கேட்டார்கள். ஆனால் ஞானசம்பந்தர்தான் வியப்பெய்தினார் என்கின்றார் சேக்கிழார். காரணம் இவர் வேதம் ஓதும் வேதியர் குலத்தில் உதித்தவர். வேதத்தில் ஒலி, அதாவது உச்சரிப்புத்தான் முக்கியம். அதன் நீளம் அழுத்தம் மாறிவிடாதபடி உச்சரிக்க வேண்டும். வேதத்தில் ஐம்பது பதங்கள் உள்ளதைப் பஞ்சாதி என்பர். இவற்றிற்குப் பதம் கிரமம், ஜடை, கனம், வர்ணக்ரமம் சொல்லுவது உண்டு. இவை பிசகாமல் வேதம் ஓதப்பட வேண்டும். ஓர் எழுத்திற்குப் பதில் வேறோர் எழுத்தைச் சொன்னால் ஸ்வரம் தப்பி விபரீத பலன் வேண்டியதற்கு மாறாக உண்டாகிவிடும். வேதத்தின் கனம் தெரிந்து வேத பாராயணம் செய்பவர்களைக் கனபாடிகள் என்பர்.

வேதம் ஓதும்போது உச்சரிப்புக்குத்தான் முதலிடம். ஒலி அதிர்வுகள்தான் அங்கே கவனிக்கப்படும். ஆனால் தமிழ்ப் பாசுரங்களில் உள்ளத்தில் ஊற்றெடுக்கும் அன்புக்குத்தான் முதலிடம். "கோழை மிடறாக கவிகோளும் இலவாக இசைகூடும் வகையால் ஏழையடியார் அவர்கள் யாவை சொன சொல்மகிழும் ஈசன்" என ஞானசம்பந்தர் கூறுவது கொண்டு அதனை உறுதி செய்யலாம். மேலும் காழிக்கன்று ஞானம் எது எனில் அது ஈசன் பால் கொள்ளும் அன்பே என்றும் கூறிச்செல்கின்றார், இவ்வாறு அன்புக்கு அகப்படும் ஈசனை வெறும் ஒலிகள் மூலம் அகப்படுத்த முடியாது என்பதை வேதாரண்யத்தில் அறிந்து சம்பந்தர் வியப்பெய்தினார்.

## வண்டமிழ்

வியப்பெய்தி சம்பந்தர் வடமொழி வேதங்களால் மூடப்பட்ட கதவுகளைத் தமிழ் மொழிப் பாடல்களால் திறக்க வேண்டும் என்ற முடிவிற்கு வருகின்றார். நாவுக்கரசரை நோக்கி, அப்பரே! மறைக்காட்டுத் தலைவரை மற்றவர்கள் சென்று கண்டு வணங்குவதைப் போலல்லாமல் உள்முகத் திருக்கதவுகள் திறந்து சென்று வணங்க வேண்டும்.

ஆதலால், "நீரே இவ்வாயில் திருக்காப்பு நீங்குமாறு மெய்ப்பொருள் வண்டமிழ் பாடி அருளும்" எனக் கூறுகிறார். இவ்வாறு இந்த நிகழ்ச்சியைச் சொல்லிவரும் சேக்கிழார் ஞானசம்பந்தர் வாக்கில்வைத்து "மெய்ப்பொருள் வண்டமிழ்" எனத் தமிழைப் போற்றுகின்றார். 'மெய்ப்பொருள்' இவ்விடத்தில் ஈசன். எக்காலத்திலும் எவ்விடத்திலும் அழியாது நிற்கும் பொருள் அவனேயாதலின் ஈசன் மெய்ப்பொருள் எனப் போற்றப்பெறுகிறான். பொய்ப் பொருள்களே கூடியுள்ள நில உலகில் மெய்ப் பொருளைப் பேசப் புகுவதால் தமிழ் வளவிய தமிழாயிற்று. அதனால் கதவு திறக்கப் போகிறது என்பது குறிப்பு.

திருமறைக்காட்டு நிகழ்ச்சியைக் கூறும் முகத்தான் தமிழின் பெருமையை, ஆற்றலை, சேக்கிழார் சிறப்பாக எடுத்துரைக்கின்றார். அதனை அறியும் முன்னர், இடைப்பிறவரலாக இதே நிகழ்ச்சியைக் கொண்டு சுந்தரர் தேவாரத்தில் காணப்படும் ஒரு செய்திக்குரிய விளக்கத்தை விடையைக் காண்போம்.

## எது குற்றம்?

சுந்தரர் தமது திருப்புன்கூர் திருப்பதிகத்தில் ஞான சம்பந்த ரும் அப்பரும் குற்றம் செய்ததாகவும், அவ்வாறு அவர்கள் செய்திருந்தாலும் அவர்கள் செய்த குற்றங்களைக் குணமாகக் கொண்ட ருளியவன் இறைவன் என்கின்றார்.

சுந்தரர் இவர்களிடத்துக் காணும் குற்றங்கள் சிற்றறிவு உடைய

நமக்கு எட்டாதனவே, எனினும் குற்றங்கள் என்னவாக இருக்கும் எனச் சிந்திப்பதில் தவறில்லை. ஆனால் இச்சிந்தனை நூல் வரம்பிகவாமல் செய்திகளை ஒட்டியே செல்ல வேண்டும்.

திருநாவுக்கரசர் சமண சமயம் சார்ந்தது குற்றம் என்பர். இதனை ஓராற்றான் குற்றமெனக் கொள்ளலாம் என்பது சிலர் துணிபு. சமணம் சார்ந்த அப்பர் அக் குற்றத்திற்குரிய தண்டனை யை அனுபவித்து, மீண்டு வந்து சைவம் சேர்ந்த போது அக்குற்றம் நீங்கிவிட்டது. அவர் சமணத்திலேயே இருந்திருந்தால் சுந்தரர் அவரைப் பற்றிப் பேசியே இருக்க மாட்டார். அவர் குற்றம் செய்தவர் என்ற பேச்சே எழுந்திருக்காது. ஆதலால் அப்பரடிகள் சைவம் சேர்ந்த பின்னர் நடந்துகொண்ட முறையில் ஏதோ ஒரு தவறு நடந்திருக்க வேண்டும் எனக் கொள்வதே சரியாகும்.

திருஞான சம்பந்தர் குற்றமாகச் சில செய்திகள் சொல்லப்படுகின்றன.

1. சமணர்கள் கழுவேறியது: சமணர்கள் கழுவேற அவர்களே காரணமாயினர். அரசநீதியில் தலையிடச் சம்பந்தருக்கு உரிமையில்லை. அவ்வாறு தலையிட்டால் சமணர்கள் செய்த தவற்றை சம்பந்தரும் செய்தவராவார்.

2. நல்லூர்ப் பெருமணத்தில் வந்திருந்த அனைவரும் சிவப்பேறுபெறச் செய்தது. இது எவ்வாறு குற்றமாகும்? அதனைத் தேடித்தானே உயிர்கள் இறைவன் கழல் ஏத்துகின்றன. இறைவனே அதற்கு வழிவகுத்துக் கொடுத்தான் என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

3. எனதுரை தனதுரை எனத் தன்னைத்தான் புகழ்ந்து கொண்டது என்பர் சிலர். தந்தைக்குப் பதிலாக அவன் செய்தியைத் தனயன் சொல்வது குற்றமாகாது.

4. நமது தருமையாதீனம் 26ஆவது குருமகா சந்நிதானம் இது

குறித்து ஒரு கருத்தினைச் சொல்லி உள்ளார்கள். பெற்ற தாதை வேள்வி செய்யும் பொருட்டுத் திருவாவடுதுறை ஈசனிடம் சம்பந்தர் பொன் வேண்டும்போது, "இதுவோ எமை ஆளுமாறு ஈவது ஒன்று எமக்கில்லையேல் அதுவோ உனது இன்னருள்" எனச் சொல்லி வேண்டுகின்றார். இவ்விண்ணப்பம் சற்றுக் கடினமானதாக உள்ளது என்பதாகும் அது. அதாவது, பொருள் கேட்டு, ஈசன் காலம் தாழ்த்தினால் இதுவா எம்மை நீர் ஆளும் திறன் எனக் கடுமை காட்டலாம். நிகழ்ச்சி அவ்வாறில்லை. காலம் தாழ்த்தாதபோது, இல்லை என்னும் குறிப்பும் இல்லாதபோது, இவ்வாறு கடுமை காட்டுவது குற்றமாகக் கருதப்படலாம் என்பது சந்நிதானத்தின் திருவுள்ளமாகும்.

முதல் மூன்று காரணங்களைக் காட்டிலும் சந்நிதானத்தின் கருத்து வலுவுடையதாக இருக்கின்றது. இதனை ஏற்பதில் சங்கடமில்லை. எனினும் இதற்கும் மேலே சென்று பார்ப்பதிலும் தவறில்லை.

திருஞான சம்பந்தரின் திருவாக்குகளுக்குப் பாடியம் சொல்லுபவரான சேக்கிழார், ஆவடுதுறை நிகழ்ச்சியைக் குறிப்பிடும்போது "நீள் நிதி வேண்டினார்க்கு ஈவது ஒன்றும் மற்றிலேன் உன்னடி அல்லது ஒன்று அறியேன்" என்று சொல்லிக் கேட்டதாக விளக்கம் சொல்கிறார். இந்த விளக்கத்தில் சம்பந்தர் விண்ணப்பத்தில் கடுமை இருப்பதாகத் தெரியவில்லை.

சம்பந்தரிடம் சொந்தமாகப் பொருள் கிடையாது என்பது தெரிந்தும் சிவபாத இருதயர் இவரிடம் பொருள் கேட்கிறார். என்ன எண்ணிக் கேட்டிருப்பார்? தன்னிடம் பொருள் இல்லையாயினும் ஈசனிடம் கேட்டு வாங்கித் தருவார் என்றுதானே அவர் எண்ணியிருக்க வேண்டும். இப்படித் தன்னிடம் பொருள் இல்லை என்பதைத் தெரிந்திருந்தும் பெற்ற தந்தை பொருள் கேட்கும் நிலையில் நீ என்னை வைத்துவிட்டாயே! இதுவா உனது இன்னருள் என வருந்திக் கூறுகிறார் சம்பந்தர்.

ஈவது ஒன்று எமக்கில்லையேல் என்னும் சம்பந்தர் திருவாக்கிற்கு "நீள் நிதி வேண்டினார்க்கு ஈவது ஒன்றும் மற்றிலேன்" என விளக்கம் சொல்லும் சேக்கிழார் வாக்கு சம்பந்தர் வருத்தத்தைத்தான் குறிக்கிறது எனக்கொள்ளின், அது சேக்கிழார் சிந்தனைக்கு அரண் செய்வதாக அமையும்.

திருவாவடுதுறையில் அப்பாவுக்காகப் பொன் வேண்டியவர் திருவீழிமிழலையில் அடியவர்களுக்காகப் பொன் வேண்டினார். திருநாவுக்கரசருக்கு அளிக்கப்பட்ட காசு வாசியில்லாதது. இவருக்கு அளிக்கப்பட்ட காசு வாசியுடையது. இந்தச் செய்தி அறிந்த சம்பந்தர், திருநாவுக்கரசர் தொண்டால் பெறும் காசு அது. அதனால் அது சரியே! என அதற்கான காரணத்தையும் சொல்கிறார்.

காரணத்தை அறிந்த பின்பு வாளா இருந்திருக்க வேண்டும். ஆனால் அவரால் அப்படி இருக்க முடியவில்லை. ஏன்? அடியார்கள் அமுது செய்தாக வேண்டும். அதனால் வாசி இல்லாத காசு வேண்டும். அதற்காகக் கேட்க வேண்டும் என மனத்துள் கொண்டு கேட்டார். வாசியில்லாத காசு கிடைத்தது. இதுவும் தவறாகாது.

சரி! வேறு என்னதான் இவ்விருவரும் செய்திருப்பார்கள்? சிந்திக்கும்போது ஓர் இடம் புலப்படுகிறது. அதனைக் காண்போம். "தந்தை சொல் மிக்க மந்திரமில்லை" என்பது ஆன்றோர் வாக்கு. இனம் பற்றித் "தந்தை செயலுக்கு மேல் வேறு செயல் இல்லை" எனச் செயலையும் சேர்த்துக் கொள்ளலாம். (இங்கே குறிக்கப்படும் தந்தை நல்ல தந்தையாவான்).

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் சேர்ந்து செய்த செயல் ஒன்று உளது. திருமறைக்காட்டில் வேதங்கள் அடைத்திருந்த கதவினைத் திறக்கவும் மூடவும் செய்த செயலே அது. இச்செயல் மிகுந்த வியப்பைத் தந்தாலும், இவர்கள் இவ்வாறு செய்யலாமா? என்ற கேள்வியைக் கேட்டால், அதற்கு வரும் விடையைக் கொண்டுதான் சுந்தரர் சொன்னதை உறுதி செய்ய முடியும்.

ஒரு காலத்தில் தாம் குடிகொண்டுள்ள கோயிலின் கதவுகளை வேதங்கள் அடைத்துச் செல்ல, இறைவன் அதற்கு உடன்பட்டிருக்கிறான். காரணம் வேதம் சொல்வோர் பெருகிய அன்புடை அடியாராக இல்லாமல் போனதால் ஈசன் உடன்பட்டான் எனக் கருதலாம். அவன் உடன்பாடு இல்லையேல் வேதங்களால் கதவுகளை அடைத்திருக்க முடியாது. ஈசன் உடன்பாட்டின் பேரில் வேதங்கள் கதவினை அடைத்ததுபோல் அவன் உடன்பாடு பெற்றே இவர்கள் கதவினைத் திறக்கவும் மூடவும் செய்திருக்க வேண்டும். ஆனால் இவர்கள் அவ்வாறு செய்யவில்லை.

தாம் பத்துப் பாடல்கள் பாடிய நிலையிலும் கதவு திறக்காதிருக்க, அவர் ஒரு பாட்டுப் பாடியவுடன் கதவு மூடிக்கொண்டதே! தவறு செய்துவிட்டேனோ! அப்பன் திருவுள்ளம் அறியாது மயங்கி இக்காரியம் செய்துவிட்டேனோ! என்று திருமடத்தில் சிந்தித்திருந்த நாவுக்கரசர் எண்ணத்தைக் கொண்டும்; "வாய்மூருக்கு வா" என ஈசன் சொல்லியருள, அதனைக் கேட்டுச் சென்ற அப்பருக்குக் காட்சிதராமல், அவன் இழுத்தடிக்கும்போது, செவ்வி அறியாமல் (காலம் அறியாமல் அனுமதியில்லாமல்) கதவு திறக்கப்பாடிய எனக்கு ஒளிந்துகொள்ளலாம், ஆனால் அதோ அங்கே வரும் அவருக்குக் (சம்பந்தருக்கு) காட்சிதராமல் எங்கே ஒளியமுடியும் எனச் சொல்லும் நாவரசர் சொல் கொண்டும் இறைவன் அனுமதி பெறாமல் நாவரசர் செய்த செயலைக் குற்றமாகக் கொள்ள முடியும்.

*"நம்பர் திருவுள்ளம் அறியா தயர்ந்தேன்"*

*"பிழைத்துச் செவ்வி அறியாதே திறப்பித்தேனுக்கு"*

என்னும் நாவுக்கரசர் வாக்கு மூலங்கள் அதனை உறுதிப்படுத்துகின்றன.

இறைவன் அனுமதி பெறாமல் நாவரசர் செய்த செயலைக் குற்றமாகக் கொள்ள முடியும்.

*"நம்பர் திருவுள்ளம் அறியா தயர்ந்தேன்"*

*பிழைத்துச் செவ்வி அறியாதே திறப்பித்தேனுக்கு"*

என்னும் நாவுக்கரசர் வாக்கு மூலங்கள் அதனை உறுதிப்படுத்துகின்றன.

என்னதான் மகனாக இருந்தாலும் தந்தையின் உத்தரவு பெறாமல் ஒரு காரியத்தை மகன் செய்யக்கூடாது. ஏற்கெனவே அந்தக் காரியம் நடைமுறையில் இருந்தாலும் தந்தையின் அனுமதி பெறுதல் நல்ல மகனுக்கு அழகு.

"வைத்தீசுவரன் கோயிலில் அனைத்துப் பட்டாக்களும் வைத்தியநாதர் திருப்பெயரில்தான் அமைந்துள்ளன. ஆனால் ஆட்சியும் அனுபவமும் செல்வ முத்துக் குமாரசாமியின் வசமே உள்ளன. திருவிழாக் காலங்களிலும் கிருத்திகை தினங்களிலும் ஸ்ரீ செல்வ முத்துக்குமாரசாமி மண்டபத்திற்கும் உலாவிற்கும் எழுந்தருளுவதற்கு முன்னால் வைத்தியநாதப் பெருமானின் திருச்சந்நிதியில் நின்று உத்தரவு பெறுவதும் ஒரு ஐதீகமாக நிகழ்ந்து வருகிறது."

*தருமை ஆதீன குருமகா சந்நிதானம்.*

*திருஅருட் செய்தி; தொகுதி 2; பக்கம் 64.*

குருமகா சந்நிதானத்தின் திருவருட் செய்தியிலிருந்து என்ன தெரிகிறது? தந்தை மகனிடையே இருக்கும் ஒழுங்கும் நேர்த்தியும் தெரிகிறது. இந்த நேர்த்தியும் ஒழுங்கும் முறையும் தெரியாதவரா நமது ஞானசம்பந்தர். முற்றும் தெரிந்தவர்தான்.

மதுரையில் சமணரை நோக்கி வாது செய்ய தேவரீர்க்குத் திருவுள்ளமோ! என்று அவனது அருளை அனுமதியை வேண்டியவர்தான். அவன் அனுமதியால் அருளால் அவர்களை வென்றவர்தான். பாண்டியன் சைவ நெறி சேர்ந்த பின்னர் அந்நாடு விட்டு நீங்கிப்பிற பதிகளைத் தொழப் போக வேண்டும் என நினைத்த சம்பந்தர், மதுரைப் பெருமானிடம் அனுமதி பெற அதற்கான காலம் பார்த்து அனுமதி பெற்றார் என்கிறார் சேக்கிழார்.

"காலம் பெற்று இனிதிறைஞ்சிக் கைத்தொழுது புறம்போந்தார்" என்பது பெரியபுராணத் தொடர். விடைபெறவும் மதுரையில் காலம் பார்த்தவர்தான்.

இத்தகைய ஒழுங்கினை அறிந்த ஞானசம்பந்தர் கதவு திறக்க வேண்டி அவனிடம் அனுமதி கேட்டிருக்க வேண்டும். கேட்காதது மட்டும் அல்லாமல் நாவுக்கரசரை நோக்கித் திறக்கப் பாடுங்கள் என்று ஆணையும் வழங்கினார். அவரும் ஆணையைத் தட்ட முடியாமல் பாடித் திறந்துவிட்டார். அதன் பின்பு வருத்தப்பட்டார்.

மகனுக்கான உரிமையின் எல்லையைக் கடந்து இறைவன் அனுமதி பெறாமல் கதவு திறக்க சம்பந்தர் மேற்கொண்ட செயலைக் குற்றமாகக் கொள்ளலாம். அத்துடன் நாவுக்கரசரை அதன் பொருட்டுத் தூண்டிய குற்றத்திற்கும் சம்பந்தர் உட்படுகிறார் எனச் சொல்லவும் இடமுண்டு. இப்படியாக இவர்கள் குற்றங்கள் செய்யினும் அவற்றை ஈசன் குணமாகக் கொண்டதால்தான் கதவு திறந்தது. மூடியது. சுந்தரர் கூற்றுக்கு இங்கே விடை கிடைத்துவிட்டது.

## சேக்கிழார் திருவுள்ளம்

இதனை இத்துடன் நிறுத்தி இனி மறைக்காட்டு நிகழ்ச்சியைக் கொண்டு சேக்கிழார் தமிழின் மாண்பினை விளக்கும் திறத்தைப் பார்ப்போம்.

நமது சமய குரவர்கள் நால்வரும் அருளிச் செய்துள்ள தேவார திருவாசகங்களில் காணப்படும் மறை, வேதம் என்னும் சொற்கள் வடமொழி வேதங்களையே சுட்டி நிற்கின்றன. இவ்வேதங்களை ஓதியறிந்தும் கேட்டறிந்தும் அவற்றில் உள்ள சாரமான கருத்துக்களை நால்வரும் பயன்படுத்தியுள்ளனர். இதுபற்றியே நமது சாஸ்திர ஆசிரியர்கள் வேதம் பொது ஆகமம் சிறப்பு என்றனர்.

வடமொழி வேதங்களை இவர்கள் போற்றிக்கொண்ட போதும் இவர்கள் ஈசனிடத்துக் கொண்டிருந்த ஈடுபாட்டால், ஈசன் இவர்களிடத்துக் கொண்டிருந்த ஈடுபாட்டால் அவ்வேதங்கள் செல்ல முடியாமல் இளைப்பாறி திகைத்து நின்ற இடங்களில் இவர்கள் எளிதாகச் சென்று அவற்றால் செய்ய முடியாத காரியங்களைச் செய்து முடிக்கின்றனர்.

அவ்வாறு அவர்கள் செய்து முடித்த செயல்களுக்குத் தமிழ் மொழியே கருவியாயிற்று எனில் அது மிகையன்று. தமிழ் நாட்டில் தமிழ்தானே கருவியாக முடியும். வடமொழி 51 எழுத்துக்களைக் கொண்டு ஒலி வேறுபாட்டிற்கெனத் தனியே எழுத்துக்களைப் பெற்றிருப்பினும் அவ்வெழுத்துக்களால் ஆக்கப்படும் சொற் களில் கனிவு கிடையாது. அகத்தைக் குழைக்கும் ஆற்றல் கிடையாது. அகக்குழைவே அன்பு எனப்படும். வேத மந்திரங்கள் அதிகார ஆற்றலைப் பெற்றனவே தவிர, அன்பின் அடித்தளத்தை அவை பெறவில்லை. ஆதலால்தான் வேதக்கடலைத் தன் ஞானத்தால் கடந்துநின்ற நமது காழிக்கன்று "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதுவார் தமை நன்னெறிக்கு உய்ப்பது நாதன் நாமம் நமசிவாய" என்கிறார்.

திருமறைக்காட்டுக் கோயிலின் கதவுகளை வட மொழியால் மூட மட்டுமே முடிந்தது திறக்க முடியவில்லை. ஆனால் இவ்விருவரோ திறக்கவும் மூடவும் செய்தனர். எதனால் செய்தனர்? தமிழால் செய்தனர். திறக்கப்பயன்பட்ட தமிழ் வண்டமிழ். மூடப் பயன்பட்ட தமிழ் இன்தமிழ் எனத் தன் வாயாரத் தமிழின் சிறப்பைப் போற்றிக் கொண்டாடுகின்றார் சேக்கிழார். தமிழால் நடந்த இந்த அற்புதத்தைச் சேக்கிழார் கொண்டாடும் திறத்தைப் பார்ப்போம்.

சேக்கிழார் சொல்லும் சரிதைகளின் மாந்தர்கள் நம் தமிழகத்தில் கண் முன்னே பிறந்து வளர்ந்து வாழ்ந்து மறைந்தவர்கள். அவர்களைச் சார்ந்து நடந்த நிகழ்ச்சிகள் உண்மையானவை. அவற்றை அவர் உள்ளபடிச் சொல்ல வேண்டும். அதேபோது காவியத்தைக் கொண்டு செல்லும் போக்கில் கற்பாரைக் கவரும் வண்ணம் நடந்த நிகழ்ச்சியை நயமாகவும் சொல்ல வேண்டும். இடையில் தனது உள்ளத்து உணர்ச்சியையும் வெளிப்படுத்த வேண்டும். கத்தி முனையில் நடப்பதைப் போன்றது இது. சேக்கிழார் கத்தி முனையில் நடந்து காயமின்றித் தனது காப்பியத்தை முடித்துள்ள திறத்தைக் கற்போர் அறிவர்.

இந்த வகையில் மறைக்காட்டு நிகழ்ச்சியினைக் கூறிவரும்

சேக்கிழார் அதனை மட்டும் கூறி நிறுத்தி மேலே சரிதை சொல்லச் சென்றிருக்கலாம். ஆனால் அவ்வாறு செய்யாமல் அச்செயலில் தம் மனத்தைப் பறிகொடுத்துத் தம் கூற்றாகச் சொல்லும் பாடல்களில்தான் நாம் சேக்கிழார் உள்ளத்தைக் காணமுடிகிறது.

பொதுவாக இதுபோன்று தம் எண்ணத்தை உணர்ச்சியை வெளிப்படுத்திச் செல்லாதவர் சேக்கிழார், ஆனால் இங்கே தன்னையும் மீறி வெளிப்படுகின்றார். அவ்வாறு வெளிப்படுகின்ற அந்தப் பாடல்களைப் பார்ப்போம். ஆழ்ந்து கிடக்கும் அந்த அற்புதத் தெய்வப் புலவரின் ஆன்மாவைத் தரிசிப்போம்.

*"அத்திரு வாயில் தன்னில் அற்றைநாள் தொடங்கி நேரே*
*மெய்த்திரு மறைகள் போல மேதினி புக்குப் போற்ற*
*வைத்தெதிர் வழக்கம் செய்த வரம்பிலாப் பெருமை யோரைக்*
*கைத்தலம் குவித்துத் தாழ்ந்து வாழ்ந்தது கடல் சூழ் வையம்"*

*"வேதங்கள் எண்ணில் கோடி மிடைந்துசெய் பணியை மிக்க*
*ஏதங்கள் நம்பால் நீப்பார் இருவரும் செய்து வைத்தார்*
*நாதங்கொள் வடிவாய் நின்ற நதிபொதி சடையார் செய்ய*
*பாதங்கள் போற்றும் மேலோர் பெருமையார் பகரும் நீரார்"*

*"திருமறை நம்பர் தாம்முன் பருள்செய்த அதனைச் செப்பும்*
*ஒருமையில் நின்ற தொண்டர் தம்பிரானார்பால் ஒக்க*
*வரும்அருட் செய்கை தாமே வகுத்திட வல்லோர் என்றால்*
*பெருமறையுடன் மெய்த்தொண்டர்க் கிடையீடு பெரிதாம் அன்றே"*

1. வேதங்கள் கதவுகளை மூடின. ஆனால் திறக்கவில்லை. மூடுகின்ற ஆற்றல் வேதங்களுக்கு இருந்ததைப் போன்றே திறக்கின்ற ஆற்றல் இவர்களுக்கு இருந்தது. இத்தகைய எதிர்வழக்கம் (ஒரு செயலுக்கு நேர் எதிரான செயல்) செய்த வரம்பில்லாத பெருமைக்குரிய அவ்விருவரையும் அன்று தொடங்கி கடலால் சூழப்பட்ட உலகத்தோர் கைகுவித்துத் தாழ்ந்து வணங்கி வாழ்ந்து

வருகின்றனர். (வையம் ஆகுபெயர்)

இந்தப் பாடலில் காணப்படும் 'வாழ்ந்தது' என்னும் சொல் நம் கவனத்துக்குரியது. இவர்கள் கதவுகளைத் திறப்பதற்கு முன் அடியவர்கள் வாழாமல் வாழ்ந்து வந்தனர். கதவுகள் மூடிக்கிடக்கின்றன. கதவுகள் திறந்தாலன்றோ இறைவனை நேரே சென்று கும்பிட்டு வணங்கி மகிழ முடியும். வேதங்களுக்கு நிகரான ஆற்றல் இங்கு ஒருவருக்கும் இல்லை. இறைவனும் வாளா இருக்கின்றான். இது என்ன வாழ்க்கை எனச் சலிப்புற்று வாழ்ந்து வந்தனர். அந்தச் சலிப்பு வாழ்க்கையை இவர்கள் நீக்கியதால் அடியவர்கள் வாழ்க்கையில் மகிழ்ச்சி ஏற்பட்டது. அது காரணமாக, அவர்கள் வாழ்க்கை நிறைவு எய்தியது. இந்த நிறைவினைத்தான் 'வாழ்ந்தது' எனச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

2. எண்ணில்லாத விளக்கங்களைப் பெறும் வேதங்கள் சேர்ந்து செய்த (கதவுகளை மூடுதலாகிய) பணியை நம்மிடம் வரும் துன்பங்களைத் தீர்ப்பவராகிய இருவரே திறந்தும் மூடியும் செய்து வைத்தார் என்றால் பெருமானின் பாதங்களைப் பற்றிப் போற்றும் மேலோராகிய அவர் பெருமையை யாரால் சொல்ல முடியும்?

3. இறைவன் அருளிப்பாடுகளைச் செப்பும், ஒருமையில் நிற்கும் தொண்டர்கள் இறைவனிடத்து மட்டுமே பொருந்தி நிற்கும் அருட் செய்கைகளைத் தாமே வகுத்துச் செய்திட வல்லவர்கள் என்பதால், வேதங்களுடன் மெய்த் தொண்டர்களாகிய அவர்கட்கு இடையீடு பெரிதாம். இந்தப் பாடலில் காணப்படும் "பெருமறையுடன் மெய்த் தொண்டர்க்கு இடையீடு பெரிதாம்" என்னும் தொடர் மிகவும் ஊன்றிக் கவனிக்க வேண்டிய ஒன்றாகும்.

போற்றுதலுக்குரிய வேதங்கள் செய்த செயலுக்கு எதிர் வழக்கம் செய்து கதவுகளைத் திறந்ததால் அவ்வேதங்களுக்கும் இவர்களுக்கும் ஆன இடைவெளி பெரிதாம் என்பது மேலே கண்ட தொடருக்கான பொருள். எவ்வாறு அந்த இடைவெளி ஏற்படுகின்றது?

இறைவனால் மட்டுமே செய்ய முடியும் செயலை ஊர்தோறும் சென்று சொல்லிக்கொண்டிருந்த இவர்கள் இப்போது தாமே கருதி வகுத்து அதுபோன்று செய்ததால் வேத ஆற்றலை விஞ்சியவர்களாகின்றனர். ஆதலால் வேதத்தினும் இவர்கள் செயல் விஞ்சி நிற்கின்றது. இதனால் வேதங்களுக்கும் இவர்கட்கும் வேறுபாடு பெரிதாகிறது என்பது பொருள்.

தலைவனாகிய ஈசன் தன்னைப்பற்றி வேதங்கள் என்ன சொல்லுகின்றன என்பது பற்றிக் கவலைப்படுவதில்லை. கவலைக் கொள்வானேயானால் அவன் பரத்துவத்துக்கு அது சரியாகாது. வேதங்கள் தன்னைப் போற்றுகின்றன. வழிபடுகின்றன என்ற அளவில் அவற்றை அவன் ஏற்றுக் கொள்கிறான். அவ்வளவே. ஆனால் இறைவனையே ஏவல் கொள்ளும் ஆற்றல் எங்கள் வேத மந்திரங்களுக்கு உண்டு என்று சொல்லுபவர் கூற்றில் பரமனுடைய உண்மைத் தொண்டராகிய ஞான சம்பந்தருக்கு உடன்பாடில்லை. வேத மந்திரங்களைவிட எங்கள் தமிழிற்கு ஆற்றல் உண்டு என்பதை நிறுவிக்காட்ட வேண்டும் என்ற உணர்ச்சி ஞான சம்பந்தருக்குத் தோன்றுகின்றது. ஞானத் தமிழாகரரின் அந்த ஞான வெளிப்பாட்டை "பெருமறையுடன் மெய்த்தொண்டர்க்கு இடையீடு பெரிதாம்" என்னும் தொடரில் வைத்துச் சேக்கிழார் கூறும் திறம் எண்ணிப் பார்க்க வேண்டிய ஒன்றாகும்.

இந்தத் தொடரைப் பார்க்கும்போது அது இருவருக்கும் உரியது போலத் தோன்றும். இருவருக்கும் கொள்ள இடம் உண்டு. எனினும் ஆழச் சிந்தித்தால் அது ஞானசம்பந்தருக்கு மட்டுமே உரியதாக இருப்பதை உணர முடியும். எவ்வாறெனில் அப்பரைக் காட்டிலும் மறைகளை முற்றாகத் தெரிந்தவர் சம்பந்தர் என்பதாலும், அவரே மறைக்காட்டு நிகழ்ச்சியை முன்னின்று நடத்தியவர் என்பதாலும் என்க. இவ்வாறு பொருள்கொள்ள "மெய்த்தொண்டர்" என்பதை ஒருமையில் கொள்ள வேண்டும்.

'அன்பே சிவம்' என்பதை அறியாத வடமொழிக்கும்; 'அன்பே சிவம்' என்பதை அறிந்த தென்மொழிக்கும் இடையேயான திருமறைக்காட்டு நிகழ்ச்சியில் இறுதியில் வென்று நின்றது அன்பே என்பதை நாம் மறந்துவிடக்கூடாது.

'அன்பே சிவம்' என்பதை அறியாத வடமொழிக்கும்; 'அன்பே சிவம்' என்பதை அறிந்த தென்மொழிக்கும் இடையேயான திருமறைக்காட்டு நிகழ்ச்சியில் இறுதியில் வென்று நின்றது அன்பே என்பதை நாம் மறந்துவிடக் கூடாது.

## தமிழ் அருச்சனை

"திருஞானசம்பந்தர் 'எனதுரை தனதுரை' என்றதால் ஞானசம்பந்தர் (முதல் மூன்று) திருமுறை இறைவன் வாக்காகிறது. அப்பர் பெருமானின் பாடல் கேட்ட பெருமான், 'நாவரசா்' என்ற பட்டம் அளித்தும், அவர் பாடலுக்கு வாசியில்லாக் காசளித்தும் சிறப்பித்தார். எனவே, நான்கு ஐந்து ஆறாவது திருமுறைகளாகிய திருநாவுக்கரசர் தேவாரம் இறைவன் முத்திரை பெற்றது. ஏழாம் திருமுறையாகிய சுந்தரர் தேவாரம் இறைவனாலேயே அடியெடுத்துக் கொடுக்கப்பெற்றது. மாணிக்கவாசகர் அருளிய எட்டாம் திருமுறையை இறைவன் கைப்பட எழுதிக் கையொப்பமும் இட்டுள்ளார். ஒன்பதாம் திருமுறை (பல்லாண்டு) இறைவன் தேரை இழுத்தது. பத்தாம் திருமுறையாகிய 'திருமந்திரம்' "என்னை நன்றாக இறைவன் படைத்தனன் தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே" என்றதால் இறையருளால் தோன்றியதாகிறது. பதினோராம் திருமுறை இறைவனால் அருளப்பெற்ற திருமுகப்பாசுரத்தை முதலாகக் கொண்டது. பன்னிரெண்டாம் திருமுறை 'உலகெலாம்' என்று இறைவனால் அடியெடுத்துக் கொடுக்கப்பெற்றது. எனவே, இறைவனால் அருளப்பெற்ற ஆகம வழி பூசையில் இறைவன் அருள்பெற்ற 'திருமுறைப் பாடல்கள் பாடுவதே அருச்சனை' என்பது தெளிவாகிறது."

"திருக்கோயில்களில் அருச்சனை" என்ற தலைப்பில் திருப்பனந்தாள் காசித் திருமடத்திலிருந்து தம்பிரான் சுவாமிகள் அச்சுப்போட்டுத் தந்துள்ள அறிக்கையில் காணப்படும் செய்தியே நாம்

இங்கே காண்பது.

இந்த அறிக்கையிலிருந்து மடாதிபதிகளோ, பீடாதிபதிகளே தமிழ் அருச்சனைக்கு எதிரானவர்கள் அல்லர் என்பது மிகத் தெளிவாகத் தெரிகிறது. இந்த மடாதிபதிகளைப் பீடாதிபதிகளை வழிபட்டு வாழ்ந்த சிவக்கவிமணியவர்கள், இவர்கள் கொள்கைக்கு எதிராக எவ்வாறு செல்ல முடியும்? சிவக்கவிமணியவர்களின் விளக்கம் தமிழ் வழிபாட்டுக்கே ஆதரவாக இருப்பதை இதனால் உணரலாம் எனப் பேராசிரியர் குறிப்பிடுகின்றார்.

எதிர்ப்பு என ஒன்றிருந்தால் அல்லவோ ஆதரவு என்ற ஒரு நிலை தோன்றும். சிவக்கவிமணி அவர்கள் சேக்கிழார் வாக்கிற்கு விளக்கம் தந்துள்ளார்களே தவிர, அவர்தம் சொந்தக் கருத்தாக எதனையும் அங்கே பதிவு செய்யவில்லை. சேக்கிழார் வாக்கிற்கு யார் உரை சொல்ல வந்தாலும் அப்படித்தான் சொல்ல முடியும். மாறாகச் சொல்ல முடியாது. ஆனால் நமது காசித் திருமடத்து அதிபர் அவர்களோ, நமது அருளாளர்களின் தமிழ் அருச்சனைப் பாடல் முழுவதுமாக ஏற்றுப் போற்றப்பட வேண்டியதே எனத் தமது சொந்தக் கருத்தினை தெளிவாகப் பதிவு செய்கிறார்கள்.

## பிரச்சினை எது?

அடுத்து நமது பேராசிரியர் "எந்தச் சடங்காக இருந்தாலும் சமசுகிருதம்தான் என்று பீடாதிபதிகள் ஓதியருளுவார்கள்" எனக் குறிப்பிடுகின்றார். இந்த இடத்தில் இவர் சொல்லும் செய்தி பற்றிப் பார்ப்போம்.

எந்தப் பீடாதிபதி எந்தச் சடங்கைப் பற்றி இவ்வாறு கூறியருளினார் எனப் பேராசிரியர் குறிப்பிட்டிருந்தால் அது நன்மை பயப்பதாக அமையும். வழக்கம்போல் நமது பேராசிரியர் இதனையும் பொதுவாகவே குறித்துச் செல்கிறார். எனினும் கேட்ட செய்திகளையும், சிலர் எழுதிய செய்திகளையும் கொண்டு இதனை அணுகலாம்.

தருமை ஆதீனம் 26ஆவது குருமகா சந்நிதானம் அவர்கள் சென்னையில் ஒரு நிகழ்ச்சியில் ஆற்றிய அருள் உரையை ஒருத்தர் தான் நேரில் கேட்டிராமல், விளங்கிக் கொள்ள இயலாதார் சொன்ன செய்திகளைக் கொண்டு, தெளிவுபெற குருமகா சந்திதானத்திடம் விளக்கம் பெறாமல் கண்டனக் கடிதமாக எழுதியதே பிரச்சனைக்குரிய களமாக அமைந்துவிட்டது. இதனைத்தான் நமது ம.ரா.போ. "எந்தச் சடங்காக இருந்தாலும் சமசுகிருதம்தான் என்று பீடாதிபதிகள் ஓதியருளுவார்கள்" எனக் குறிப்பிடுகின்றார் என்று கருதலாம்.

## மயக்க உணர்வு

ஒருவர் ஒரு கருத்தைக் கூறும்போதோ, எழுதும் போதோ அவர் நோக்கம் எதுவாக இருக்கும் என்பதைக் கேட்போரும் படிப்போரும் உணரவேண்டும். நமது பேராசிரியர் வெளிப்படக் கூறாமல், மறைமுகமாக எழுதிவருவதை எவ்வாறு யூகித்து ஒருவாறு அறியமுடிகிறதோ அது போல யூகித்து அறிய வேண்டும். சிறந்த அறிவுடையோர் நோக்கத்தை எளிதாக அறிந்துகொள்வார். மந்த புத்தி உடையோர் நோக்கத்தைத் தவறாகப் புரிந்துகொள்வர். பிழைப்புக் கருதுவோர் நோக்கத்தைத் திரித்துக் கூறுவர். இந்த மூன்று வகையில் சந்நிதானத்தின் கருத்தைப் பிழைப்பிற்காகத் திருமுறையைப் பயன்படுத்துவோர் திரித்துக் கூற நமது பேராசிரியர் போன்றோர் அதனை மயங்க உணர்ந்துகொண்டனர். இந்த மயக்க உணர்வே பேராசிரியரைக் கட்டுரை எழுதத் தூண்டியது எனக்கொள்ளின் அது மிகையாகாது.

## தமிழுக்கு எதிரா?

தருமபுர ஆதீனத் தலைவரோ திருப்பனந்தாள் காசிமடத்துத் தலைவரோ தமிழுக்கு எதிரானவர்கள் அல்லர். 450 ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழையும் சைவத்தையும் பேணிப் பாதுகாத்து வருவது தருமபுர ஆதீனம். 308 ஆண்டுகளாகச் சைவத்தையும் தமிழையும் புரந்துவருவது திருப்பனந்தாள் காசிமடம். வழிவழியாகச் சைவ

மரபினையும் தமிழ் மாண்பினையும் போற்றிப் பாதுகாத்து வரும் நிறுவனங்களின் தலைவர்கள் அவற்றிற்கு எதிராக இருக்கின்றனர் என்பதைக் கற்றறிந்தோர் எவரும் ஏற்கமாட்டார்கள். சில பேதைகள் வேண்டுமானால் பிழைப்பிற்காகக் கூறித் திரியலாம். தமிழ் வழிபாடு, தமிழ் அர்ச்சனை, தமிழில் வேள்வி, தமிழில் திருமணம் எனத் தமிழை முன்னிறுத்திச் செய்யும் எதனையும் அவர்கள் எதிர்க்கவில்லை. இவற்றில் அவர்களுக்கு உடன்பாடே தவிர மாற்றுக் கருத்துக் கிடையாது.

வழிவழியாகச் சைவ மரபினையும் தமிழ் மாண்பினையும் போற்றிப் பாதுகாத்துவரும் தருமபுரம் ஆதீனம், திருப்பனந்தாள் திருமடம் ஆகியவற்றின் தலைவர்கள் தமிழுக்கு எதிராக இருக்கின்றனர் என்பதைக் கற்றறிந்தோர் எவரும் ஏற்கமாட்டார்கள். சில பேதைகள் வேண்டுமானால் பிழைப்பிற்காகக் கூறித் திரியலாம்.

## அனுபவம் ஒன்று

நான் குடியிருக்கும் நகரில் நான்காண்டுகளுக்கு முன்பு தெய்வத் திருமேனிகளுக்கான கோயில்கள் கட்டி அவற்றிற்கான கடவுள் மங்கலத்தைக் காசிமடத்து அதிபர் முன்னிலையில் நிறைவேற்றினோம்.

அப்போது 'காசி விசுவநாதர்' ஆலயம் ஒன்று அமைக்க வேண்டும் என எங்கள் விருப்பத்தை அவர்களிடம் தெரிவித்தோம். அதனை ஏற்றுக் கொண்ட அவர்கள், கங்கை நதியில் இயற்கையில் கிடைக்கும் "பாணம்" (இலிங்க வடிவம்) ஒன்றை எடுத்து வரச் செய்து, அதற்குத் தக்கவாறு ஆவுடை செய்யச் சொல்லிக் காசியிலிருந்து கொண்டுவந்து எங்களைத் திருப்பனந்தாளுக்கு வரச்சொல்லி அவற்றை எங்களிடம் ஒப்படைத்தார்கள். அப்போது அவர்கள் எங்களிடம் சொன்ன செய்தியை அப்படியே எழுதுகிறேன்.

"காசியில் இருப்பது போன்று சிறிய அளவிலான பாணம் ஆவுடை கொண்டு வந்துள்ளேன். இதனை நீங்கள் நிறுவி, காசியில் எப்படி அனைவரும் பூவும் புனலும் பாலும் இட்டு இறைவனைத் தொட்டு

வழிபடுகின்றார்களோ அப்படியேச் செய்யுங்கள்" என்றார்கள். இந்த நிகழ்விலிருந்து என்ன தெரிகிறது? இறைவன் திருமேனியில் மலரிட்டு மஞ்சனம் ஆட்டுவதை எல்லாரும் செய்ய வேண்டும் என்ற அவர்கள் விருப்பம் வெளிப்பட்டு நிற்கின்றது என்பது தெரியவில்லையா? ஆம் தெரிகின்றது.

மதுரைத் திருநகரில் சித்தி விநாயகர் ஆலய வளாகத்தில் அமையும் பொருட்டு காசி விசுவநாதருக்கான இலிங்கத் திருமேனியை காசித்திருமடத்தின் அதிபர் காசியிலிருந்து கொண்டுவந்து அவர்களிடம் தந்து, பின்பு தாமே மதுரைக்கு எழுந்தருளி கடவுள் மங்கலம் செய்து வைத்துள்ளார்கள். இப்போது அங்கே மக்கள் தாங்களே பூவும் புனலும் இட்டுக் காசி போன்றே வழிபாடு செய்து வருகின்றார்கள் என்பது தெரிந்துகொள்ள வேண்டிய ஒன்று.

**மரபுநிலை**

காசியில்கூட பண்டாக்கள் காலந்தோறும் பூசை செய்த பின்தான் அனைவரும் இறைவனைத் தொட்டு வழிபட முடியும். காசியில் இருப்பது போன்று காட்மாண்டில் இல்லை. அங்கே கோயில் கொண்டுள்ள "பசுபதீசுவரரை" அனைவரும் தொட்டு வழிபட முடியாது. பண்டரிபுரத்தில் பாண்டுரங்கனின் பாதங்களில் அனைவரும் தலையைப் படியவைத்து வழிபட முடியும். பத்திரியில் பத்திரிநாதன் பாதங்களில் தலைவைக்க முடியாது. வடநாட்டில் எல்லாத் திருக் கோயில்களிலும் காசி போன்றே வழிபாட்டு முறை உள்ளது என நம்மவர் சிலர் கூறிவருவது சரியன்று என்பதை நானே வடநாடு சென்றபோது பார்த்து வந்துள்ளேன். காசியாயினும் சரி, கன்னியாகுமரியாயினும் சரி அந்தந்த இடங்களில் அந்தந்தக் காலங்களில் எவ்வாறு பூசனைகள் நடைபெற்றனவோ அவற்றை அவ்வாறே பின்பற்றுவதுதானே முறை, ஒழுங்கு. இந்த ஒழுங்கினைத்தானே நாம் வழக்கம் என்றும், மரபு என்றும் கூறுகின்றோம்.

மரபு மீறப்பட்டால் ஒழுங்கு சிதையத்தானே செய்யும்.

இதனைத்தானே நமது தொல்காப்பியர் 'மரபுநிலை' என்கின்றார். "மரபுநிலை திரியின் பிறிது பிறிதாகும்" என்னும் சூத்திரம் இதனைத்தானே உணர்த்திக்கொண்டு இருக்கின்றது.

## மரபு மீறல்

முதலில் திருமணத்தை எடுத்துக்கொள்வோம். இது ஒரு நிகழ்ச்சி. இந்த நிகழ்ச்சிக்கான சடங்கினைத்தான் தொல்காப்பியம் 'கரணம்' என்கின்றது. திருமண நிகழ்ச்சிக்கான சடங்குகள் காலந்தோறும், தேயம் தோறும் வேறுபட்டுள்ளன. நமது தமிழ்நாட்டில் பண்டைக்காலம் தொட்டு இன்றுவரை எத்தனையோ வகையில் சடங்குகள் மாறியுள்ளன.

மங்கல மகளிர் நால்வர் கூடித் திருமணத்தை நடத்திவைத்ததாக அகநானூறு கூறுகின்றது. இங்கே திருமணச் சடங்கினை நடத்திவைத்தவர்கள் பெண்கள்.

பார்ப்பனப் புரோகிதர்கள் இல்லாமல் இன்றும் சில சமுதாயப் பிரிவினர் வழிவழியாகத் தங்களுக்குள்ளேயே ஒருவரைக் கொண்டு சடங்கினைச் செய்யச் சொல்லித் திருமணம் நடத்துகின்றனர். சமுதாயத்தின் மேல்நிலையில் இருந்த பார்ப்பனர்களின் பழக்க வழங்கங்களில் சிலவற்றை ஏற்றுக்கொண்ட தமிழ்ச் சமுதாய மேட்டுக் குடியினர் அவர்களைக் கொண்டு திருமணச் சடங்குகளைச் செய்ய விரும்பினர். இந்த விருப்பம் காலப்போக்கில் நதிக்கரை நாகரிகத்தில் அதிகம் பரவியது. வசதி படைத்தோர் இந்தப் பார்ப்பனப் புரோகிதத்தை வரவேற்றனர்.

இதனை ஒரு வாய்ப்பாகக் கருதிய பார்ப்பனர்கள், தாங்கள் வந்திருந்து மந்திரம் சொல்லித் திருமணத்தை நடத்திவைத்தால்தான் அது திருமணம். இல்லையேல் அது திருமணமாகாது என மக்களை மயங்கவைத்தனர்.

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் பார்ப்பனர்கள் நடத்திவைக்கும்

திருமணமே சட்டப்படிச் செல்லும் எனத் தங்களுக்கு ஒரு பாதுகாப்பையும் அவர்கள் ஏற்படுத்திக் கொண்டனர். இந்த வகையான சாஸ்திரங்களைத்தான் பொய்ச் சாஸ்திரங்கள் என்கிறான் நமது பாரதி.

தந்தைப் பெரியாரின் சுயமரியாதை இயக்கம் நமது இல்லத் திருமணங்களில் பார்ப்பனப் புரோகிதம் கூடாது என்பதை வலியுறுத்தியது. காலப்போக்கில் அது வெற்றி பெறத் தொடங்கியது. இதனைச் 'சுயமரியாதைத் திருமணம்' எனப் பெயரிட்டு அழைத்தார் பெரியார்.

காலம் செல்லச் செல்ல அனைத்துப் பிரிவினரும் இந்தத் திருமண முறையைப் பின்பற்றத் தொடங்கினர். அவ்வாறு பின்பற்றத் தொடங்கியவர்களில் கடவுள்நம்பிக்கை உடையவர் களும் உள்ளடங்கினர்.

பார்ப்பனர் எதிர்ப்பு சமஸ்கிருத மொழி எதிர்ப்பு அதே சமயம் கடவுள் நம்பிக்கை ஏற்பு என்ற வகையில் திருமணம் நடத்த வேண்டும் எனப் பலர் விரும்பினர்.

தவத்திரு குன்றக்குடி அடிகளார் முதலான சமயச் சான்றோர்களை அழைத்து, திருமணத்தை நடத்தினர். இவர்கள் நடத்திவைக்கும் திருமணங்களில் கடவுள் வழிபாடு இருக்கும், தீபங்கள் (திருவிளக்குகள்) இருக்கும். மற்றபடி நிறைகுடம், வேதிகை, அரசாணிக்கால், அம்மி முதலான பொருட்கள் இடம் பெறா. இதுவும் சிலருக்குக் குறையாகத் தோன்றியது. இங்கேதான், இந்த இடத்தில்தான் நமது தமிழ்ப் புரோகிதர்கள் உள்ளே வருகிறார்கள்.

யானை கோலம் செய்து புறப்பட்டாற்போலத் தங்களைப் பார்ப்பனப் புரோகிதர்கள் போன்று கோலம் செய்துகொண்டனர். நெற்றியில் பட்டையாகத் திருநீறு, கழுத்தில் உருத்திராட்ச மாலை, தங்கச் சங்கிலி, இன்னோரன்ன அணிகள் அங்கங்களை அலங்கரிக்கத்

திருமண மேடையேறினர்.

பார்ப்பனப் புரோகிதத்தில் இடம்பெறும் அத்தனைப் பொருட்களும் இவர்கள் நடத்திவைக்கும் திருமணத்தில் இடம்பெறும். பார்ப்பனர்கள் சடங்கு காட்டக் கொண்ட பொருள்களுக்குத் தமிழ்ப் புரோகிதர்கள் அவரவர் தங்கள் தங்களுக்குத் தோன்றிய வண்ணம் பொருள் சொல்லத் தலைப்பட்டனர். சான்றுக்கு ஒன்று.

## அரசாணிக்கால்

இதற்கான மூன்று விளக்கங்கள்.

1. இது அரசன் ஆணைக்கால் எனப்படும். அரசனுடைய செங்கோல் எங்கும் சென்று ஆட்சி நடத்துவது போன்று அரசனுடைய ஆணையின் சார்பாக நிறுவப்படுகிறது இது. அவனுடைய சார்பில் இங்கே வைக்கப்படுவதால் இது இப்பெயர் பெற்றது என்கிறார் ஒருவர்.

2. இன்னொருவர்: இது அணைக்கால். நிறை குடங்கள், கீழே விழாமல் இருக்க அக்குடங்களை இதில் அணைத்துக் கட்டுவதால் இப்பெயர் பெற்றது என்கிறார்.

3. மூன்றாவது புரோகிதர்: அரச மரத்தையே 'போதி மரம்' என்பர். போதி என்றால் ஞானம். இதுபற்றியே மரங்களில் இதனை அரசு மரம் என்பர். இந்த ஞானமரத்தின் கிளையைக் கொண்டுவந்து வைப்பதால் வண்டிக்கு அச்சாணி எவ்வளவு முக்கியமோ அதைப்போன்று வாழ்க்கைக்கு ஞானம் ஆணியாக இருக்கிறது என்பதைச் சுட்டவே இப்பெயர் பெற்றது என்கிறார். அரச மரத்தின் போத்துக்குப் பதில் இப்போது வேறு மரங்களின் கால்கள் பயன்படுகின்றன. ஞானசம்பந்தர் காலத்தில் அரசிலை கொண்டு கலசநீர் வீசப்பட்டது. தற்போது மாவிலையைப் பயன்படுத்துவது போன்றது இது என்கிறார்.

இதற்கு அடுத்த கட்டமாகத் தமிழ்ப் புரோகிதர்கள் தேவார

திருவாசகத் திருமுறைகளைப் பயன்படுத்தத் தலைப்பட்டனர். அக்னிசாட்சியாக, தேவர்கள் சாட்சியாக, இங்கே கூடியுள்ளோர் சாட்சியாக, உன்னை நான் என் மனைவியாக ஏற்றுக் கொள் கிறேன் என மணமகன் கூறும் உறுதி மொழிக்குச் சற்றும் சம்பந்தப்படாத ஒரு தேவாரப் பாடலை அந்தச் சமயத்தில் சொல் கின்றனர். இது வேடிக்கையாக உள்ளது.

தமிழ்ப் புரோகிதர்கள் தேவார திருவாசகத் திருமுறைகளைப் பயன்படுத்தத் தலைப்பட்டனர். அக்னிசாட்சியாக, தேவர்கள் சாட்சியாக, இங்கே கூடியுள்ளோர் சாட்சியாக, உன்னை நான் என் மனைவியாக ஏற்றுக் கொள் கிறேன் என மணமகன் கூறும் உறுதி மொழிக்குச் சற்றும் சம்பந்தப்படாத ஒரு தேவாரப் பாடலை அந்தச் சமயத்தில் சொல் கின்றனர். இது வேடிக்கையாக உள்ளது.

பார்ப்பனர் எதிர்ப்பு, சமஸ்கிருதமொழி எதிர்ப்பு, கடவுள் மறுப்பு, சட்ட எதிர்ப்பு என்ற வகையில் கட்டப்பட்ட சுயமரியாதைத் திருமணம் இப்படிப் பலவகையாக மாறிக்கொண்டிருக்கிறது.

## திருமணத்தில் தேவாரம்

நமது சைவ சமயக் குடும்பத் திருமணங்களில் தேவாரம் முதலான திருமுறைகள் ஓதப்பட வேண்டும். ஓதுவார்கள் இருப்பார்களேயானால் அவர்களைக் கொண்டும், இல்லையேல் தேவாரம் பாடும் அன்பர்களைக் கொண்டும் பாடச் சொல்லலாம். திருமுறைகள் பாடும் சூழல் உருவாக்கப்பட வேண்டும். பெரும்பாலான இல்லங்களில் இந்தச் சூழல் இருப்பதில்லை. சூழல் சரியில்லையேல் திருமுறைகள் ஓதுவதைத் தவிர்த்தல் நல்லது. இதுவே நமது கருத்தாகும்.

திருமண மேடைகளில் நிகழ்ச்சிக்கான சடங்கினைச் செய்பவர் தேவாரப் பாடல்கள் ஓதுவதைத் தவிர்க்க வேண்டும். ஏனெனில் அப்பாடல்கள் பாடப்படும்போது அவற்றை ஒருவரும் செவிமடுப்பதில்லை; மதிப்பதில்லை. பார்ப்பனர் மந்திரங்கள் ஓதுவதை நம்மவர் எவ்வாறு மதிக்காமல் இருக்கின்றார்களோ அதைப்போலவே இவற்றையும் மதிப்பதில்லை.

## திருஞானசம்பந்தர் தேவாரம்

டாக்டர் நாவலர் பாரதியார் அவர்கள் ஒரு திருமண நிகழ்ச்சியில் கலந்து கொண்ட போது கலியாண மந்திரத்திற்குப் பதில், கருமாதி மந்திரத்தை ஒரு புரோகிதர் சொன்னதாகவும் அவரை அழைத்து நாவலர் கடிந்து கொண்டதாகவும் சொல்வர். அந்த நிகழ்ச்சிக்குச் சற்றும் குறையாத நிகழ்ச்சியாகவே ஞானசம்பந்தர் தேவாரத்தை நமது தமிழ்ப் புரோகிதர்கள் பயன்படுத்துகின்றனர். தேவாரத் திருமுறையை இங்கேதான் பாட வேண்டும், இப்படித்தான் பாட வேண்டும், இந்தப் பொருளில்தான் பாட வேண்டும் என்னும் மரபை மீறுகிறார்கள்.

டாக்டர் நாவலர் பாரதியார் அவர்கள் ஒரு திருமண நிகழ்ச்சியில் கலந்துகொண்டபோது கலியாண மந்திரத்திற்குப் பதில், கருமாதி மந்திரத்தை ஒரு புரோகிதர் சொன்னதாகவும் அவரை அழைத்து நாவலர் கடிந்துகொண்டதாகவும் சொல்வர். அந்த நிகழ்ச்சிக்குச் சற்றும் குறையாத நிகழ்ச்சியாகவே ஞானசம்பந்தர் தேவாரத்தை நமது தமிழ்ப் புரோகிதர்கள் பயன்படுத்துகின்றனர். தேவாரத் திருமுறையை இங்கேதான் பாட வேண்டும், இப்படித்தான் பாட வேண்டும், இந்தப் பொருளில்தான் பாட வேண்டும் என்னும் மரபை மீறுகிறார்கள்

மதுரையில் சமணர்களை வாகைசூடி மகிழ்ந்திருந்த ஞானசம்பந்தரைக் காண அவரைப்பெற்ற தாதை சிவபாத இருதயர் வருகிறார். அவர் வரவை அறிந்த சம்பந்தர் தந்தையை எதிர்கொண்டு எப்பொழுது வந்தீர்கள்? எனக் கேட்டு உவந்திருந்தார்.

பெற்ற தாதையைக் கண்டவுடன் பேணுகின்ற தாதை நினைவிற்கு வர அவரைப்பற்றி உசாவுகின்றார். ஒருவர் தொலைதூரத்தில் இருக்கும்போது அவர் ஊரைச் சேர்ந்த இன்னொருவர் அங்கே வந்தால் இருப்பவர் வந்தவரைப் பார்த்துத் தனக்கு வேண்டியவர்களின் நலன் பற்றி விசாரிப்பது வழக்கம்தானே. அந்த வகையில் ஞானசம்பந்தர் பாடிய பாடல்கள் மூன்றாம் திருமுறையில் 24ஆம் பதிகமாகச் சேர்க்கப்பட்டு விளங்கிவருகின்றன.

அந்தப் பதிகத்தின் முதல் பாடல்தான் இவர்களிடம் மாட்டிக் கொண்டு படாதபாடு படுகிறது. பாட்டைப் பார்ப்போம்.

*"மண்ணில்நல்ல வண்ணம் வாழலாம் வைகலும்*
*எண்ணில்நல்ல கதிக்கு யாதுமோர் குறைவிலைக்*
*கண்ணில் நல்லஃதுறும் கழுமல வளநகர்ப்*
*பெண்ணில்நல் லாளொடும் பெருந்தகை இருந்ததே"*

என்பதுதான் அந்தப்பாடல்.

"கண்ணுக்கினிய காட்சிகளோடு நல்ல வளமுடைய கழுமலம் என்னும் நகரில் பெண்ணின் நல்லவளாகிய உமாதேவியுடன் பெருந்தகையாகிய சிவபெருமான் இருப்பதை நாள்தோறும் நினைத்து வழிபட்டால் இம்மண்ணுலகில் நல்ல வகையில் வாழலாம். மேலும் செல்லும் கதிக்கு (மறுமைக்கு) எந்த விதத்திலும் குறைவிருக்காது" என்பது இப்பாடலின் பொருள்.

இங்கே சொல்லப்பட்டிருக்கும் பொருளுக்கு ஈற்றடியின் நான்காம் சீரில் காணப்படும் 'ஏ'காரம் அசையாகக் கொள்ளப்பட்டுள்ளது. அதாவது நான்காம் சீர் 'இருந்தது' எனக் கொள்ளப்படுகிறது.

இந்த 'ஏ'காரத்தை அசையாகக் கொள்ளாமல் வினா ஏகாரமாகக் கொண்டும் பொருள் கூறலாம். அவ்வாறு பொருள் கூறினால் 'பெண்களில் நல்லவளாகிய உமாதேவியுடன் பெருந் தகையாகிய சிவபெருமான் நன்றாக இருக்கிறாரா?" என வினாப்பொருள் வரும். அதாவது நான்காம் சீர் "இருந்ததே" எனக் கொள்ளப்படுகிறது.

இவ்விரண்டு பொருள்களும் ஏற்பனவாக இருப்பினும் இரண்டில் எந்த ஒன்று சரியாக இருக்கும்? என்ற கேள்வியைச் சேக்கிழாரிடம் கேட்டால், அதற்கு அவர் 'ஏ'காரத்தை வினாப்பொருளில் கொள்வதே சரி என்கின்றார். அதற்கான காரணத்தைச் சேக்கிழார் மிக அருமையாகக் கூறுகிறார்.

பெற்ற தந்தையைப் பார்த்தவுடன் ஏற்றதந்தை நினைவுக்குவர

உள்ளத்துள் எழுந்த பெருமகிழ்ச்சியுடன் நெஞ்சில் நிறைந்து நிற்கும் அன்பினால் அது தொடர்பாக ஊற்றெடுக்கம் கண்ணீர்ப்பெருக தந்தையைப் பார்த்து "அப்பா நலமாக உள்ளரா?" எனக் கேட்டு அந்தக் கேள்வியையே திருப்பதிகமாக அருள்செய்தார் ஞானசம்பந்தர் என்கின்றார் சேக்கிழார்.

*"மண்ணினல்ல என்றெடுத்து மனத்தெழுந்த பெருமகிழ்ச்சி*
*உண்ணிறைந்த காதலினால் கண்ணருவி பாய்ந்தொழுக*
*அண்ணலார் தமைவினவித் திருப்பதிகம் அருள்செய்தார்*
*தண்ணறும்பூம் செங்கமலத் தாரணிந்த தமிழ்விரகர்."*

இந்தப் பாடல் ஞானசம்பந்தர் சரிதை சொல்லும் புராணத்தில் 881–ஆம் பாடல். இந்தப் பாடலின் மூன்றாவது வரியின் பொருள் யாது? தலைவனாகிய சிவபெருமானைப் பற்றி நலம் விசாரித்துத் திருப்பதிகம் செய்தார் என்பது பொருள். 'வினவி' என்னும் சொல்லைச் சேக்கிழார் பயன்படுத்தியது ஞானசம்பந்தர் தேவாரத்தில் காணப்படும் 'ஏ'காரம் வினாப் பொருளைக் குறிக்கிறது என்பதை உள்ளத்துள் கொண்டதால் என்க. ஏனெனில் மதுரையில் பெற்ற தந்தையைக் கண்டபோது பாடியதால், ஞானசம்பந்தர் தொலை தூரத்தில் இருக்கும் சூழ்நிலையைக் கருதி 'ஏ'காரத்தை வினாப்பொருளில் கொள்கிறார் சேக்கிழார். இந்த அருமை எண்ணிப் பார்க்க வேண்டிய ஒன்றாகும்.

என்னை எடுத்தாண்ட பெருந்தகை (தந்தை) பெண்களின் நல்லவளாகிய உமையுடன் (தாய்) நன்றாக இருக்கிறாரா? எனக் கேட்கிறார். பதில் என்னவாயிருக்கும்? நன்றாக இருக்கிறார் என்பதாக இருக்கும். அப்படி நன்றாக இருக்கும் அவரை நாள்தோறும் எண்ணினால் மண்ணிலும் வாழலாம், விண்ணிலும் வாழலாம் என்னும் பொருள் தரும் இந்தப் பாடல் திருமணச் சடங்கிற்கு எந்த வகையில் உதவி செய்யும்?

மேலும் மணமக்களைப் பார்த்து சீர்காழி நகரில் வீற்றிருக்கும் அப்பனையும் அன்னையையும் நாள்தோறும் நீங்கள் நினைத்து வழிபட்டால் இந்த உலகத்தில் நல்லபடி வாழலாம் என்பதோடு

நிறுத்தினால் அது வாழ்த்தாக அமையும். அதற்கு அடுத்ததாக, நீங்கள் மரணமுற்ற பிற்பாடு அடையப்போகும் மறுஉலக வாழ்வில் நல்ல கதி கிடைக்கும் எனச் சொல்வது எந்த அளவிற்கு மணமேடையில் பொருந்திவரும். இந்தப் பொருளை நமது தமிழ்ப் புரோகிதர்கள் மணமேடையில் மணமக்களைப் பார்த்துச் சொல்ல முடியுமா?

நல்ல தேர்ந்தெடுத்த மங்கலம் வல்லதான நூலில் கோர்க்கப்பட்டுள்ள இந்தத் திருமாங்கல்யத்தை, உங்களுக்குக் கணவராக வருகின்ற .... அவர்கள், உங்கள் கழுத்தில் அணிவிக்கிறார்கள். உங்கள் உற்ற துணையால் அவர் ஆயுள் நீடிக்கவும்; அவர் ஆயுள் நீடிக்க நீடிக்க, உங்கள் ஆயுள் நீடிக்கும் என்பது உறுதியாக இருப்பதாலும்; இங்கே கூடியிருக்கும் நாங்கள் அனைவரும் அந்தப் பரம்பொருளை வணங்கி வேண்டி மணமக்களாகிய உங்களை வாழ்த்துகின்றோம்!

*வாழ்க வளத்துடன்!*
*வாழ்க வளத்துடன்!*
*வாழ்க வளத்துடன்!*

எனச் சொல்லித் திருமணச் சடங்கை நிறைவுசெய்யலாமே!

வைணவர் இல்லங்களில் ஆண்டாள் பாசுரம் இடம் பெறுகிறது. "வாரணம் ஆயிரம்" எனத் தொடங்கும் அந்தப் பாசுரத்தில் வேத நெறிகளுடன் தனது திருமணம் நடந்ததாகவும், அதனைக் கனவில் கண்டதாகவும் ஆண்டாள் கூறுகிறாள். இதனையும் அவர்கள் சடங்கு காட்டப் பயன்படுத்துவதில்லை.

'மண்ணில் நல்ல வண்ணம்' எனத் தொடங்கும் பாடலுக்கு விரிவான விளக்கம்

"மண்ணில் நல்ல வண்ணம்" எனத் தொடங்கும் ஞான சம்பந்தர் பாடல் திருமணச் சடங்கிற்கு ஏற்றதன்று என நான் முதல் பதிப்பில் எழுதிய கருத்தைத் திருநெல்வேலி பக்கத்து அன்பர்கள் முற்றாக ஏற்று மகிழ்ச்சியைத் தெரிவித்தனர். கோவைப் பகுதி அன்பர்கள்

முற்றாக ஏற்காமல் மேலும் விளக்கம் தேவை என்றனர்.

இந்த நிலையில் நான் மிகவும் போற்றி வழிபடும் ஓரிடத்திலிருந்து எனது கருத்தை மறுக்காமல் அதேசமயம் மாறுபட்டு அவர்கள் பத்திரிகையில் விளக்கம் எழுதப்பட்டது. அவர்கள் தந்துள்ள விளக்கம் எந்தவகையினும் ஏற்புடையதாகாது என நான் தக்க நியாயங்களை எடுத்துக் காட்டி எழுதினேன். அவற்றை வாசகர்கள் அறிந்துகொள்ள வேண்டியது இன்றியமையாதது என்ற எண்ணத்தில் அவற்றைத் தருகின்றேன்.

1. "மணமக்களை மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் என அறவுரை வழங்குவது திருமுறை" எனத் தங்கள் இதழில் எழுதியுள்ளீர்கள். அது தொடர்பாகத் தங்களிடம் சில கேள்விகள்.

(அ) இவ்வறவுரை மணமக்களுக்கு மட்டும் கூறப்படுகிறதா? அல்லது பொதுவாக எல்லார்க்கும் கூறப்படுகிறதா?

மணமக்கள் மண்ணில் நல்லவண்ணம் வாழலாம் என்று மணமக்களைச் சுட்டும் தொடராக இது இல்லையே!

"மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்" என்று பொதுவாகத் தானே உள்ளது.

(ஆ) மணமக்களைச் சுட்டி நிற்கின்றது இவ்வறவுரை என்பதனை எதனைக் கொண்டு கூறுகிறீர்கள்?

(இ) பாடலில் உள்ள எந்தச் சொல்லால் எந்தத் தொடரால் அதனை அறியமுடிகிறது? காட்ட முடியுமா?

(ஈ) சரி! வேறு எங்கேயாவது யாராவது திருமுறைகளில் மணமக்களுக்கு அறவுரை சொல்லியுள்ளார்களா? சான்று உண்டா? அல்லது தங்கள் சொந்தக் கருத்தா?

(உ) 'அறவுரை வழங்குவது திருமுறை' என்று தங்கள் வாசகத்தில் காணப்படும் 'திருமுறை' என்னும் சொல் 'மண்ணில் நல்லவண்ணம்' என்னும் சம்பந்தர் பதிகப்பாடலை மட்டும் குறித்து நிற்கிறதா? அல்லது மூவர் பாடல்களையும் சுட்டி நிற்கின்றதா?

**அடுத்து;**

2. "எண்ணில் நல்லகதிக்கு யாதுமோர் குறைவிலை என எழுதுமறை கூறுகிறது. கதி என்றால் வீடுபேறு என்று மட்டும் சிந்தியாமல் உயர்வடைதல் என்பதே இத்தொடருக்கு உரியது எனலாம்" என்கிறீர்கள். மேலும் கதி என்பது வரலாறு, பற்றுக்கோடு வழி என்னும் பொருள்களையும் சுட்டி நிற்கின்றது என்பதுடன் "நல்லெண்ணம் உடையவர்களாகப் பற்றுக்கோட்டுடன் விளங்க வேண்டும். கதி என்பது வழி ஆதலின் நல்லகதிக்கு என்பது நல்லவழி எனக் கொள்ள வேண்டும்" என்றும் விளக்கம் தருகிறீர்கள்.

'கதி' என்பதற்கு வீடுபேறு அல்லது மோட்சம் என்று பொருள் கொள்ளக்கூடாது, அதற்கு நல்லவழி என்றே பொருள் கொள்ள வேண்டும் என்பதாகவே தங்கள் விளக்கம் உள்ளது.

இந்த விளக்கத்திலிருந்து 'கதி' என்றால் நல்லவழி என்பதும் அதனால் உயர்வடைதல் என்பதும் தாங்கள் கருதும் பொருள் என்பது புலப்படுகிறது.

அப்படியாயின் உயர்வடைதல் எவ்விடத்தில்? மண்ணிலா? விண்ணிலா? என்ற கேள்விக்கு மண்ணிலே (இந்த உலகத்தில்) உயர்வடைதல் என்பதே தங்கள் பதிலாக இருக்கின்றது. இது சரியா என்பது பற்றி ஆய்வோம்.

இப்போது பாடலின் முதல் இரண்டு அடிகளைப் பார்ப்போம்.

*"மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் வைகலும்*
*எண்ணில் நல்ல கதிக்கு யாதுமோர் குறைவிலை"*

என்பன அந்த அடிகள்.

பாடலில் காணப்படும் இரண்டாவது அடிக்கு மணமக்கள் நல்லவழியைக் (கதி) கொண்டு ஒழுகினால் இந்த உலகில் உயர்வடையலாம் எனப் பொருள் தருகிறீர்கள்.

அப்படியாயின் முதல் அடிக்கு என்ன பொருள் தருவீர்கள். அந்த முதலடிக்கு மண்ணில் (நிலஉலகில்) நல்லபடி வாழலாம் என்னும் பொருளைத் தவிர வேறு பொருளை யாராலும் தரமுடியாதே! ஞானசம்பந்தராலும் கூட வேறுபொருள் தர முடியாதே!

பாடலுக்குரிய இரண்டு அடிகளிலும் மண்ணில் (நிலஉலகில்) நன்றாக வாழலாம் என்ற ஒரே பொருள்படும்படியாகவா நமது தமிழாகரர் பாடியிருப்பார். பாடியிருக்கமாட்டார். அப்படிப் பாடவும் இல்லை என்பதுதான் உண்மை. எந்தப் புலவரும் கூறியது கூறல் என்னும் குற்றத்திற்கு ஆளாகமாட்டார். அதிலும் நமது ஞானக்குழந்தை அக்குற்றத்திற்கு ஆளாகிறார் எனத் தாங்களும் சொல்ல மாட்டீர்கள்.

பாடலின் முதல் அடிக்குச் சந்தேகமே இல்லாமல் மண்ணில் நல்லபடி வாழலாம் எனப் பொருள் கொள்ளும் போது அடுத்த அடிக்கு வேறு பொருள்தானே சொல்ல முடியும். நல்லகதி என்பதற்கு நல்லவழி எனப்பொருள் சொல்லும் தாங்கள், அந்த நல்லவழியால் விண்ணுலகில் நல்லபடி வாழலாம் எனப் பொருள் கொண்டால்தான் பாடலின் உண்மையான அர்த்தம் மற்றவர்கட்குப் புரியும். ஆனால் தாங்கள் ஏதோ ஒரு குழப்பத்தில் ஆட்பட்டு மற்றவர்களையும் குழப்பத்திற்கு உள்ளாக்கி விடுகிறீர்கள். மண்ணுலகம் என்பதற்கு எதிர்ச்சொல் விண்ணுலகம்தானே! வெறுமனே கதி எனச் சொல்லாமல் ஞானத்தமிழாகரர் 'நல்ல' என அடைகொடுத்துச் சொல்லியிருக்கும் அருமை எண்ணிப்பார்க்க வேண்டியதாயிற்றே!

கதி என்பது வரலாறு, பற்றுக்கோடு, வழி என்னும் பொருள்களையும் சுட்டி நிற்கின்றது என்கிறீர்கள். தாங்கள் கூறியுள்ளதற்கு மேற்பட்டு குதிரைநடை, பிறப்பு, சக்தி, கருவி, நிலை எனப் பல பொருள்கள் இருப்பினும் சமய உலகில் 'கதி' என்னும் சொல் மோட்சம் அதாவது

வீடுபேறு என்ற பொருளிலேயே வழங்கி வருகின்றது.

'பரகதி இழக்கும் பண்பு ஈங்கில்லை' – சிலப்பதிகாரம்

"சார்பொடு கதிகளில்" – மணிமேகலை

"சிவசிவ என்றிட சிவகதி தானே" – திருமூலர்

'கதிக்கான மோன வடிவே' – தாயுமானவர்

"காதலும் வெறுப்பும் நீங்கிக் கதிவிழைந் திருக்கின்றோம்"
– (குற்றால தலபுராணம்)

'காரணன் அருளானாகில் 'கதிப்பவன்' இல்லையாகும்'
– (சித்தியார்)

"தொண்டரைத் தானே தூயகதியினில் தொகுப்பன்"
– (சித்தியார்)

என்பனவாகிய வாக்குகள் விண்ணுலகம் செல்லும் வழியைத்தானே கூறி நிற்கின்றன.

'தூயகதி' என அருள்நந்தி ஆளும் சொல் 'நல்லகதி' என நமது சம்பந்தர் கூறிச் சென்றதன் மறுபதிப்பே அல்லவா! ஆக நல்லகதி என்பது சமய நோக்கில் நில உலகில் வாழும் நல்ல வழி எனப் பொருள்தராது என்பதும் அது விண்ணுலக வாழ்க்கையையே குறித்து நிற்கிறது என்பதும் தெளிவு.

பதிகம் என்ற சொல் பத்துப்பாடல்களின் தொகுப்பு என்பது தங்கட்கும் தெரியும். 'மண்ணில் நல்லவண்ணம்' எனத் தொடங்கும் பாடல், பத்துப்பாடல்களில் முதல் பாடலாக இருக்கிறது. இந்த முதல் பாடல் மணமக்களுக்கு அறவுரை கூறும்பாடலாக இருக்கிறது என்கிறீர்கள். அப்படியாயின் மீதி ஒன்பது பாடல்கள் யாருக்கு அல்லது யார் யாருக்கு அறவுரை கூறிக்கொண்டுள்ளன என்று சொல்லமுடியுமா? சொல்லமுடியாது. ஏனெனில் உண்மையில் இந்தப்

பத்துப்பாடல்கள் அடங்கிய பதிகம் யாருக்கும் அறவுரை கூறுவதாக இல்லை. மாறாக சம்பந்தர் தனது நெஞ்சுக்குக் கூறுவதாகச் சொல்லப்பட்டுள்ளது.

சம்பந்தர் தனது நெஞ்சுக்குக் கூறியதை மணமக்களுக்குக் கூறியதாகச் சொல்வது மிகவும் பிழையான கருத்தாகும்.

சம்பந்தர் தனது நெஞ்சுக்குக் கூறியதை மணமக்களுக்குக் கூறியதாகச் சொல்வது மிகவும் பிழையான கருத்தாகும்.

இந்தப் பதிகம் எந்தச் சூழலில் எங்கிருந்து பாடப்பட்டது? மதுரையில் சமணர்களை வாதில் வென்று சம்பந்தர் இருக்கும்போது அவரைப் பார்க்க சீர்காழியிலிருந்து அவர் தந்தையார் சிவபாத இருதயர் வருகிறார். வந்த தகப்பனாரை வரவேற்ற சம்பந்தர் சீர்காழியில் அனைவரும் நலமாக இருக்கிறார்களா எனக் கேட்கிறார். அவ்வாறு கேட்கும்போது தன்னைப் பிள்ளையாக ஏற்றுக்கொண்ட சிவபெருமானையும் உமாதேவியையும் உளப்படுத்தியே கேட்கிறார். அவ்வாறு கேட்ட அவருக்கு அங்கே அனைவரும் நலமே எனப் பதில் சொல்கிறார் சிவபாத இருதயர். இது மதுரைக் காட்சி.

தன்னை ஏற்ற தந்தைபற்றி பெற்ற தந்தையிடம் கேட்ட பின்பு தனது நெஞ்சுக்குக் கூறுவதாகச் சீர்காழி பெருமானின் சிறப்புக்களைக் கூறுவதே இந்தப் பதிகம் என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

பத்துப்பாடல்களில் ஒருபாடலை எடுத்து வைத்துக்கொண்டு அந்த ஒரு பாடலிலும் ஓர் அடியை எடுத்து வைத்துக்கொண்டு அது மணமக்களுக்கு அறவுரை கூறுகிறது என்பதை என்னென்று சொல்வது?

பத்துப்பாடல்களில் ஒருபாடலை எடுத்து வைத்துக்கொண்டு அந்த ஒரு பாடலிலும் ஓர் அடியை எடுத்து வைத்துக்கொண்டு அது மணமக்களுக்கு அறவுரை கூறுகிறது என்பதை என்னென்று சொல்வது?

பதிகத்தின் 4,5,6,7 ஆகிய நான்கு பாடல்களில் முறையே

*"அயர்வுளோம் என்று நீ அசைவொழி நெஞ்சமே!"*
*"அடைவிலோம் என்று நீ அயர்வொழி நெஞ்சமே!"*
*"மற்றொரு பற்றிலை நெஞ்சமே!"*
*"குறைவளை வதுமொழி குறைவொழி நெஞ்சமே!"*

எனவரும் சம்பந்தர் வாக்கில் உள்ள "நெஞ்சு" என்ற சொல்லை மாட்டெறிதல் அல்லது கொண்டுகூட்டுதல் எனும் உத்தி கொண்டு பிறபாடல்களுக்கும் சேர்த்துப் பார்க்க வேண்டும். இதுதான் உரைகாணும் முறை. உங்கள் விருப்பப்படி எல்லாம் பொருள் சொல்லக்கூடாது.

இந்தமுறையில் முதல் பாடலாகிய "மண்ணில் நல்ல" என்று தொடங்கும் பாடலுக்குப் பொருள் காண்போம்.

*"ஏ நெஞ்சே! கண்ணில் நல்ல காட்சிகளே*
*பொருந்துகின்ற கழுமலம் எனப் பெயருடைய*
*வளப்பம் பொருந்திய நகரில், பெண்ணில்*
*நல்லவளாகிய உமையுடன் கூடிப் பெருந்தகை*
*யாகிய ஈசன் இருப்பதை நாள் தோறும்*
*நினைத்து வழிபட்டால் இந்த நிலஉலகில் நல்லபடி*
*வாழலாம், மேலும் நீ செல்ல இருக்கின்ற*
*மேலுலகில், எந்தக்குறையும் இருக்காது"*

இதுதான் முதல் பாடலுக்கான பொருள். இதில் எங்கே வந்தது மணமக்களுக்கு அறவுரை இல்லையே!

இவற்றையெல்லாம் பார்க்கினும் தாங்கள் மிகவும் ஊன்றிக் கவனிக்க வேண்டிய ஒன்றை, மேம்போக்காகக் கூடக் கவனிக்காமல் விட்டுவிட்டீர்கள். அது எது?

சம்பந்தர் பாடலைத் திருக்கடைக்காப்பு என்பது மரபு என்பதைத் தாங்கள் அறிவீர்கள். பத்துப் பாடல்கள் முடிந்த நிலையில் பதினோராவது பாடலைப்பாடி அந்த இறுதிப்பாடலில் நான் மேலே சொல்லிவந்த பத்துப்பாடல்களை ஒருவர் மனம் ஒன்றிச் சொன்னால்,

சொல்பவருக்கு இந்தப் பயன் கிட்டும் எனக்காப்புச் செய்து முடிப்பார். இது சம்பந்தர் வழக்கம். இவ்வாறு சொல்வதற்கு அவருக்கு அதிகாரம் உண்டு. எப்படி? அவர் ஈசன்பிள்ளை என்பதால் என்க.

அந்த வகையில் 'மண்ணில் நல்ல' எனத் தொடங்கும் எனது பதிகத்தைப் பாடினால் கிடைக்கும் பயன் மோட்சம் எனக்கூறுகிறார் சம்பந்தர்.

*"அருந்தமிழ் ஞானசம் பந்தன செந்தமிழ்*
*விரும்புவா ரவர்கள்போய் விண்ணுல காள்வரே"*

என்பது திருக்கடைக்காப்புத் தொடர்கள். விண்ணுலகு ஆள்வர் என்றால் என்ன அர்த்தம்? மோட்ச உலகில் சென்று சேர்வர் என்பது பொருள். மோட்ச உலகில் ஒருவர் எப்போது சேரமுடியும். இறந்தபின்பு தானே!

*'அருந்தமிழ் ஞானசம்*
*பந்தன செந்தமிழ்*
*விரும்புவா ரவர்கள்போய்*
*விண்ணுல காள்வரே'*

என்பது திருக்கடைக்காப்புத் தொடர்கள். விண்ணுலகு ஆள்வர் என்றால் என்ன அர்த்தம்? மோட்ச உலகில் சென்று சேர்வர் என்பது பொருள். மோட்ச உலகில் ஒருவர் எப்போது சேரமுடியும். இறந்தபின்பு தானே!

பதிகப் பயனாகிய 'விண்ணுலகு ஆள்வர்' என்பதை மனத்துள் கொண்டு 'நல்லகதி' என்னும் சொல்லுக்குப் பொருள்காண வேண்டும். இன்றும் நமது பேச்சு வழக்கில் அவனுக்கு 'நல்லகதி' கிடைக்காது எனப் பயின்று வருவதைப் பார்க்கலாம்.

பிறபதிகங்களில் எல்லாம் பாவம் பறையும், வினை ஓயும், இன்பம் மிகும் எனப் பயன் சொல்லியவர் இந்தப் பதிகத்தில் விண்ணுலகு ஆளும் பயன்கிட்டும் என்கிறார். உண்மையான ஈசன் அடியவர் ஒவ்வொருவரும் வேண்டுவது வீடுபேறே! அந்த வீடுபேறு இந்தப் பதிகத்தால் கிடைக்கிறது என்றால் மகிழச்சிதானே!

அருளாளர்கள் தம் நெஞ்சுக்குக் கூறுவதாகவும் அறிவுறுத்து

வதாகவும் பாடல்கள் சொல்வது ஒருவகை. அவ்வாறு அவர்கள் தங்கள் தங்கள் நெஞ்சுக்குக் கூறுவதாகப் பாடல் சொல்லினும், அவர்களின் நெஞ்சங்களைத் தங்கள் நெஞ்சாகவே படிப்போர் அனைவரும் கொள்வர். அந்த வகையில் சம்பந்தரின் இந்தப் பதிகத்தைப் படிக்கும் பக்தர்கள் சம்பந்தரின் நெஞ்சைத் தங்கள் நெஞ்சாகக் கொண்டு ஏ நெஞ்சே! நீ சீர்காழிச் சிவபிரானை நாளும் நினைந்து வழிபட்டால் உயிர்போகும் காலத்து நல்லகதி (மோட்சம்) கிடைக்கும் என நெஞ்சுக்குச் சொல்லி மகிழ்வர்.

> சம்பந்தரின் இந்தப் பதிகத்தைப் படிக்கும் பக்தர்கள் சம்பந்தரின் நெஞ்சைத் தங்கள் நெஞ்சாகக் கொண்டு ஏ நெஞ்சே! நீ சீர்காழிச் சிவபிரானை நாளும் நினைந்து வழிபட்டால் உயிர்போகும் காலத்து நல்லகதி (மோட்சம்) கிடைக்கும் என நெஞ்சுக்குச் சொல்லி மகிழ்வர்.

இவ்வாறு பொருளைப் பொதிந்து கொண்டுள்ள பதிகப் பாடலை மணமேடையில் நின்றுகொண்டு, திருமணம் செய்யும் மணமக்களிடம் மந்திரங்களுக்குப் பதிலாகச் சொல்லி அவர்களைத் திருப்பிச் சொல்லுங்கள் எனச் சொல்ல முடியுமா? அதிலும் பாடலுக்கான பொருளைச் சொல்லிக்காட்டிச் சொல்லுங்கள் எனக் கூறமுடியுமா? விளைவு வேறாக இருக்கும்.

மண்ணுலகு ஆள்வதும், விண்ணுலகு ஆள்வதும் இயற்கைதானே என வழக்குப் பேசுபவர்கள், அவர்கள் வீட்டுத் திருமண நிகழ்ச்சியில் மணமக்களிடம் பாடலின் பொருளைச் சொல்லிக்காட்டிப் பின்பு பாடலைச் சொல்லச் சொல்வார்களா? சொல்லமாட்டார்கள்.

## பெருந்தகை

தமிழில் கிடைக்கும் அருமையான சொற்கள் பலவற்றில் இந்தப் பெருந்தகை என்னும் சொல்லும் ஒன்றாகும். எவர் ஒருவர் தன்னை முழுவதுமாகப் பிறருக்காக ஒப்படைக்கின்றாரோ அவரைப் பெருந்தகை எனச் சுட்டிச் சொல்வர்.

யாவருக்கும் தந்தையாம் எனும் சிவன், உமாதேவி வழி, பால்

அடிசில் ஊட்டித் தமக்குரிய பிள்ளையாகக் காழிக் கன்றை ஆட்கொண்டதால் 'ஆளுடைய பிள்ளையாராய்' அந்த இறைவனைப் போன்று தேவருக்கும் மூவருக்கும் தெரிய முடியாத ஒப்பற்ற சிவஞானத்துடன் சம்பந்தராயினார் (தொடர்புடையராயினார்) என்னும் சேக்கிழார் வாக்கில் ஈசன் தன்னை முழுவதுமாக இந்தக் குழந்தையிடம் ஒப்புவித்தார் என்ற பொருள் பொதிந்து கிடப்பதைக் காண முடியும்.

அனுமன் செய்துள்ள உதவிக்கு ஈடு இணை வைக்க முடியாது. அவனுக்கென எந்தப் பொருளைத் தந்தாலும் சரிப்பட்டு வராது. என்ன செய்தான் இராமன்? "போர் உதவிய திண்தோளாய் பொருந்துறப் புல்லுக" என்றான். இதற்கு என்ன பொருள்? இராமன் தன்னை முழுவதுமாக அனுமனிடம் தருகிறான் என்பது பொருள்.

ஊருக்கு உதவ வேண்டும் என்ற எண்ணமுடைய செல்வர்கள் மூவகைப்படுவர் என்கின்றார் திருவள்ளுவர்.

முதல் வகை: ஊருணியில் இருக்கும் தண்ணீர் போன்று அதாவது ஊருணியில் இருக்கும் பிற பொருள்கள் நீங்கித் தண்ணீர் மட்டும் பயன்படுவது போன்ற ஒரு நிலையில் மட்டும் பயன்படுவர்.

இரண்டாம் வகை: ஊரின் நடுவில் நின்று பயன்தரும் மரம், குறிப்பிட்ட காலத்தில் பழுத்து மிகுதியாகப் பயன்படுவது போலப் பயன்படுவர்.

மூன்றாம் வகை: மருந்து மரம் போன்று அதாவது குறிப்பிட்ட காலம் என்று இல்லாது, குறிப்பிட்ட அளவு என இல்லாது எல்லாக் காலங்களிலும் எல்லா அளவிலும் நின்று கொழுந்து, தளிர், இலை, சருகு, பட்டை, குச்சி, கிளை, தண்டு, வேர் என உச்சி முதல் அடிவரை முழுவதுமாகப் பயன்படும் மருந்து மரம் போலப் பயன்படுவர்.

மூன்றாவதாகக் காணப்படும் மருந்து மரம் போன்ற ஒருவனைத்தான் 'பெருந்தகை' என்னும் சொல் கொண்டு பெருமைப்படுத்துகின்றார்

திருவள்ளுவர்.

*"மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்*
*பெருந்தகை யான்கண் படின்"*

என்பதுதான் அந்த அருமைத் திருக்குறள். திருவள்ளுவர் வாக்கில் மருந்து மரம் போலத் தன்னை முழுவதுமாகத் தந்து நிற்பவன் பெருந்தகையாகின்றான்.

கம்பன் வாக்கில் அனுமனுக்குத் தன்னை முழுவதுமாகத் தருகின்ற இராமன் பெருந்தகையாகின்றான்.

சேக்கிழார் வாக்கில் குழந்தையாகிய சம்பந்தரிடம் தன்னை முழுவதுமாகத் தந்துவிட்ட ஈசன் பெருந்தகை ஆகின்றான்.

திருவள்ளுவராலும் ஞானசம்பந்தராலும் கருதிக் கருதிச் சொல்லப்பட்ட 'பெருந்தகை' என்னும் சொல்லை ஒன்றுக்கும் பற்றாத, மணமகனுக்காக்கி அவனைச் சுட்டிக்காட்டும் இந்தப் புரோகிதர்கள் பற்றி என்ன சொல்வது?

திருவள்ளுவராலும் ஞானசம்பந்தராலும் கருதிக் கருதிச் சொல்லப்பட்ட 'பெருந்தகை' என்னும் சொல்லை ஒன்றுக்கும் பற்றாத, மணமகனுக்காக்கி அவனைச் சுட்டிக்காட்டும் இந்தப் புரோகிதர்கள் பற்றி என்ன சொல்வது?

எங்கள் ஊரில் ஒரு செல்வந்தர். சென்ற காலத்தில் அவர் எப்படி இருந்தார்? அவருக்குச் செல்வம் எப்படிச் சேர்ந்தது? என்பதைப் பலர் அறிவர். அவர் மகனுக்குத் திருமணம். நானும் சென்றிருந்தேன். இப்படிப்பட்டவர்களில் பலர் தங்கள் நாட்டுப் பற்றும், இனப்பற்றும், மொழிப் பற்றும், சமயப் பற்றும் நிரம்பக் கொண்டவர்கள் என்பதாகக் காட்டிக் கொள்ள, திருமணம் போன்ற தங்கள் வீட்டு நிகழ்ச்சிகளை அமைத்துக்கொள்வர் என்பது தெரிந்ததே.

இவர் வீட்டுத் திருமணம் தமிழ் வழி நடத்தப்படும் என அச்சிடப்பட்டிருந்தது. (ஏதோ நம்வீட்டுத் திருமணம் எல்லாம் அந்நிய மொழியில் நடந்தது போல) திருமணத்தை நடத்தி வைத்த நமது புரோகிதர் ஞானசம்பந்தரின் இந்தப் பாடலைச் சொல்லிப்

'பெருந்தகை' இருந்ததே! என மணமகனை நோக்கி மனம் மகிழச் சுட்டிக்காட்டுகின்றார். அந்தச் செல்வரின் மகன் பற்றிக் காவல்துறை நன்கறியும். தான் பெறும் தொகைக்காகப் (துட்சிணை) பெருந்தகையைப் பாடாய்ப்படுத்துகிறார்கள்.

உமாதேவியைக் காட்டிலும் வேறு ஒரு பெண் நல்லவளாகச் சிறந்தவளாக இருக்க முடியுமா? முடியாதே. அந்த அருமை கருதி சம்பந்தரால் சுட்டப்படும் 'பெண்ணின் நல்லாள்' என்னும் வாசகத்தை மோசமான பெண்ணுக்கு ஏற்றிக்கூறும் இந்தப் புரோகிதரின் செயலை என்னவென்று சொல்வது?

இன்றைய தமிழகத்தில், சைவத்தையும், சைவம் சார்ந்த திருநெறிய தமிழையும் சைவ மரபினையும் சரியாகத் தெரிந்து வைத்திருப்பவர்கள் தருமபுர ஆதீனத் தலைவரே எனக்கூறின் அது மிகையாகாது.

அகவையால், யாக்கையால், அனுபவத்தால், மூத்தவர் அவர்கள். தேவாரம் முறையாகப் பயின்று தேவார ஓதுவாராக இறை பணியைத் தொடங்கி ஆதீன அடியவராகிப் பின் 'பட்டணம் சுவாமி'யாகிப் படிப்படியாக உண்மைத்தவத்தால் உயர்ந்து, தருமை ஆதீனக்குரவராக, ஆதீன அடியவர்களால் குறிப்பாக அடைந்துபோன தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் அவர்கள்.

தேவாரத்தை இப்படித்தான் ஓதவேண்டும், இந்த இடத்தில் இந்த முறையில்தான் ஓத வேண்டும், இந்த இந்தக் காலங்களில் இந்த இந்தத் தேவாரங்களைத்தான் ஓத வேண்டும், கேட்போர் நிலை அறிந்து ஓத வேண்டும் எனக் காலம், இடம், நிலை பற்றிக் கூறுவதற்கு முழுத் தகுதியும் உரிமையும் படைத்தவர் தருமபுர ஆதீனத் தலைவர் என்பதை மனம் கொள்ள வேண்டும். தேவாரத் திருமுறைகளில் ஏதேனும் ஐயம் ஏற்பட்டால் அதனைத் தீர்த்துக்கொள்ள இவர்களைவிட்டால் வேறு எங்கே செல்வது? பேராசிரியர் சொல்லட்டும்.

## நேர் நெறி வேண்டும்

திருவாய்மொழியையோ மற்ற பிரபந்தங்களையோ பொருள் புரியாமல் வைணவர்கள் இதுபோன்று நெறியல்லா நெறிக்குப் பயன்படுத்துவதில்லை. அவ்வாறு பயன்படுத்த அவர்கள் அனுமதிக்கமாட்டார்கள். சமய ஒழுங்கு அவர்களிடம் இருப்பது போன்று நம்மவர்களிடம் இருப்பதில்லை. இஸ்லாம், கிறுத்துவம், சீக்கியம், சமணம், பௌத்தம் முதலான மதங்களில் அவர்கள் நூல் கோட்பாட்டிற்கு மாறாகச் செல்வதே இல்லை. ஆனால் நம்மவர்களில் சிலர் திருநீறு பூசிக்கொள்வதாலேயே தங்களைச் சைவர் என அடையாளப்படுத்திக்கொண்டு நெறியல்லா நெறியில் சென்று அடாத செயல்களைச் செய்கின்றனர். இதுபற்றியே அடைந்துபோன தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் "வைணவ சமயம் கற்பு நெறி சார்ந்தது. சைவம் அப்படியில்லையே, கலப்படமாகிப் பல ஆண்டுகள் ஆகிவிட்டன" என வருந்திக் கூறுகின்றார்கள்.

## பேதை வினை

திருஞானசம்பந்தர் தமக்கு உபநயனம் செய்யவந்த சமார்த்தர்களைப் பார்த்து, "நிறுத்துங்கள்! உங்கள் வடமொழி மந்திரங்களை" எனக் கூறித் தடுத்து 'நமச்சிவாயப் பதிகம்' பாடித் தமிழ் மந்திரம் ஓதுக! எனச் சொன்னதாக ஒருவர் கூறுகிறார். தமிழ் மந்திரம் ஓதுக! எனச் சம்பந்தர் சொன்ன பின்னர், அவர்கள் தமிழ் மந்திரம் ஓதினார்களா? சம்பந்தர் காலத்துக்கு முன் தமிழ் மந்திரம் இருந்ததா? அல்லது தாம் பாடிய பதிகமே மந்திரம் என்று அதனைப் பாடச் சொன்னாரா? அவர்கள் அதையாவது பாடினார்களா? அவர் சுட்டும் தமிழ் மந்திரம் எது? கூறித் தெளிவிப்பாரா?

இவருக்கு இச்செய்தி எங்கிருந்து கிடைத்தது எனத் தெரியவில்லை. "பிள்ளை பாதி புராணம் பாதி" என்னும் வாக்கிற்குள்ளாகும் சேக்கிழார் பெரியபுராணத்தில் இவ்வாறு செய்தி காணப்படவில்லை.

பெரியபுராணத்தை இவர் சரியாகக் கற்கவில்லை என்பது இவரது

வெற்றுரை கொண்டு அறியமுடிகிறது. வேதங்களில் விதித்துள்ள சடங்குகளை வடமொழி மந்திரங்கள் வழிதான் வேதியர்கள் செய்தார்கள். அந்த மந்திரங்களை ஒதி அவர்கள் நடத்திய சடங்கின் வழி நின்றுதான் தோலொடு நூல் தாங்கினார் ஞானசம்பந்தர் எனத் தெளிவாகச் சொல்கிறார் சேக்கிழார்.

பெரியபுராணத்தை இவர் சரியாகக் கற்கவில்லை என்பது இவரது வெற்றுரை கொண்டு அறியமுடிகிறது. வேதங்களில் விதித்துள்ள சடங்குகளை வடமொழி மந்திரங்கள் வழிதான் வேதியர்கள் செய்தார்கள். அந்த மந்திரங்களை ஓதி அவர்கள் நடத்திய சடங்கின் வழி நின்றுதான் தோலொடு நூல் தாங்கினார் ஞானசம்பந்தர் எனத் தெளிவாகச் சொல்கிறார் சேக்கிழார்.

"தொல்லைமறை விதிச்சடங்கு மறையோர் செய்யத் தோலொடு நூல் தாங்கினார் சுரர்கள் போற்ற" என்பது சேக்கிழார் வாக்காகும். இந்த வாக்கின் பொருள் யாது? பழமையான வேதங்களில் சொல்லப்பட்டுள்ள முறைப்படி (பூணூல் அணிவதற்கான) சடங்குகளை வேதியர் செய்ய (அவற்றை ஏற்று) தேவர்கள் போற்ற மான்தோலொடு கூடிய நூலை ஞான சம்பந்தர் அணிந்துகொண்டார் என்பது பொருள். பூநூல் அணிந்த பின்புதான் பதிகம் அருளப் படுகிறது. பதிகம் அருளுவதற்கு முன்பு வேத நெறிக்குப் புறம்பான நெறி வகுத்து, அதையும் வேத நெறிதான் என்று காட்டிவரும் வேதியர்கட்குச் சம்பந்தரால் வேதம் விளக்கப்படுகிறது என்பதை அறிந்துகொள்ள வேண்டும். கல்லெழுத்துப் போல அச்சில் இருக்கும் சேக்கிழார் வாக்கையே புரிந்துகொள்ளாமல், மாற்றிக்கூறும் இவர், காற்றில் வந்த தருமபுர ஆதீனத் தலைவர் கருத்தினைப் பிழைப்புக்காக திரித்துக் கூறுவதில் வியப்பில்லையே! பேராசிரியர் இதனைப் புரிந்துகொள்ள வேண்டும்.

இதனைத்தான் நமது வள்ளுவப் பேராசான்,

*"பொய்ப்படும் ஒன்றோ புனைபூணும் கையறியாப்*
*பேதை வினைமேற் கொளின்"*

எனக்கூறிச் செல்கின்றார். சேக்கிழாரின் இரண்டு வரிகளுக்கே

பொருள் புரியாத இவருக்குப் பஞ்சாக்கர திருப்பதிகத்திற்கும், நமச்சிவாய திருப்பதிகத்திற்கும் இடையேயான வேறுபாடு எங்கே தெரியப்போகிறது? பாவம்!

## பகுதி II

### வேள்வி

வேள்வி செய்தல் என்னும் நிகழ்ச்சிக்கான, சடங்கு சம்பிரதாயங்களில் பலவகை உண்டு. வேள்விகளும் பலவாகச் செய்யப்படுகின்றன. எனினும் வேள்விக்கான சடங்குகளுக்கு வேதங்களே கருவி நூல்களாம். இவ்வேதங்கள் வடமொழியில் உள்ளன. இந்த வேள்வி முறை தமிழர்களுக்கு உரியது அன்று என்பர் ஒரு சாரார். மற்றொரு சாரார் பண்டைத் தமிழர்கள் வேள்விகளைப் போற்றிக் கைக்கொண்டுள்ளனர் என்பர். நாம் இங்கே பேசுவது வேள்வி உரியதா? இல்லையா? என்பது பற்றியோ, வேண்டுமா? வேண்டாமா? என்பது பற்றியோ அன்று.

வேள்விச் சடங்குக்குரிய வேத மந்திரங்களுக்குப் பதிலாகப் குறிப்பாக அவி சொரிகின்ற காலத்தில் தமிழ்த் திருமுறைகளைப் பயன்படுத்தலாமா? கூடாதா? என்பது பற்றியே. எனினும் தமிழகத்தில் வேள்வி பற்றியக் கொள்கை எவ்வாறு இருந்தது என்பதைத் தெரிந்துகொள்வது நல்லது. அதனைச் சுருக்கமாகக் காண்போம். முதலில் வேள்வி தமிழர்களுக்குக் கிடையாது என்பார் கூற்றை எடுத்துக்கொள்வோம்.

### வேள்வி இல்லை

தமிழர்கள் வேள்வி செய்யாதவர்கள். இவர்களுக்கு வேள்வி வழிபாடு கிடையாது. உருவத்தை வழிபடும் தமிழர்கள் உருவ வழிபாடற்ற வேள்விகளைப் போற்றவில்லை. தேவர்களுக்கு அக்னி வழியாக அவி உணவு அனுப்பும் வழக்கம் இவர்களிடம் கிடையாது.

வைதிகம் எனப்படும் அக்னிச் சடங்குத் தமிழர்களுக்குத் தெரியாது. வேதம்பற்றி இவர்கள் அறியாதவர்கள் என்பன போன்ற கருத்துக்களை வேள்வி இல்லை என்பார் கூறுகின்றனர்.

இவர்கள் கூற்றைத் தள்ள முடியாது. இதில் உண்மை உண்டு. சான்றுக்கு இரண்டு இடங்களைப் பார்ப்போம்.

மாங்குடி கிழார் என்னும் புலவர் பெருமானால் பாடப்பட்ட பாட்டொன்று புறநானூற்றில் காணப்படுகிறது. (335ஆம் பாடல்) அதில், பகைவர் கூட்டத்தை முன்னின்று விலக்கி, எதிர்வந்த களிற்றை வெட்டி வீழ்த்தி பின்பு போர்க்களத்தில் பட்டு வீழ்ந்த வீரனுக்காக நடப்பட்ட நடுகல்லின் முன்னின்று வழிபடுவதைத் தவிர, வேறு வகையில் நெல்தூவி வழிபடும் கடவுள் இல்லை என்ற செய்தி காணப்படுகிறது. அதாவது அந்த வீரனே கடவுள். வேறு கடவுள் இல்லை. இங்கே நடுகல் உருவ வழிபாடாகிறது.

இந்தப் பாடலில் இன்னொரு குறிப்பும் கிடைக்கிறது"நெல் உகுத்துப் பரவும் கடவுளும் இலவே" என்னும் தொடர் கொண்டு, "நெல் தூவிப் பரவும் கடவுள்" வேறு உண்டு, ஆனால் இங்கே இவனே கடவுள் என்ற குறிப்புத்தான் அது.

இந்தப் பாடல் எந்தச் சமயச் சார்பும் இன்றித் தனித்து இருக்கும் நடுகல் வழிபாட்டைக் குறிக்கின்றது. இங்கே வேறு எந்தச் சடங்கும் கிடையாது. இது பண்டைத் தமிழரின் வழிபாட்டு முறையில் ஒன்றாகும்.

அடுத்து சமயக்கோட்டுபாடுகள் நன்கு வேரூன்றிவிட்ட சங்ககாலம். இக் காலகட்டத்தில் தோன்றியதே திருமுருகாற்றுப் படை. முருகப்பெருமானின் ஆறு முகங்களில் ஒன்று,

*"மந்திர விதியின் மரபுளி வழாஅ*
*அந்தணர் வேள்வி ஓர்க்கும்"*

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. 'வேதத்தில் சொல்லப்பட்ட வழியில், முறைப்படி வழுவாது நிற்கும் அந்தணர்களின் யாகங்களில் நோக்கம் செலுத்தும்' (ஒருமுகம்) என்பது இத்தொடர்களுக்கான

*"மந்திர விதியின் மரபுளி வழாஅ*
*அந்தணர் வேள்வி ஓர்க்கும்"*

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. 'வேதத்தில் சொல்லப்பட்ட வழியில், முறைப்படி வழுவாது நிற்கும் அந்தணர்களின் யாகங்களில் நோக்கம் செலுத்தும்' (ஒருமுகம்) என்பது இத்தொடர்களுக்கான பொருள்.

பொருள்.

"வேள்வி முற்றிய வென்றுஅடு கொற்றம்" என்னும் தொடரில் யாகம் பேசப்படுகிறது.

'அருமறைக் கேள்வி' என்னும் தொடரில் 'அருமையான வேதத்தின் உபதேச மந்திரம்' என வேதம் பற்றிப் பேசப்பட்டுள்ளது.

இவ்வாறு வேள்வி அது தொடர்பான வேதம் திருமுருகாற்றுப்படையில் பேசப்பட்டாலும், முருக வழிபாடு வேத வழியில் இல்லாமல் முற்றிலும் வேறுவகையாகக் காட்டப்படுகிறது.

*"செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி*
*மதவலி நிலைஇய மாத்தாள் கொழுவிடைக்*
*குருதியொடு விரைஇத் தூவெள் அரிசி*
*சில்பலிச் செய்து பல்பிரப்பு இரீஇ"*

என்னும் திருமுருகாற்றுப்படை தொடர்களுக்கான பொருளைக் காண்போம்.

'முருகனை வழிபாடாற்றுவிக்கின்ற வேலன், தனது கைமணிக்கட்டில் சிவப்பு நூலைக் கட்டிக்கொண்டு, (காப்புக்கயிறு) வெண்மையான பொரியைத் தூவி மிகுந்த பலம் பொருந்திய பெரிய கால்களை உடைய கொழுத்த ஆண் ஆட்டின் இரத்தம் கொண்டு பிசையப்பட்ட தூய வெண்மையான அரிசியை (சிவப்பு அரிசி இரத்த அரிசி) சிறுபலியாக இட்டுப் பல நிவேதனப் பொருள்களைப் பாத்திரங்களில் பரப்பி வைத்துப் படையல் போடுகிறான்' என்பது மேலே காணப்படும் வரிகளுக்கான பொருளாகும். இன்னும் பலவாறு பலபொருள்களைக் கொண்ட வழிபாடு ஆற்றிய பின்பு முருகப் பெருமான் "பண்டைத்தன் மணம் கமழ் தெய்வத்து இளநலம் காட்ட" கூடியிருப்போர் அவனை வணங்குகின்றனர் எனச் சொல்கிறது திருமுருகாற்றுப்படை.

இதனையே

*"தொண்டகம் தொடுமின் சிறுபறை தொடுமின்*
*கோடுவாய் வைம்மின் கொடுமணி இயக்குமின்*
*குறிஞ்சி பாடுமின் நறும்புகை எடுமின்*
*பூப்பலி செய்ம்மின் காப்புக்கடை நிறுமின்*
*பரவலும் பரவுமின் விரவுமலர் தூவுமின்"*

என இன்னொரு வகையில் சொல்கிறது சிலப்பதிகாரம்.

## திணைமக்கள்

முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனப் பண்டைத் தமிழர் நிலத்தை நான்கு பகுப்பாகக் கொண்டனர். பின்பு, பாலை என்ற ஒரு நிலமும் கொள்ளப்பட்டது. இந்த ஐவகை நில மக்களைத் திணை மக்கள்' எனச் சொல்வது புலவர் வழக்கம். நகரத்து நாகரீகம் மிகுதியும் தாக்கப்படாத உள்ளூர்கள் (சிற்றூர் கிராமம்) இந்த நூற்றாண்டிலும் நமது நாட்டில் உள்ளன. அதிலும் குறிப்பாக மலைசார்ந்த இடங்கள், வறண்ட பகுதிகள் ஆகியவற்றில் வாழ்வோரை நகர நாகரீகம் இன்னும் முழுவதுமாகப் பற்றாமல் இருப்பது வியப்பே. இந்த மக்களின் கடவுள் வழிபாடு நகரமக்களின் வழிபாட்டிலிருந்து முற்றிலும் மாறுபட்டிருப்பது கண்கூடு. இவர்களே திணைமக்களாவர்.

திருமுருகாற்றுப் படையில் காணப்படும் செய்திகள் இதனைத்தான் குறித்து நிற்கின்றன. நகர மக்களிடம் வேதம், வேள்வி முதலானவை (அதாவது கடவுட் கொள்கை' என்ற ஒன்றைக் கொண்டோரிடம் அது பற்றிய சிந்தனை வளர்ந்தோரிடம்) வேரூன்றின.

சிற்றூர் மக்களிடம் அந்த முறை வேரூன்றாமல் வழிவழியாக அவர்கள் கைக்கொள்ளும் வழக்கமே இருந்து வந்தது என்பதாகும். சிலம்பின் வேட்டுவ வரி பாலைநில மக்களின் வழிபாட்டை நமக்கு நன்கு தெரிவிக்கின்றது. அதே வேட்டுவவரியில் பல இடங்களில், வேதம் வேதத்தில் சொல்லப்படும் தெய்வங்கள் அத்தெய்வங்களின் ஆற்றல்கள் ஆகியன பேசப்படுகின்றன.

எப்படியாயினும் வேத முறை இல்லாமல் வேள்வி

செய்யாமல் பண்டைத் தமிழர்கள் தங்கள் கடவுள் வழிபாட்டினைக் கொண்டிருந்தனர் என்பதும், உருவ வழிபாடு அவர்களுக்கு முக்கியம் என்பதும் மறுக்க முடியாத உண்மைகளாகும்.

## வேள்வி உண்டு

வேத வேள்வி இல்லாமல் உருவ வழிபாட்டைத் தமிழர்கள் கொண்டிருந்தனர் என்பது எந்த அளவு உண்மையோ அந்த அளவு சங்ககாலத்தில் வேத வேள்விகள் சமயக் கோட்பாடுகள் வேரூன்றிவிட்டன என்பதும் உண்மை. இந்தக் கோட்பாடுகள் முழுவதுமாக நகர நாகரீகத்தின்பாற்பட்டே இருந்தன என்பதை நாம் மறந்துவிடக் கூடாது.

வேத வேள்வி இல்லாமல்
உருவ வழிபாட்டைத் தமிழர்கள்
கொண்டிருந்தனர் என்பது எந்த
அளவு உண்மையோ அந்த
அளவு சங்ககாலத்தில் வேத
வேள்விகள் சமயக் கோட்பாடுகள்
வேரூன்றிவிட்டன என்பதும் உண்மை

என்னதான் சங்ககாலப் புலவர்கள் அக்கால மக்களின் பழக்கம், வழக்கம், வீரம், காதல், பண்பாடு முதலானவற்றைப் பதிவு செய்திருந்தாலும், முடியுடை மூவேந்தர்களையும் வேளிர்களையும்சார்ந்தே அவர்கள் வாழ்க்கை அமைந்து இருந்ததால், அவர்களை ஒட்டிய செய்திகளையே புலவர்களால் மிகுதியும் தர முடிந்தது. இந்த வேந்தர்களையும் வேளிர்களையும் பாராட்டுவதே அவர்கள் பணியாக இருந்தது. ஆற்றுப்படை நூல்கள், பதிற்றுப் பத்துப் பாடல்கள் அதனைச் சொல்லிக் கொண்டு இருக்கின்றன. அரசன் எவ்வழி, அவ்வழி மக்கள் என்பது அந்தக் காலத்தில் அசைக்க முடியாத ஒரு கோட்பாடு. அந்தக் கோட்பாட்டில் கடவுள் வழிபாடும் ஒன்று. முடியுடை மூவேந்தர்கள், அக்காலச் சமூகத்தில் 'அறிவுக்குத் தலைமை தாங்கியவர்கள்' எனப்பட்ட அந்தணர்கள் கைகாட்டும் வழியில் சென்றிருக்கின்றனர்.

இந்த அந்தணர்களைப் பார்ப்பார் என்ற பெயரிலே புலவர்கள்

சுட்டுகின்றனர். தொல்காப்பியம் தொடங்கிப் பாரதி காலம் வரை பார்ப்பார் பேசப்படுகின்றனர். "அறுவகைப்பட்ட பார்ப்பனர் பக்கமும்" என்பது தொல்காப்பியம். அதாவது ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் ஆறு செயல்களைச் செய்பவர்கள் இவர்கள். இவர்களை 'அறுதொழிலோர்' என்பார் திருவள்ளுவர். சிலர் 'அறுதொழில்' என்பதற்குத் தங்கள் மனம்போன போக்கில் பொருள் சொல்வர். அவை போலியானவை என்பது அவர்களுக்கே தெரியும்.

*ஓதல் வேதத்தை தங்களுக்குள்ளேயே ஓதிநிற்றல்.*
*ஓதுவித்தல் வேதத்தைப் பாடம் சொல்லுதல்.*
*வேட்டல் வேள்வியைத் தங்களுக்காகச் செய்தல்.*
*வேட்பித்தல் வேள்வியைப் பிறருக்காகச் செய்தல்.*
*ஈதல் தம்மிடம் இருக்கும் பொருளைப் பிறருக்குத் தருதல்.*
*ஏற்றல் பிறர் தரும் பொருளை ஏற்றுக்கொள்ளுதல்.*

சங்ககாலத்தில் தமிழர் வாழ்வோடு வேள்வியும் வேதமும் ஒன்றிப், பிரித்துப் பார்க்க முடியாத நிலைக்கு உட்பட்டுவிட்டன. சங்க நூல்கள் எல்லாவற்றிலும் வேள்வி பற்றியச் செய்திகள் பரவலாகக் காணப்படுகின்றன. சான்றுக்குச் சில இடங்களைப் பார்ப்போம்.

சங்ககாலத்தில் தமிழர் வாழ்வோடு வேள்வியும் வேதமும் ஒன்றிப், பிரித்துப் பார்க்க முடியாத நிலைக்கு உட்பட்டுவிட்டன. சங்க நூல்கள் எல்லாவற்றிலும் வேள்வி பற்றியச் செய்திகள் பரவலாகக் காணப்படுகின்றன.

## புறநானூறு

புறநானூற்றின் இரண்டாவது பாடல் சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதனுக்குரியது. இப்பாடலை முரஞ்சியூர் முடிநாகனார் என்னும் புலவர் பாடியுள்ளார். இந்தப்பாடலில் நால்வேதம் பற்றியும், அந்திக் காலத்தில் அந்தணர்கள் தங்கள் கடனைச் செய்யப் (சந்தியாவந்தனம்) பயன்படுத்தும் முத்தீ ஆகவணீயம், காருகபத்தியம், தென்திசை அங்கி) பற்றியும் சொல்லப்பட்டுள்ளன.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்னும் பாண்டியன் ஒருவன், இவனது பெயரின் முன்பு இருக்கும்

அடைமொழியே இவன் வேள்வியோடு எந்த அளவுக்கு ஒன்றிப் போயிருந்தான் என்பதைப் பறைசாற்றிக் கொண்டிருக்கின்றது. இவன் மீது நெட்டிமையார் என்னும் புலவர் பாடியதாகக் காணப்படும் 15ஆவது புறப்பாட்டில், "நற்பனுவல் நால்வேதம்", "வீயாச்சிறப்பின் வேள்வி," "யூபம் நட்ட வியன்களம்" என்னும் தொடர்கள், வேள்வித் தொடர்பான செய்திகளைச் சொல்லிக்கொண்டிருக்கின்றன.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்னும் பாண்டியன் ஒருவன், இவனது பெயரின் முன்பு இருக்கும் அடைமொழியே இவன் வேள்வியோடு எந்த அளவுக்கு ஒன்றிப் போயிருந்தான் என்பதைப் பறைசாற்றிக் கொண்டிருக்கின்றது.

சோழன் கரிகால் பெருவளத்தான் என்னும் மன்னனைக் கருங்குளவாதனார் என்னும் புலவர் பாடியுள்ளார். புறநானூற்றில் 224ஆம் எண்ணுக்குரியதாக இப்பாடல் இருக்கின்றது. "யூபநெடுந்தூண்", "வேத வேள்வி" ஆகிய தொடர்கள் கரிகாலன் வேள்வியோடு கொண்டிருந்த தொடர்பினைக் கூறிக்கொண்டுள்ளன.

மூவேந்தர்கள் மட்டும் அல்லாமல், மலையமான் திருமுடிக்காரி, அதியமான் நெடுமான் அஞ்சி முதலான வேளிர் தலைவர்கள் பற்றியப் பாடல்களிலும் வேள்வித் தொடர்பான செய்திகளைக் காணலாம்.

இவற்றையெல்லாம் காட்டிலும், சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கவுணியன் விண்ணந்தாயனைப் பற்றியப்பாடல் (புறம்: 166) சங்க காலத்தில் வேள்வி எவ்வாறு செய்யப்பட்டது? அதனைச் செய்பவர் யார்?, செய்வதற்கான கருவி நூல் யாது? அந்த நூலின் அங்கங்கள் எத்தனை? என்பனவாகிய பல செய்திகளை மிகத் தெளிவாகத் தெரிவிக்கின்றது. வேள்விக்குரிய பார்ப்பனர்களின் ஆறு தொழில்களில் "ஈதல்" என்பதும் ஒன்று. இந்தப் பாடலில் வேள்வி செய்த கவுணியன் விண்ணந்தாயன் வேள்வி காண வந்தோரை விருந்து ஏற்றதும், வந்த விருந்தினர்க்கு அவன் வரையாது வழங்கியதும் என்றும் காணாத ஒன்றாக இருந்தது என அவனைப் பலபடப் பாராட்டுகின்றார் ஆவூர் மூலங்கிழார்: படித்துப் பார்க்க

வேண்டிய இன்றியமையாப் பாடல் இது.

## பத்துப்பாட்டு

எட்டுத்தொகையைவிடப் பத்துப்பாட்டில் வேள்வி, வேதம், அந்தணர்கள் தொடர்பான செய்திகள் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன. ஒன்றிரண்டு இடங்களைப் பார்ப்போம்.

எட்டுத்தொகையை விடப் பத்துப்பாட்டில் வேள்வி, வேதம், அந்தணர்கள் தொடர்பான செய்திகள் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன.

## மதுரைக்காஞ்சி

(468 முதல் 474 வரையிலான அடிகள்)

*"சிறந்த வேதம் விளங்கப்பாடி*
*விழுச்சீர் எய்திய ஒழுக்கமொடு புணர்ந்து*
*நிலமவர் வையத்து ஒருதாம் ஆகி*
*உயர்நிலை உலகம் இவண்நின் றெய்தும்*
*அறநெறி பிழையா அன்புடை நெஞ்சின்*
*பெரியோர் மேஎய் இனிதின் உறையும்*
*குன்று குயின்றன்ன அந்தணர் பள்ளியும்"*

சிறந்த வேதங்களைப் பொருள் விளங்கும்படி ஓதுவார்கள், மற்றவர்கள் பின்பற்றும்படி சிறந்த ஒழுக்கத்துடன் வாழ்வார்கள். அறிவிலும், ஒழுக்கத்திலும் அவர்களுக்கு இணையாக இவ்வுலகில் வேறு யாரையும் சொல்ல முடியாது. உயர்ந்த உலகத்தை இங்கிருந்தபடியே பெறக்கூடிய சிறந்த அறநெறியைத் தவறாதவர்கள். எல்லாரிடத்தும் இரக்கம் கொள்ளும் இளகிய நெஞ்சம் படைத்தவர்கள் என்று பண்டைக் காலத்துப் பார்ப்பனர்கள் பற்றி மதுரைக்காஞ்சியின் இந்த வரிகளில் செய்திகள் சொல்லப்படுகின்றன.

சிறந்த வேதங்களைப் பொருள் விளங்கும்படி ஓதுவார்கள், மற்றவர்கள் பின்பற்றும்படி சிறந்த ஒழுக்கத்துடன் வாழ்வார்கள். அறிவிலும், ஒழுக்கத்திலும் அவர்களுக்கு இணையாக இவ்வுலகில் வேறு யாரையும் சொல்ல முடியாது. உயர்ந்த உலகத்தை இங்கிருந்தபடியே பெறக்கூடிய சிறந்த அறநெறியைத் தவறாதவர்கள். எல்லாரிடத்தும் இரக்கம் கொள்ளும் இளகிய நெஞ்சம் படைத்தவர்கள் என்று பண்டைக் காலத்துப் பார்ப்பனர்கள் பற்றி மதுரைக்காஞ்சியின் இந்த வரிகளில் செய்திகள் சொல்லப்படுகின்றன.

பெரும்பாணாற்றுப்படை பார்ப்பார் வாழ்கின்ற இடம்பற்றிக் கூறுவதைப் படித்து அனுபவிக்கலாம். மறைகாப்பாளர் எனப் பார்ப்பனர்கள் போற்றப்படுகின்றனர்.

## பதிற்றுப்பத்து

பதிற்றுப்பத்தில் தொட்ட தொட்ட இடமெல்லாம் "வேள்வி" பற்றிப் பேசப்படுகின்றது.

பதிற்றுப்பத்தின் மூன்றாம் பத்துக்குரிய சேர மன்னன் பல்யானை செல்கெழுகுட்டுவன். இவனைப் "பாலைக் கௌதமனார்" என்னும் பார்ப்பனப் புலவர், தமிழில் பத்துப் பாடல்கள் பாடினார். கேட்டு மகிழ்ந்த வேந்தன், "யாது நீர் வேண்டுவது என்ன" அதற்கு, "யானும் என்பார்ப்பனியும் சுவர்க்கம் புக வேண்டும்" எனப் புலவர் கூற, வேத வித்துக்களை அரசன் அழைத்து, ஒன்பது பெரு வேள்விகளைச் செய்விக்கப், பத்தாம் வேள்வி முடிவில் பார்ப்பானும் பார்ப்பனியும் சுவர்க்கம் சென்றனர் என மூன்றாம் பதத்தின் பதிகம் கூறுகிறது. இந்தச் செய்தியை இளங்கோவடிகள் தமது சிலப்பதிகாரத்தில் பதிவு செய்துள்ளார். ஏழாம் பத்தின் ஒருபாடலில் காணப்படும் வரிகளில்,

*"அறங்கரைந்து வயங்கிய நாவில் பிறங்கிய*
*உரைசால் வேள்வி முடித்த கேள்வி*
*அந்தணர் அருங்கலம் ஏற்ப"*

என வேள்வி, கேள்வி, அந்தணர் முதலான சொற்கள் இடம் பெற்றுள்ளமையைக் காணலாம்.

எட்டாம் பத்துக்குரிய பெருஞ்சேரல் இரும்பொறை "புத்திர காமேஷ்டி யாகம்" செய்துள்ளான்.

எட்டாம் பத்துக்குரிய பெருஞ்சேரல் இரும்பொறை "புத்திர காமேஷ்டி யாகம்" செய்துள்ளான்.

## எல்லாருமே தமிழர்கள்

சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி முதலான காப்பியங்களிலும், பின்னர் வந்த சமய இலக்கியங்களிலும் வேள்வி பற்றிப் பரக்கப் பேசப்படுகின்றது. "வேள்வியே கூடாது" எனச் சொல்லும்

சமணர்களால் போற்றிக் கொள்ளப்படுகின்ற 'சிந்தாமணி'யில் வேள்வி செய்தல் பேசப்படுவதுடன், வேள்வியில் வார்க்கும் நீரை வீரனாகிய சீவகன் ஏற்றான் என்ற செய்தி ஆச்சரியத்தைத் தருகிறது.

வேள்வி செய்த முடியுடை மூவேந்தர்களையும், வேளிர்களையும், அவர்களைப் பாராட்டிப் போற்றிப் புகழ்ந்த புலவர் பெருமக்களையும் தமிழர்கள் அல்லர் என ஒதுக்கிவிட முடியுமா? அவர்கள் தமிழர்கள் அல்லர் எனில் வேறு யாரைத்தான் தமிழர் எனச் சொல்வது?

வேள்வி செய்த முடியுடை மூவேந்தர்களையும், வேளிர்களையும், அவர்களைப் பாராட்டிப் போற்றிப் புகழ்ந்த புலவர் பெருமக்களையும் தமிழர்கள் அல்லர் என ஒதுக்கிவிட முடியுமா? அவர்கள் தமிழர்கள் அல்லர் எனில் வேறு யாரைத்தான் தமிழர் எனச் சொல்வது?

தொல்காப்பியம் மற்றும் புறம் முதலான சங்க இலக்கியங்கள், திருக்குறள் முதலான அற இலக்கியங்கள் காப்பியங்கள் ஆகியவற்றில் பேசப்படும் பார்ப்பனர்களைத் தமிழர்கள் அல்லர் எனத் தள்ளிவைக்க முடியுமா? தள்ளிவைப்போம் எனக் கூறுபவர்களால் அதற்குத் தக்கக் காரணங்களைக் காட்ட முடியுமா?

தொல்காப்பியம் மற்றும் புறம் முதலான சங்க இலக்கியங்கள், திருக்குறள் முதலான அற இலக்கியங்கள் காப்பியங்கள் ஆகியவற்றில் பேசப்படும் பார்ப்பனர்களைத் தமிழர்கள் அல்லர் எனத் தள்ளிவைக்க முடியுமா? தள்ளிவைப்போம் எனக் கூறுபவர்களால் அதற்குத்தக்க காரணங்களைக் காட்ட முடியுமா?

பார்ப்பார் வாழ்கின்ற இடத்திற்குப் போனால், அருந்ததியைப் போன்றக் கற்புடையப் பார்ப்பனப் பெண்களால் சமைக்கப்பட்ட பாற்சோறு, பருப்புச் சோறு முதலியவற்றைப் பெறுவீர்கள். 'இராசான்னம்' என்னும் பெயர் பெற்ற உயர்ந்த 'நெற்சோறு' கிடைக்கும் என்னும் பெரும்பாணாற்றுப்படைச் செய்திகளைப் பார்த்தால், பார்ப்பார் வீட்டுக்கு யார் வேண்டுமானாலும் செல்லலாம், உண்ணலாம், உறவு கொண்டாடலாம் என்ற செய்திகள்தானே கிடைக்கின்றன. இவர்கள்

வேதம் படித்தவர்கள், வேள்வி செய்பவர்கள் என்பதால், தமிழர் அல்லர் எனக் கூற முடியுமா?

> *"இங்கே கூறப்படும் பார்ப்பார், தமிழ் நாட்டிலேயே பிறந்தவர்கள்; தமிழர் குடியிலே தோன்றியவர்கள்; தமிழர்களிலே கல்வியும் அறிவும் தனக்கென வாழாத் தன்மையும் மக்களுக்கு நல்வழி காட்டும் மாண்பும் பெற்றவர்கள்; இவர்களே அந்தணர்கள் என்றும் பார்ப்பார் என்றும் அழைக்கப்பட்டனர்"*

என்னும் சாமி. சிதம்பரனார் கருத்து இவ்விடத்தில் எண்ணிப் பார்க்க வேண்டிய ஒன்றாகும். இதுபற்றி விரிவாகத் தெரிந்துகொள்ள விரும்புவோர், திரு. கே.சி. லெட்சுமி நாராயணன் எழுதியுள்ள, "வேதங்களை ஏற்றுப் போற்றும் தமிழ் இலக்கியங்கள்" என்னும் நூலை வாங்கிப் படிக்கலாம்.

## வேள்விச்சாலை அல்லது யாகசாலை

சங்க காலத்தில் செய்யப்பட்ட வேள்விகள் தனி மனித விருப்பத்தின் பேரிலேயும், நன்மை தீமை கருதியும், இம்மை மறுமைப் பேறு நோக்கியும் மகப்பேறு வேண்டியும் வெற்றி மற்றும் வீழ்ச்சி வேண்டியும் செய்யப்பட்டனவாகத் தெரிகிறதே தவிர, திருக்கோயில்களில் தொடர்புடையனவாகவோ, இறைவன் திருமேனியைக் கோயில்கள் பிரதிட்டை செய்யும் காலத்துக் கைக்கொள்ளப்படும் யாகசாலை நிகழ்ச்சியாகவோ மேற்கொள்ளப்படவில்லை.

சங்க காலத்தில் செய்யப்பட்ட வேள்விகள் தனி மனித விருப்பத்தின் பேரிலேயும், நன்மை தீமை கருதியும், இம்மை மறுமைப் பேறு நோக்கியும் மகப்பேறு வேண்டியும் வெற்றி மற்றும் வீழ்ச்சி வேண்டியும் செய்யப்பட்டனவாகத் தெரிகிறது.

## சிலப்பதிகார வேள்வி

கனக விசயரைக் கைது செய்து கொண்டுவந்த முறை நன்றாக

இல்லை எனச் சோழனும் பாண்டியனும் கூறினர் எனக் கேட்ட சேரன், மிக்கக் கோபம் கொள்ள, அப்போது அவையின்கண் எழுந்து நின்று மாடலன் கூறும் கூற்றில் வேள்வி பற்றியச் செய்திகள் சிலம்பில் பேசப்படுகின்றன.

"போர்க்களத்தில் நின்று நீ செய்த வேள்வி மறக்கள வேள்வி. இனி நீ செய்ய வேண்டியது அரசர்க்குரித்தான அறக்கள கேள்வி. வானவர்கள் போற்றுகின்ற வழியினை நினக்களிக்கும் நான்மறை விதிப்படி வேள்வி செய்யும் பார்ப்பனர்கள் கூறும் அரசர்களுக்குரித்தான பெரிய நல்ல வேள்வியை நீ செய்ய வேண்டும். வேள்விக்குரிய நின் மனைவியோடு கூடி நீ இதனைச் செய்ய வேண்டும்" என மாடலன் சொல்ல, உடனே சேரன், நான்மறைகளின் மரபுகளை நன்றாகத் தெரிந்த நாவினராகக் கேள்விகள் யாவற்றையும் கேட்டு உணர்ந்த வேள்விமாக்களை மாடல மறையோன் சொல்லிய முறைப்படி வேள்விச் சாந்தியாகிய விழாவினைக் கொள்ளுமாறு ஏவினான் எனச் சிலம்பு சொல்கிறது.

இவ்விடத்திலே அரசர்க்கெனத் தனியே வகுக்கப்படும் வேள்வியே பேசப்படுகிறது என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

*"அருமறை மருங்கின் அரசர்க்கு ஓங்கிய*
*பெருநல் வேள்வி நீசெயல் வேண்டும்"*

(வரி. 176–177 நடுகற்காதை)

அடுத்து, கண்ணகிக்குக் கோயில் எடுப்பித்து, அக் கோயிலில் அவள் படிமத்தை பிரதிட்டை செய்ய அரசன் கட்டளையிட்டான் என்னும் நடுகற்காதைச் செய்தியிலும், "குடகக் கொங்கரும் மாளுவ வேந்தரும் கடல்சூழ் இலங்கைக் கயவாகு வேந்தனும் எங்கள் நாட்டிலும் நீ எழுந்தருள வேண்டும்" எனக் கண்ணகியிடம் வேண்டி நிற்கத் "தந்தேன் வரம்" எனக் கண்ணகி வரம்தர, அதனைக் கேட்ட சேரன் பின்னர் மாடலனுடன் வேள்விச் சாலைக்குச் சென்றான் என்னும் வரந்தரு காதைச் செய்தியிலும் வேள்வி பேசப்படுகிறது.

இந்த இரண்டு இடங்களிலும் வேள்விச் செய்தி திருக்கோயிலைச்

சார்ந்த ஒன்றாகவே இருக்க வேண்டும் எனக் கருத இடம் தருகின்றது.

*"கைவினை முற்றிய தெய்வப் படிமத்து*
*வித்தகர் இயற்றிய விளங்கிய கோலத்து*
*முற்றிழை நன்கலம் முழுவதும் பூட்டிப்*
*பூப்பலி செய்து காப்புக் கடைநிறுத்தி*
*வேள்வியும் விழாவும் நாள்தொறும் வகுத்து*
*கடவுள் மங்கலம் செய்கென ஏவினன்"*

(வரி: 228–233 நடுகற்காதை)

கடவுள் மங்கலம் அருமையான சொல். பிரதிட்டை என்னும் சொல்லை இது குறித்து நிற்கின்றது. தற்காலத்தில் இறைவனைப் பிரதிட்டை செய்வதற்காக, அக்குறிப்பிட்ட நாளுக்கு முன்பு ஒன்றிரண்டு நாட்கள் யாகங்கள் செய்து ஆறுகால பூசை நான்கு கால பூசை இரண்டு கால பூசை எனச் செய்து வருவது நாமறிந்ததே. இப்பூசையை நிறைவேற்றும் இடத்தையே நாம் யாகசாலை என்கிறோம்.

வேள்வியும் விழாவும் நாள்தோறும் செய்து கண்ணகிப் படிமத்தைப் பிரதிட்டை செய்ய அரசன் ஏவினான் என்னும் இந்தச் செய்தியுடன், கண்ணகியைக் கடவுள் மங்கலம் செய்த பின்பு, அவள் திருமுன்பு நின்று வேற்று நாட்டு அரசர்கள் தங்கள் நாட்டில் செய்யும் இமயவரம்பனின் நாளணி வேள்வியில் எழுந்தருள வேண்டும் என வரம் கேட்க, அதற்குக் கண்ணகி ஒப்புதல் தர, அதனைக் கேட்ட பின்பு செங்குட்டுவன் மன்னர்கள் சூழ மாடலன் உடன்வர வேள்விச் சாலைக்குச் சென்று சேர்ந்தான் என்னும் வரந்தரு காதைச் செய்தியையும் சேர்த்து எண்ணிப்பார்த்தால் சேரன் சென்று சேர்ந்தது கண்ணகியைப் பிரதிட்டை செய்வதற்காக அமைக்கப்பட்ட யாகசாலைக்கே என்று கருதலாம்.

*"மாடல மடறையோன் தன்னொடும் கூடித்*
*தாழ்கழல் மன்னர் தன்னடி போற்ற*
*வேள்விச் சாலையின் வேந்தன் போந்தபின்"*

(வரி 163 170 வரந்தரு காதை)

என்கிறது சிலம்பு. இவ்வாறு இளங்கோவடிகள் தமது காப்பியத்தில் அரசன் தன்பொருட்டுச் செய்த வேள்வி பற்றியும் கண்ணகியைக் கடவுள் மங்கலம் செய்யும் பொருட்டுச் செய்த யாகம் பற்றியும் குறிப்பிடுகின்றார்.

பெரியபுராண நாயன்மார்களில் மகேசுவரனுக்கு மனக்கோயில் கட்டியவர் இருவர். ஒருவர் பூசலார், மற்றொருவர் வாயிலார். பூசலார் வரலாற்றில்தான் சேக்கிழார் பெருமான், பூசலார் மனக்கோயில் கட்டியதை விரிவாகச் சொல்கிறார்.

நினைப்பினால் எடுக்கும் கோயிலுக்கு வேண்டும் நிதி திரட்டியது முதல், இறைவனைத் தாபரஞ் செய்ய நாள் குறித்தல் வரை நான்கு பாடல்களில் செய்தி சொன்ன சேக்கிழார், தற்காலத்தில் இறைவன் படிமத்தைப் பிரதிட்டை செய்தவற்கான நாளுக்கு முன்பு செய்யப்படும் யாகசாலை நிகழ்ச்சிகள் பற்றியோ, அதற்கான குறிப்புப் பற்றியோ பூசலார் புராணத்தில் சொல்லவில்லை. பூசலார் வேள்விச் சாலை அமைத்து அங்கே சடங்குகள் எதுவும் செய்ததாகச் சேக்கிழார் சொல்லவில்லை.

தனி மனிதர்களின் தனிப்பட்ட யாகம் பற்றிச் சொல்லும் மூவர் தேவாரங்களிலும், பெரியபுராணத்திலும் திருக்கோயில் சார்ந்து செய்யப்படும் யாகசாலை நிகழ்ச்சிகள் சொல்லப்படவில்லை என்ற அளவில் வேள்வி பற்றிய செய்திகளை முடித்துக்கொண்டு, அடுத்து வேள்வி செய்ததற்கான கருவி நூல் எது என்பது பற்றியும், அது பற்றி அறிஞரிடையே நிலவும் கருத்துக்கள் பற்றியும் சுருக்கமாகக் காண்போம்.

தனி மனிதர்களின் தனிப்பட்ட யாகம் பற்றிச் சொல்லும் மூவர் தேவாரங்களிலும், பெரியபுராணத்திலும் திருக்கோயில் சார்ந்து செய்யப்படும் யாகசாலை நிகழ்ச்சிகள் சொல்லப்படவில்லை

## கருவி நூல்

வேள்வி அல்லது யாகம் செய்வதற்கான கருவிநூல் வேதமேயாகும்.

இவ்வேதத்தை அருமறை, கேள்வி, நான்மறை, முதுமொழி, எழுதாக்கற்பு, எழுதாக்கிளவி, ஆரணம், ஒத்து என்னும் சொற்களால் நமது இலக்கியங்கள் சுட்டிச் சொல்கின்றன.

வேள்வி அல்லது யாகம் செய்வதற்கான கருவிநூல் வேதமேயாகும். இவ்வேதத்தை அருமறை, கேள்வி, நான்மறை, முதுமொழி, எழுதாக்கற்பு, எழுதாக்கிளவி, ஆரணம், ஒத்து என்னும் சொற்களால் நமது இலக்கியங்கள் சுட்டிச் சொல்கின்றன.

வேதங்கள் வடமொழி எனப்படும் சமஸ்கிருத மொழியிலேயே உள்ளன. இந்த வடமொழி வேதங்களையே தொல்காப்பியர் காலம் தொடங்கிப் பாரதி காலம் வரை இருக்கும் சான்றோர் வேதம் எனக் கொள்கின்றனர். நமது சைவ சமய குரவர்களும் ஆழ்வார்களும் தாங்கள் அருளிச் செய்த திருமுறைகளிலும் பிரபந்தங்களிலும் வடமொழி வேதங்களையே வேதம் எனக் கூறிச் செல்கின்றனர். ஆனால் இடைக்காலத்தில் சிலர் தொல்காப்பியம் மற்றும் சங்க நூல்களிலும், திருமுறைகளிலும், திவ்வியப்பிரபந்தங்களிலும் காணப்படும் நான்மறை என்ற சொல்லுக்கு வேறு வகையாகப் பொருள் கூறத் தலைப்பட்டனர். அவருள் மறைமலையடிகள் எனப்படும் சுவாமி வேதாச்சலமும், எம்.எல். பிள்ளை எனத் தமிழுலகம் அழைக்கும் திரு கா. சுப்பிரமணியபிள்ளையும் முதன்மையானவர்களாவர்.

## மறைமலையடிகளார் கருத்து

ரிக், யஜுர், சாமம், அதர்வணம் எனப்படும் நான்கு வடமொழி வேதங்களை நான்மறை என நம்மவர் கொள்ளலாகாது என்றும், அவை தொல்காப்பியம் இறையனார் அகப்பொருள், திருக்குறள், தேவாரம் சிவஞான போதம் என்னும் நூல்களைக் குறிக்கும் என்றும், அவற்றையே வேதம் எனக் கொள்ள வேண்டும் எனவும் மறைமலை அடிகள் குறிப்பிட்டார். மேலும் தமிழ் நான்மறை என்பது தேவார திருவாசகம் எனப் பிறிதோரிடத்தில் சொன்னார். இதுபற்றிப் பின்னர் பார்க்கலாம்.

"நமது மூவர் முதலிகள், தாங்கள் அருளிச் செய்த திருமுறைகளில் நான்மறை, வேதம், இருக்கு முதலான சொற்களைப் பலகால் திரும்பத் திரும்பக் கூறிச் செல்வது, அவர்கள் அருளிச் செய்த தேவாரப் பாடல்களையா? அவர்கள் பாடல்களை அவர்களே வேதம் எனச் சொல்லிக் கொள்வார்களா? பிறர் அல்லவா அப்பாசுரங்களை வேதம் எனச் சொல்ல வேண்டும். அப்படித்தானே பிற்காலத்தவர், "இன்தமிழ்மறை தந்தார்", "வேதம் தமிழால் விரித்தார்" எனக் கூறினர். அவர்கள் பாடல்களில் காணப்படும் "நான்மறை", "வேதம்" என்ற சொற்கள் அவர்கள் பாடல்களை நீக்கி, மற்ற ஒன்றைக் குறித்து நிற்பதைச் சாதாரணக் கல்வி அறிவு உடையோரும் அறிவரே", என்பனவாக மறைமலை அடிகளார் கருத்துக்குப் பலபக்கமிருந்து மறுப்பு எழ அடிகளார் தம் கருத்தை நிலைநிறுத்தப் போதிய ஆதாரமின்மை அறிந்து அதனை நெகிழவிட்டார்.

நமது மூவர் முதலிகள், தாங்கள் அருளிச் செய்த திருமுறைகளில் நான்மறை, வேதம், இருக்கு முதலான சொற்களைப் பலகால் திரும்பத் திரும்பக் கூறிச் செல்வது, அவர்கள் அருளிச் செய்த தேவாரப் பாடல்களையா? அவர்கள் பாடல்களை அவர்களே வேதம் எனச் சொல்லிக் கொள்வார்களா?

## கா.சு.பிள்ளை கருத்து

மறைமலையடிகள் கருத்து எடு படாமல் போன பின்பு திரு. கா.சு. பிள்ளை அவர்கள் புதிய கொள்கை ஒன்றை வெளியிட்டார். இக்கொள்கை கானல்நீர் போல மயக்கம் தரும் ஒன்றாக இருக்க இதன்பாற்பட்டு மயங்கியவர் பலர். இன்றும் சிலர் இம்மயக்கத்தில் இருப்பதால் இதுபற்றி விளக்க வேண்டி உள்ளது. அது என்ன என்று பார்ப்போம். நான்மறை என்பது அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு உறுதிப் பொருள்களாகும். இவ்வுறுதிப் பொருள்களை சிவபெரு மான் நான்கு தமிழ் முனிவர்களுக்கு அவர்கள் பக்குவ நிலையறிந்து தனித்தனியே கூறியருளினார். அப்பெரியோர்கள் திருக்குறள் போன்று நான்மறை என்னும் பெயருடன் தமிழில் நூல் செய்தார்கள். அந்நூல்களுடன் ஆறங்கமும் தமிழிலேயே அவர்கள் இயற்றினார்கள்.

அந்த நூல்கள் முதற்சங்கத்து இறுதியில் உண்டான கடல்கோளில் அச்சங்கத்தின் ஏனைய தமிழ் நூல்களுடன் இறந்துபோயின. நமது சைவ சமயாசிரியர்கள் திருவுள்ளக் கருத்தும் இதுவே யாகும் என்பதாகக் கொண்டு "திருநான்மறை விளக்கம்" என்னும் தலைப்பில் கா.சு. பிள்ளை தமது கொள்கையை எழுதி வெளியிட்டார்.

### காரணம் என்ன?

ஆங்கிலேயர் ஆட்சி நமது நாட்டில் முழுவதுமாக கால்கொண்ட பிறகு, பார்ப்பனர்களில் பலர் அரசாங்கப் பணியிடங்களில் அமர்ந்து சிறந்த நிலை எய்தினர். அவர்களில் பலர் தங்கள் வைதிக நெறியை மறந்து அந்நிய நாகரீகத்திற்கு அடிமையாகிப் பிற சாதியினரை மதிக்காமல் நடந்தனர், மேலும் சமஸ்கிருதமே கடவுள் மொழி என வாதிட்டனர். பார்ப்பனர்கள் அரசாங்கப் பதவிகளில் அடைந்த முன்னேற்றம் அவர்களது நடவடிக்கை ஆகியன நமது நாட்டில், குறிப்பாகத் தமிழ்நாட்டில் சமுதாயச் சச்சரவுகளைத் தோற்றுவித்தது.

பார்ப்பனர் அல்லாதாரில் சிலர், படித்து மேனிலை எய்தினாலும் பார்ப்பனர்களின் செல்வாக்கே மேலோங்கி நின்றது. ஆதலால் பார்ப்பனர்களின் மீது பார்ப்பனர் அல்லாதார் காழ்ப்புக் கொண்டனர். இவ்வாறு காழ்ப்புக் கொண்ட பார்ப்பனர் அல்லாதாரில் பலர் அக்காலச் சமுதாயத்தில் கல்வி வாய்ப்புப் பெற்ற மேல்சாதியினர் எனச் சொல்லப்பட்ட வேளாளர், முதலியார் வகுப்பைச் சேர்ந்தவர்களே. இவ்வெறுப்பு கட்சி வடிவம் பெற்றபோது ஜமீன்தார் எனப்பட்ட நிலப்பிரபுக்களும் மிட்டா மிராசுதாரர்களும் அரசர்கள் என அழைக்கப்பட்டவர்களும் பார்ப்பனர்களுக்கு எதிராயினர்.

பார்ப்பனர்களின் மீது பார்ப்பனர் அல்லாதார் காழ்ப்புக் கொண்டனர். இவ்வாறு காழ்ப்புக் கொண்ட பார்ப்பனர் அல்லாதாரில் பலர் அக்காலச் சமுதாயத்தில் கல்வி வாய்ப்புப் பெற்ற மேல்சாதியினர் எனச் சொல்லப்பட்ட வேளாளர், முதலியார் வகுப்பைச் சேர்ந்தவர்களே.

பார்ப்பனர், பார்ப்பனர் அல்லாதார் என்னும் இரண்டு பிரிவுகள் தோன்றியதால் சமுதாயத்தின் அனைத்து நிலைகளிலும் இந்தப் பிரிவினை எண்ணம் உள்புகத் தொடங்கியது. நாளடைவில் இது வளரத் தலைப்பட்டது. காலப்போக்கில் பார்ப்பனர் எதிர்ப்பிலும் இரண்டு பிரிவுகள் தோன்றின. ஒன்று கடவுள் நம்பிக்கை, சமய நம்பிக்கை, சடங்கு நம்பிக்கை இவற்றை முற்றாகக் கைக்கொண்டு பார்ப்பனர் என்னும் இனத்தாரை மட்டும் எதிர்ப்பது. மற்றொன்று, கடவுள், சமயம், சடங்கு இவற்றை நம்புவதும் பரப்புவதும் பார்ப்பனர்களே ஆதலால் அவர்களை எதிர்ப்பதுடன் அவர்களைச் சார்ந்தவர்களையும் கடவுள் கொள்கை, சமய நம்பிக்கை, சடங்குகள் நம்பிக்கை ஆகியவற்றையும் முழுவதுமாக எதிர்ப் பது.

இந்த இரண்டு பிரிவினருமே பார்ப்பனர் எதிர்ப்புக்குத் தமிழ் மொழியை ஆயுதமாகக் கொண்டனர். மொழி என்பது எண்ணத்தைப் பிரதிபலிக்கும். அதாவது கருத்தை வெளியிடும் கருவியே தவிர அதற்கு மேல் தனிப்பட்ட சிறப்பு என்ற ஒன்று இருக்க முடியாது என்றார் ஒரு சாரார். இந்தச் சாரார்தான் வடமொழி எனப்படும் சமஸ்கிருதம், பார்ப்பனர்கள் சொல்வது போல தேவபாஷையாகாது, மந்திர மொழியாகாது, உலகில் உள்ள மற்ற மொழிகள் போன்று இதுவும் ஒரு மொழியே என்றனர். தமிழ் காட்டுமிராண்டி மொழி என்றனர். இவர்கள் தங்களைக் கடவுள் மறுப்பு இயக்கத்தினர் அதாவது நாத்திகர் எனக் கூறிக்கொண்டனர்.

மொழி என்பது வெறுமனே எண்ணத்தைப் பிரதிபலிக்கும் கருவி மட்டுமன்று. அது ஒரு சமுதாயத்தின் கலை நாகரீகப் பண்பாட்டுச் சமய வரலாற்றுக் கூறுகளைக் கூறிக் கொண்டிருக்கும் கருவூலமாகும். மொழியைக் கொண்டே மானிட இயல் எனப்படும் மனிதனின் தோற்ற வளர்ச்சியைக் கணக்கிடமுடியும் என்றனர் மற்றொரு சாரார். இவர்கள் கடவுள் நம்பிக்கையும் சமய நம்பிக்கையும் கொண்டவராயினர்.

மொழி ஆராய்ச்சி, காலப் போக்கில் மேம்படத் தொடங்கியது.

இந்த மொழியாராய்ச்சி நமது தமிழ் நாட்டில் இரண்டு கூறுகளை ஏற்படுத்தியது. வடமொழி எனப்படும் சமஸ்கிருதம், தென்மொழி எனப்படும் தமிழ் மொழியை விடச் சிறந்தது எனக் கூறுபவர் ஒருபக்கமும், வடமொழியைவிடத் தமிழ் மொழி சிறந்தது எனக் கூறுபவர் ஒருபக்கமும் என இரண்டு பக்கங்கள் மொழியாராய்ச்சி உலகில் தோன்றின.

வடமொழி தென்மொழியாராய்ச்சி, சமய உலகத்தையும் தாக்கத் தொடங்கியது. திருக்கோயில்களும், அக்கோயில்களில் பூசனைக்காகக் கொள்ளப்படும் வடமொழியும் பார்ப்பார்க்குரியன என்ற கருத்துப் பரப்பப்பட்டது. தமிழகக் கோயில்கள் பார்ப்பார்களுக்குரியன அல்ல என்ற உண்மை ஏனோ மறைக்கப்பட்டது. வடமொழி என்னும் சமஸ்கிருதம் அப்பார்ப்பார்க்கு மட்டும் உரியதன்று, இந்த நாட்டில் இருக்கும் அனைவருக்கும் உரியது என்ற கருத்தும் சொல்லப்படவில்லை.

வடமொழி தென்மொழி ஆராய்ச்சி, சமய உலகத்தையும் தாக்கத் தொடங்கியது. திருக்கோயில்களும், அக்கோயில்களில் பூசனைக்காகக் கொள்ளப்படும் வடமொழியும் பார்ப்பார்க்குரியன என்ற கருத்துப் பரப்பப்பட்டது. தமிழகக் கோயில்கள் பார்ப்பார்களுக்குரியன அல்ல என்ற உண்மை ஏனோ மறைக்கப்பட்டது. வடமொழி என்னும் சமஸ்கிருதம் அப்பார்ப்பார்க்கு மட்டும் உரியதன்று, இந்த நாட்டில் இருக்கும் அனைவருக்கும் உரியது என்ற கருத்தும் சொல்லப்படவில்லை.

மாறாக, வடமொழி, பார்ப்பனர்களுக்கு மட்டுமே உரியது என்ற கருத்தே திரும்பத் திரும்பக் கூறப்பெற்றது. சமூக, அரசியல் களங்களில் பார்ப்பனர் எதிர்ப்புத் தோன்றியதுபோல சமய உலகிலும் பார்ப்பனர் எதிர்ப்புத் தோன்றியது. சமய உலகில், குறிப்பாகச் சைவ சமய உலகில் வேதங்கள் மீதும் ஆகமங்கள்மீதும் வெறுப்பு வளர்க்கப்பட்டது. ஏனெனில் வேத ஆகமங்கள் சமஸ்கிருத மொழியிலே இருப்பதாலும், இம்மொழி பார்ப்பனர்க்குரியது எனக் கருதப்பட்டதாலும் அந்த வெறுப்பு வளர்க்கப்பட்டது. வேத ஆகமங்கள் மீது மட்டுமன்று தமிழ்ச் சைவ சமய குரவர்களில் தலையானவராகிய திருஞானசம்பந்தர்மீதும் அது பரப்பப்பட்டது. இதனை ஆராய்ச்சி என்ற வகையில் சைவர்களே

செய்ததுதான் வருந்தத்தக்கது.

அரசியல் சமுதாயக் களங்களில் ஏற்பட்ட பார்ப்பனர் எதிர்ப்புப் பற்றி இங்கே பேசவேண்டியதில்லை. சைவப் பரம்பரையில் வந்தோரும், சைவப்பற்று மிக்கோருமாகிய சிலர், பார்ப்பார் மீது கொண்ட வெறுப்பால், வடமொழி வேதங்கள் ஆகமங் கள் வேறு, தமிழ் மொழி வேதங்கள் ஆகமங்கள் வேறு, எனப் பரமசிவனை மொழி வேறுபாட்டுக்குள் கொண்டு வந்தனர் என்பது பற்றியே பேசப் படுகிறது.

சமய குரவர் நால்வரும், சந்தான குரவர்களும் சொல்லிச் சென்ற ஆப்த வாக்கியங்களை எல்லாம், ஆராய்ச்சி என்ற வகையிலும், வெறுப்பின் காரணமாகவும் புறந்தள்ளினர். இவர்கள் கொள்கை சைவ சமயத்திற்கே விரோதமாகச் சென்றதை ஏனோ இவர்கள் உணரவில்லை.

சமய குரவர் நால்வரும், சந்தான குரவர்களும் சொல்லிச் சென்ற ஆப்த வாக்கியங்களை எல்லாம், ஆராய்ச்சி என்ற வகையிலும், வெறுப்பின் காரணமாகவும் புறந்தள்ளினர். இவர்கள் கொள்கை சைவ சமயத்திற்கே விரோதமாகச் சென்றதை ஏனோ இவர்கள் உணரவில்லை.

மறைமலையடிகள் கருத்து வலுவிழந்துபோன நிலையில், திரு கா.சு. பிள்ளை அவர்கள் பார்ப்பார் மீது கொண்ட வெறுப்பினாலும், வேதத்தின் மெய்ப்பொருளை உணராமையால் உண்டான அவமதிப்பினாலும், தமிழிலும் வேதம் செய்யப்பட்டது எனக் கூறிக்கொள்ள வேண்டும் என்ற தன்மதிப்பினாலும், வேதங்கள் இவை என்பதைப் பற்றி ஒற்றுமையான கருத்து உருவாகாமையாலும், தமிழ் மொழி மீது உண்டான பற்றினாலும், வடமொழி வெறியாளர்களை அடக்க வேண்டும் என்ற காரணத்தினாலும் மேலே கண்டுள்ளபடி ஒரு புதிய ஆராய்ச்சியில் இறங்கினார்.

## கா.சு. பிள்ளையின் அணுகுமுறை

நமது சமய நூல்களில் காணக்கிடக்கும் வசனங்களை எடுத்துக்காட்டி, அவற்றின் உண்மைப் பொருளை உரைக்காமல் காண்டல் கருதல் உரை என்ற மூவகை அளவையும் கொள் ளாமல்,

தமது சொந்த அனுமானமாக (யூகத்தின் அடிப்படையில்) பொருள் கூறியும், முன்பின் தொடர்பு இல்லாமலும் இயைபு இல்லாமலும் பொருள் சொல்லியும், ஆன்றோர் வாக்கையும் சமய குரவர்களின் வாக்கையும் மாற்றிக் கூறியும், புதிய பாடங்களைப் படைத்துக்கொண்டும் தாம் கொண்ட கருத்தையே ஆதாரம் எனச் சொல்லியும் தனக்கு ஆதரவாக இல்லாத கருத்துக்களை இடைச்செருகல் எனக் கூறியும், கற்போர் உள்ளத்தைக் கலங்கடித்துத் "தமிழ் வேதம் இருந்தது அதனைக் கடல் கொண்டது" எனக் கட்டுரைத்தார் கா.சு. பிள்ளை.

தமது படிப்பினாலும், பட்டத்தாலும், வகித்த பதவியாலும் திரு கா.சு. பிள்ளை தமிழ் கற்றோர் மத்தியில் அறிமுகமானார். மேலும் பல தவறான அர்த்தங்களைச் சில சொற்களுக்குச் சொல்லியதின் பேரில் பார்ப்பனர் வெறுப்பாளர் மத்தியில் அடையாளம் காணப்பட்டார்.

**சான்றுக்குச் சில**

*"ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல் மறப்பர்*
*காவலன் காவான் எனில்"*

என்பது திருக்குறள்.

அரசன் செங்கோல் செலுத்தாது ஆட்சி செய்வானேயானால், அவன் நாட்டில் பசுக்களால் ஏற்படும் பயன் குறையும். அந்தணர் நூல் மறப்பர் என்பது இக்குறளுக்கான உண்மையான பொருள். இது பற்றி விளக்கம் வேண்டுவோர் உரைகளைக் காண்க.

நமது கா.சு. என்ன செய்தார்? ஆபயன் என்பது ஆம்பயன் என்பதன் திரிபு என்றும் அறு தொழிலோர் என்பது அறி தொழிலோர் என்று இருக்க வேண்டும் எனத் தம்மனம்போன போக்கில் எழுதினார். பார்ப்பனர் எதிர்ப்பாளர்கள் மத்தியில் இவர் ஆராய்ச்சி அறிஞரானார். ஆனால், கற்றோர்கள் இவர் கருத்தினை ஏற்கவில்லை.

"பார்ப்பான் பிறப்பொழுக்கம் குன்றக்கெடும்" என்ற இடத்தில் பார்ப்பான் நூலைப் பார்ப்பவன் என எழுதினார். ஆனால் தந்தைப்

பெரியார் பார்ப்பான் என்பதற்குப் பிறப்புவழிச் சாதிப் பிரிவைச் சார்ந்தவன் என்றே எழுதினார்.

"நூலே கரகம் முக்கோல் மனையே" என்ற தொடரில் காணப்படும் நூல் என்பது பூணூல் அன்று, ஏடு அதாவது புத்தகம் என்று எழுதினார் கா.சு. பிள்ளை. இவர் சொல்லும் பொருந்தாப் பொருள்களை விரிக்கின் பெருகும். இதை விடுத்து மேலே செல்வோம்.

## திருநான்மறை விளக்க ஆராய்ச்சி

தஞ்சாவூர் தெய்வச் சேக்கிழார் சைவ சித்தாந்தப் பாடசாலைத் தலைவர் சேக்கிழார் அடிப்பொடி திரு தி.ந. இராமச்சந்திரன் அவர்கள்மீது எனக்குச் சிறிது வருத்தமே. திருநான்மறை விளக்க ஆராய்ச்சி என்னும் ஒப்பற்ற ஒரு கருவூலத்தைக் கண்டுவைத்திருந்தும் ஏப்ரல் 2007ஆம் ஆண்டு வரை அதை வெளியிடாமல் வைத்திருந்தது பற்றியதே அவ்வருத்தம்.

பதினான்கு ஆண்டுகளுக்கு முன்பு இந்த நூலை நான் அறிந்திருந்தால், நான் எழுதிய நூலில் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருட்கள் நான்குமே நால் வேதங்கள் என எழுதியிருக்க மாட்டேன். திரு கா.சு. பிள்ளையவர்களின் கருத்தினை உடன்பட்டிருக்கமாட்டேன்.

"கடையனுக்கும் கடைத்தேற்றம்" என்னும் நூல் காந்தியடிகளை எவ்வாறு மடைமாற்றிக்கொண்டு சென்றதோ அதைப்போன்று "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" என்னும் இந்தத் திப்பிய நூல் என்னை மடைமாற்றிவிட்டது.

"கடையனுக்கும் கடைத்தேற்றம்" என்னும் நூல் காந்தியடிகளை எவ்வாறு மடைமாற்றிக்கொண்டு சென்றதோ அதைப்போன்று "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" என்னும் இந்தத் திப்பிய நூல் என்னை மடைமாற்றிவிட்டது.

எண்பது ஆண்டுகளுக்கு முன்பு (1926) இந்த நூலை எழுதித்

தமிழுக்கும், தமிழ்ச் சைவத்திற்கும், தமிழ்ப் பண்பாட்டிற்கும் ஒப்பற்ற அரும் பணியைச் செய்து சென்ற செந்தமிழ்ப் புலவரும், உண்மைச் சைவாபிமானம் கொண்டவரும், வடமொழி தென்மொழி இவ்விரண்டிலும் பேரபிமானம் கொண்டவரும், துலைநாவன்ன சமநிலை உள்ளம் உடையவரும், நூல்வரம்பிகவாத மேல்வரம்பினரும், சைவ சாத்திரங்களுக்கு முரண்பாடாகச் செல்லுவோருக்குச் சிம்ம சொப்பனமானவரும், சைவ சித்தாந்தத்தை மெய்வரக் கற்றவரும், நீதி நூல்கள் பேதியாதுணர்ந்து, இலக்கியம் பயின்று, இலக்கணம் தேர்ந்து, தருக்கம் படித்துத் தாம் பெரிதாங்குநரும் மற்றும் இன்னோரன்ன இன்னுரைகளுக்கு ஏற்ற பெற்றியருமாகிய திரிசிரபுரம் சைவப் பெரியார் திரு. மா. சாம்பசிவம்பிள்ளை அவர்களைச் சைவ உலகம் தலைமேல் கொண்டு போற்ற வேண்டும்.

சைவ சமயத்தினர் எனச் சொல்லிக்கொள்ளும் ஒவ்வொருவர் வீட்டிலும் இருக்க வேண்டியது இந்த நூல். சிவநிந்தனையும், தமிழ் நிந்தனையும் யார் செய்யினும், அவர் எப்பேர்ப்பட்டவராயினும், பகை, நட்பு என்ற இருதிறமும் பாராட்டாமல் அவர்களைக் கண்டிக்க வேண்டும் என்ற மன உறுதியை இந்த நூல் தருகின்றது. கா.சு. பிள்ளையின் கருத்துக்களை அக்குவேறு ஆணிவேறு என அலசி ஆராய்ந்து அவரது தமிழ்ப் பற்று என்னும் முகமூடியைக் கிழித்தெறிகிறது இந்த நூல். இந்த நூலின் சிறப்பைப் பற்றித் தனியே ஒரு நூல் எழுத வேண்டும்.

## வித்துவப் பெரியாரபிப்பிராயம்

இந்தத் தலைப்பில் டாக்டர் உ.வே.சா. தொடங்கி, ஸ்ரீ–ல–ஸ்ரீ சுவாமிநாத பண்டிதரவர்கள் வரை சைவத்தையும், தமிழையும் கரைத்துக் குடித்தவர்களின் அபிப்பிராயங்களைத் (கருத்துக்களை) தமது நூலில் சேர்த்து வெளியிட்டுள்ள சைவத்திரு. மா. சாம்பவசிவம்பிள்ளை அவர்களின் செயலை என்னவென்று சொல்லிப் பாராட்டுவது என்றே தெரியவில்லை. அபிப்பிராயம் சொல்லியுள்ள அனைவரும் சாதாரணமானவர்கள் அல்லர். திரு. கா.சு. பிள்ளையும்,

மறைமலையடிகளும் கண்டு மருளும் மாண்பினர். அவருள்ளும் சைவசண்டமாருதம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுவாமிநாத பண்டிதரவர்களின் அபிப்பிராய உரை பலகாலும் படித்துப் பார்க்க வேண்டிய ஒன்று: திருநான்மறை விளக்க ஆராய்ச்சி என்னும் நூலில் சைவத்திரு மா. சாம்பசிவம்பிள்ளை அவர்களால் "நால்வர் தமிழ் முனிவர் நான்மறை செய்தனரல்லர் என்பது பசுமரத்தாணிபோல் பதித்து நாட்டப்பட்டது. பிடுங்கவல்லம் என்பார் இழுத்துப் பிடுங்கிப் பார்க்கட்டும். பார்ப்போம்" எனத் தனது கருத்தினை எவ்வளவு அழுத்தமாகப் பண்டிதர் அவர்கள் பதிய வைக்கிறார் என்பதைப் படிக்கும்போது உள்ளம் உணர்ச்சிவசப்படுகிறது.

வடமொழி மறைகளுக்கும் வடமொழி ஆகமங்களுக்கும் வேறாகத் தமிழ் மறைகளும் தமிழ் ஆகமங்களும் இருந்தன என்பதில் தமிழர்களாகிய நமக்கு மகிழ்ச்சி ஏற்படுமே தவிர வருத்தம் ஏற்படாது.

தமிழில் மறைகளும் ஆகமங்களும் இருந்தன என்பதால் வடமொழி மறைகளுக்கும் வடமொழி ஆகமங்களுக்கும் இழுக்கில்லை.

சைவர் அனைவராலும் போற்றப்பட்டுத் தமிழ் வேதம் எனக் கொள்ளப்படும் சைவத்திருமுறைகளுக்கு வேறாய்த் தமிழ் மறைகள் இருந்தன என்பதிலும் எவருக்கும் எவ்வித வருத்தமும் இல்லை. எனினும் நமது தேவார திருவாசகங்களில் குறிக்கப்பெறும் மறை, வேதம் என்னும் சொற்கள் இப்போதுள்ள வடமொழி மறையையாவது தமிழ் மறையையாவது குறிக்காது பண்டைக் காலத்தில் இருந்து மறைந்துபோனதாகச் சொல்லப்படும் தமிழ் மறையையே குறிக்கும் என்பதில்தான் கருத்து வேறுபாடு தோன்றுகின்றது. . . .

. . . . .

சைவத் திருமுறைகளில் காணப்படும் மறை, வேதம் என்னும் சொற்கள் கடல் கொண்டுபோனப் பண்டைத் தமிழ் மறையையே குறிக்கும் என்றால் தேவாரம் திருவாசகம் முதலானவற்றை மறை எனல் கூடாது என்பது அர்த்தமாகிறது. மறை, வேதம் என்பவை வடமொழி வேதங்களைக் குறிக்காது எனச் சொல்லவரும் கா.சு. தம்மை

அறியாமல் நமது சைவத் திருமுறைகளையும் மறுதளிக்கின்றார்.

நமது திருமுறைகள் நம் சைவ சாத்திரங்களுக்கு முதல் நூல்களாய் அவற்றின் உயர்ந்த கருத்துக்கள் அனைத்தையும் உள்ளடக்கித் திகழ்கின்றன. இவைகள் மறைகள் அல்ல என்றால், நம் திருக்கோயில்களில் ஓதுவதற்குரிய மறைகள் யாவை? தேவார திருவாசகங்களை ஓதவில்லையென்றால் நமது திருக்கோயில்கள் யாவும் வடமொழியாளர் கோயில்களாக மாறிவிடாதா? இதுவன்றி நம் சைவ சாத்திரங்களுக்கு முதல் நூல்களாய்க் கொள்ளக் கிடக்கும் தமிழ் மறைகள் யாவை? நம் தமிழ் மொழிக்குப் பண்டைத் தமிழ் மறை வேண்டும் என்ற தேடுதல், இப்போதுள்ள தமிழ் மறையையும் இழந்துவிடுவதாகவன்றோ முடியும் என அபிப்பிராயம் சொல்லும் திரு வி.பி. காந்திமதிநாத பிள்ளை அவர்களின் கருத்து எண்ணிப்பார்க்க வேண்டியதாகும்.

## தமிழ் நான்மறைகளைக் கடல் கொண்டதா?

நமது சிவபிரானே ஆரியன் கண்டாய், தமிழன் கண்டாய் என இருவகையோர்க்கும் முதற்தந்தையாய் இருக்கின்றார். ஆரியத்திற்கும் தமிழுக்கும் அவரே முதற் குருவாகி நிற்கின்றார். முதற் தந்தையாகவும், முதற் குருவாகவும் விளங்கி நிற்கும் ஈசனே வடமொழி தென்மொழிகளை ஒருங்கே தந்தவராகிறார்.

நமது சிவபிரானே ஆரியன் கண்டாய், தமிழன் கண்டாய் என இருவகையோர்க்கும் முதற்தந்தையாய் இருக்கின்றார். ஆரியத்திற்கும் தமிழுக்கும் அவரே முதற் குருவாகி நிற்கின்றார். முதற் தந்தையாகவும், முதற் குருவாகவும் விளங்கி நிற்கும் ஈசனே வடமொழி தென்மொழிகளை ஒருங்கே தந்தவராகிறார்.

*"மாரியும் கோடையும் வார்பனி தூங்கநின்*
*றேரியும் நின்றங் கிளைக்கின்ற காலத்து*
*ஆரிய மும்தமிழும் உடனே சொல்லிக்*
*காரிகை யார்க்குங் கருணை செய்தானே"*

என்கிறார் திருமூலர். வடமொழி தென்மொழிகளை ஈசனே தந்தான்

என்பதில் எந்த சந்தேகமும் இல்லாத நிலையில், சிவபெருமான் தமிழ்நாட்டுக் கல்லால நீழலில் எழுந்தருளி நால்வர்க்கு உபதேசித்த தமிழ் நான்மறைகள் கடல் கோட்பட, வடமொழி வேதங்கள் மட்டும் இன்றும் வாழ்கின்றன என்றால் இழுக்கு யாருக்கு வந்து சேரும்? ஈசனுக்குத்தானே வந்து சேரும்.

தாம் அருளிய தமிழ் வேதங்களைக் கடல்கொள்ள அதனைத் தடுத்து நிறுத்தாமலோ; அன்றி கடல் கொண்ட வேதங்களை மீளவும் கொண்டுவராமலோ இருந்துவிட்டான் ஈசன் என்றால், அவன் ஒரு மொழிச் சார்புடையவனாகிவிடுகின்றானே? தமிழ்மொழி மீது அவனுக்கு அப்படி என்ன பகை?

தாம் அருளிய தமிழ் வேதங்களைக் கடல்கொள்ள அதனைத் தடுத்து நிறுத்தாமலோ; அன்றி கடல் கொண்ட வேதங்களை மீளவும் கொண்டுவராமலோ இருந்துவிட்டான் ஈசன் என்றால், அவன் ஒரு மொழிச் சார்புடையவனாகி விடுகின்றானே? தமிழ்மொழி மீது அவனுக்கு அப்படி என்ன பகை?

இத்தகைய ஒருபக்கச் சார்பை ஈசன்மீது ஏற்றலாமா? தடுக்கவும் முடியாமல், மீட்கவும் முடியாமல் இருந்துவிட்டான் ஈசன் என்றால், அவனுடைய பரத்துவத்திற்கு அது இழுக்காக அல்லவோ முடியும்.

தாம் உபதேசித்த தமிழ் மறைகள் கடல்கோட்பட வடமொழி வேதங்களையே இத்தமிழுலகு கொள்ள வேண்டும் என ஈசன் திருவுள்ளம் பற்றினராயின், அதனை மாற்றவல்லவர் யார்? என்று கேட்பாருக்கு எவ்வாறு பதில் சொல்வது? தாம் குடிகொண்டிருக்கும் மலையையே கடல் கொண்டுபோகும் அளவுக்கு விட்டுவிட்டான் என்றால், "பஞ்சகிரித்தியம்" செய்யும் பரமன் ஆற்றலுக்கு அது இழுக்காகாதா?

ஒரு நூல் வழக்கொழிந்து போயிற்று என்றால், அதனைக் கற்பாரும் கேட்பாரும் ஆதரிப்பாரும் இல்லாது போதலே காரணமாகும் என்பதே உண்மையாகும். அல்லது உலக அழிவே (ஊழிக்காலத்தழிவு) காரணமாக வேண்டும். நமது தமிழ் நாட்டில் கடல்கோள்கள்

உண்டாயின என்பது வரலாற்று உண்மை. அண்மையில்கூட சுனாமி என்னும் கடல் சீற்றத்தால் நமது கடற்கரைப் பகுதிகள் சில அழிந்தவற்றை நேரே கண்டோம். ஆனால் இதுபோன்ற கடல் சீற்றத்தால் நூல்கள் அழிந்தன என்பது அறிவிற்கு உகந்ததாக இல்லை.

ஏதோ ஒரே ஒரு மூல நூல் மட்டும் இருந்தது போலவும், அதுவும் கடற்கரையிலே இருந்தது போலவும், அந்த நூலைக் கடல் கொண்டு சென்றுவிட்டதுபோலவும் சொல்வது கொஞ்சம்கூடப் பொருத்தமாகத் தோன்றவில்லை.

தமிழில் நான்மறை இருந்திருந்தால், கடல் சார்ந்த பகுதி அல்லாத உள்நாட்டுச் சைவர்கள் அதனைக் கைக் கொண்டிருப்பார்களே! அவர்களிடம் பெரு வழக்காக அந்த மறைகள் வழங்கியிருக்குமே! உள்நாட்டில் இருந்த தமிழ் மறைகளையும் கடல் வந்து கொண்டுபோயிற்றா? அப்படி அந்த மறைகள் மீது கடலுக்கு என்னதான் கோபம்? இப்படிப்பட்ட கேள்விகள் எழுந்து மனத்தை அலைக்கழிக்கின்றன. மேலும், சிவபெருமானால் அருளப்பட்ட தமிழ் மறைகளைத் தமிழர்கள் கைக்கொள்ளவில்லையாயின், தமிழ்ச் சைவர்களுக்கு அது இழுக்காய் முடியுமே! சைவர்கள் அதனைக் கொள்ளவில்லையாயின், ஈசன் அருளிய மறைகள் நன்றாக இல்லை என்றுதானே அர்த்தமாகும். இப்பேர்ப்பட்ட குறையை ஈசன்மீது சுமத்த முடியுமா?

சுந்தரமூர்த்தி சுவாமிகள் கயிலைக்கு எழுந்தருளிய போது, "தானெனை முன்படைத்தான்" என்பதை முதலாக உடைய நொடித்தான்மலைத் திருப்பதிகத்தை அருளிச் செய்தார். இவ்வாறு அருளிய பதிகத்தை வருணனிடம் தந்து "திருவஞ்சைக் களத்தில் இதனை நீ வெளிப்படுத்து" எனச் சொன்னதாக அவரது திருவாக்கால் அறியலாம்.

சேரமான் பெருமாள் நாயனார் கயிலைக்கு எழுந்தருளியபோது

வழியிடை அருளிச் செய்த திருக்கயிலாய ஞான உலாவை வெள்ளியங்கிரியல் கேட்ட மாசாத்தனார், அதனைத் திருப்பிடவூரில் வெளிப்படுத்தினார் எனப் பெரியபுராணம் கூறுகின்றது. வழியிடை அருளிச் செய்த பதிகமும், உலாவும் உலகோர்க்குப் பயன்பட வேண்டும் எனத் திருவுளம் கொண்ட சிவபெருமான், தமிழில் இருந்த வேதாகமங்களைக் கடல் கொண்ட காலம் தொட்டு இன்றுவரை வெளிப்படுத்திப் பயன்படச் செய்து உயிர்களைப் புரந்து நல்வழிப்படுத்தாது வாளா இருக்கிறான் என்றால், அது அவனது கருணைக்கு இழுக்காகாதா? ஆம்! இழுக்காகும். ஆனால் நிகழ்ச்சி அப்படியில்லையே.

கடல்கொண்டிருந்தால்கண்டிப்பாக அவன் அவற்றைமீட்டிருப்பான். (வடமொழி வேதங்களை மீட்டது போல) கடல் கொள்ளப்படாத நிலையில் அவன் அதனை எப்படிச் செய்வான்? அந்நிகழ்ச்சி எக்காலத்தும் இல்லாமையால் அதனை அவன் அருளவில்லை என்பதுதானே உண்மை. கடல் கொண்டது என்று சொல்லும் கா.சு. பிள்ளையும் அதனைக் கடலில் தேட முயற்சிக்கவில்லை. அவர் செய்யாது போனதை அவர் கருத்தை ஏற்றுக்கொண்டு பேசும் சிலர் இப்போதாவது கடலில் ஆழ்ந்து அவற்றைக் கொண்டுவரலாம். அவ்வாறு மீட்டு வருவார்களேயானால், சைவ மக்கள் அவர்களை உச்சிமேற்கொண்டு போற்றி வழிபடுபவர் என்பது திண்ணம்.

## தமிழ்ச் செல்வங்களை வடவர் வஞ்சித்தனரா?

தமிழ் நான்மறைகளைக் கடல் கொண்டது என்னும் கருத்தை ஏற்காத சில அறிஞர்கள், வடவர் தமிழகம் வந்தபோது நமது தமிழ் மொழியில் இருந்த தத்துவக் கருத்துக்களையும், கதைகளையும் தங்கள் மொழியில் எழுதிக்கொண்டு அவையே மூலம் எனச் சொல்லித் தமிழர்களை வஞ்சித்துவிட்டனர் என்கின்றனர்.

இவ்வாறு கருத்துச் சொல்லும் அறிஞர்கள், தமிழர்களை ஏமாந்தவர்கள் என்றும், இளிச்சவாயர்கள் என்றும் கருதுகிறார்கள்

என்றே கொள்ள வேண்டியுள்ளது. ஒரு மொழியில் உள்ள செல்வத்தைப் பிறிதோர் மொழியில் ஆக்கிக்கொள்வது அப்படி ஒன்றும் புதியது அன்று. மொழிபெயர்க்கப்பட்ட நூலை அதன் பொருட்டு இன்னொருவரிடம் தந்தவர் மீண்டும் அந்த நூலைத் திரும்பப் பெறாமலா இருந்துவிடுவார்? அவர் திரும்பக் கொடுக்கவில்லையாயின் மீண்டும் மீண்டும் வலியுறுத்தமாட்டாரா? மேலும் ஒவ்வொரு நூலிலும் ஒவ்வொரு படிதான் இருந்திருக்குமா?

தமிழ் நூல்களைத் தங்கள் மொழியில் ஆக்கிக்கொண்ட வடவர்கள் தமிழ் மூல நூல்களை எரித்துவிட்டனர் என்று இன்னொருவர் கூறுகிறார். மூல நூலை எரித்துவிட்டனர் என்றால், படிநூல்கள் எங்கே போயின? ஒவ்வொன்றிலும் ஒரே மூல நூல்தான் இருந்ததா? அவர்கள் எரிக்கும்போது இவர்கள் வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்தார்களா? தெரியாமல் எரித்துவிட்டார்கள் என்றால், எரித்த அவர்களுக்கு அதன்பின் இவர்கள் தண்டனைத் தரவில்லையா? தரவில்லை என்றால் ஏன் தரவில்லை? அப்படி என்ன அவர்களிடத்து இவர்களுக்குப் பயம்? தந்தனர் என்றால் அதனை ஏன் குறித்து வைக்கவில்லை? இப்பேர்ப்பட்ட கேள்விகள் எழுந்து மிகுந்த மன உளைச்சலைத் தருகின்றன. அரசியல் சமூகக் களங்களில் பகைபற்றி வாய்க்கு வந்ததைப் பேசும் தரமற்றவர்கள் பேச்சுக்கள் போலத் தமிழ்ச் சைவ உலகிலும் தரமற்ற ஆராய்ச்சிகள் தோன்றி நமது சைவ சமயத்தின் உயிர் நாடியை மலினப்படுத்திவிட்டன. கா.சு. பிள்ளை முதலான நற்குடிப் பிறந்த சைவ நன்மக்களும் இதற்கு உறுதுணையாயினர் என்று எண்ணும்போது இறையருள் ஏதோ ஒன்று கருதி இவ்வாறு இவர்களைத் தூண்டியது என்றே கருத வேண்டியுள்ளது.

> அரசியல் சமூகக் களங்களில் பகைபற்றி வாய்க்கு வந்ததைப் பேசும் தரமற்றவர்கள் பேச்சுக்கள் போலத் தமிழ்ச் சைவ உலகிலும் தரமற்ற ஆராய்ச்சிகள் தோன்றி நமது சைவ சமயத்தின் உயிர் நாடியை மலினப்படுத்தி விட்டன.

## விழுக்காட்டு நம்பிக்கை வேண்டாம்

நமது நாட்டில் மட்டுமல்லாமல் உலகம் முழுவதும் இருக்கும் மாந்தர் அனைவரும் அவரவருக்கு உகந்த ஒரு சமய நெறியைக் கடைப்பிடித்து அதன்வழி நடந்து வருகின்றனர். அவ்வாறு ஒழுகிவரும் ஒவ்வொரு சமயத்தவரும் தங்கள் தங்கள் சமயத்திற்கான முதல் நூல்கள் இவை என்பதைப் பற்றிய ஐயம் எக்காலத்தும் நிகழாமல் அவற்றையறிந்து அவையே நிலையான வாய்மை என நம்பிப் பின்பற்றி வருகின்றனர். இன்றுவரையும் நமது சைவத்தோடு சேர்த்துவைத்துப் பேசப்படும் வைணவ சமயத்தினர், தமது முதல் நூல் வேதபாஞ்சரத்திரம் வைகாநசம் ஆகிய ஆகமங்கள் எனத் தெளிவாகக் கொண்டு ஒழுகிவருகின்றனர். பௌத்தர் பிடக நூல் என்றும், கிறித்துவர் பைபிள் என்றும், முகமதியர் குரான் என்றும், சீக்கியர் கிரந்தசாகிப் என்றும் கனவிலும் ஐயுறாமல் கைக்கொண்டு வருகின்றனர்.

ஆனால் அநாதியானதும், அநாதியான முதல் நூல்களையுடையதும் எனக் கொள்ளப்படும் நமது சைவ சமயத்தில்தான், நமக்குரிய முதல் நூல்கள் யாவை என்பது பற்றிய சர்ச்சை தொடங்கப்பட்டுத் தொடர்ந்து நடைபெற்று வருகின்றது. இந்தச் சர்ச்சை பற்றியோ, இதன் தொடக்கம் பற்றியோ, நல்லது கெட்டது பற்றியோ நான் இங்கே எழுதப் போவதில்லை. ஏனெனில் அந்த அளவுக்கு அலசி ஆராயும் அறிவு எனக்குக் கிடையாது. ஏற்கனவே கூறியுள்ள திருநான்மறை விளக்க ஆராய்ச்சி என்னும் நூலை ஒருமுறைக்குப் பலமுறை படித்துப் பார்த்தால் தெளிவு கிடைக்கும் என்பதை மட்டும் கூறிக்கொள்கின்றேன்.

நீதி நூல்கள் (அதாவது திருக்குறள் ஆதியான நூல்கள்,) சமயக் கொள்கைகளைக் கூறும் நூல்கள் (அதாவது திருமுறைகள், மெய்கண்ட சாத்திரங்கள், சைவப் புராணங்கள்,) அடுத்து நமது பிறப்பு, நமக்குப் பிறந்தோர் ஆகியவற்றில் நூற்றுக்கு

> நீதி நூல்கள் (அதாவது திருக்குறள் ஆதியான நூல்கள்,) சமயக் கொள்கைகளைக் கூறும் நூல்கள் (அதாவது திருமுறைகள், மெய்கண்ட சாத்திரங்கள், சைவப் புராணங்கள்,) அடுத்து நமது பிறப்பு, நமக்குப் பிறந்தோர் ஆகியவற்றில் நூற்றுக்கு நூறு நம்பிக்கைக் கொள்ளவேண்டும்.

நூறு நம்பிக்கைக் கொள்ளவேண்டும்.

மொழியாராய்ச்சி, மாந்தரின ஆராய்ச்சி, இலக்கிய ஆராய்ச்சி, தொல்லியல் ஆராய்ச்சி, அறிவியல் ஆராய்ச்சி மற்றும் இன்னோரன்ன ஆராய்ச்சிகள் எல்லாம் அறிவின்பாற்பட்டவை. அவரவரின் அறிவின் அகலத்தின்பாற்பட்டு, இவ்வராய்ச்சிகள் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. தொடர்ந்து நடைபெறும். இதனை யாராலும் தடுத்து நிறுத்த முடியாது. இத்தகைய ஆராய்ச்சிகள் தேவையே.

இந்த வகை ஆராய்ச்சி களுக்கும், சமய ஆராய்ச்சிக்கும் பெரிய வேறுபாடு உண்டு. சமய ஆராய்ச்சி, அதாவது இறை உண்மை பற்றிய தேடல் ஒருகட்டத்தில் வந்து நின்றுவிடும். அதற்குமேல் நம்பிக்கை ஒன்றே நிற்கும். இந்த நம்பிக்கையில் முழுவதும் நாம் ஒன்றவேண்டும். இதில் விகிதாசாரம் பார்க்கக்கூடாது. எழுபது விழுக்காடு உடன்படுகிறேன், மீதி முப்பதில் எனக்குச் சந்தேகமே என ஒருவன் சொல்வானேயானால், அவன் கடவுள் நம்பிக்கை அற்றவன் என்றே கருதப்படுவான்.

"இவன்தான் உன் தந்தை" என ஒருதாய் சொல்வதை எவ்வித சந்தேகமும் இன்றி ஒருவன் ஏற்றுக்கொள்வது போன்றது 'இறை நம்பிக்கை' என மணிமேகலை கூறுகின்றது. இந்த இறை உண்மையை எடுத்துக்காட்டுவனவே நமது தோத்திர சாத்திர நூல்கள். இந்த நூல்களில் உரைக்கப்படும் உண்மைப் பொருள் உணராமல் தம் மனம்போன போக்கில் உரை சொல்வது மிகவும் வருந்தக்கது.

'இவன்தான் உன் தந்தை' என ஒருதாய் சொல்வதை எவ்வித சந்தேகமும் இன்றி ஒருவன் ஏற்றுக்கொள்வது போன்றது 'இறை நம்பிக்கை' என மணிமேகலை கூறுகின்றது.

## எது அயல் வழக்கு?

அஞ்சல் வழியும், சில நேர்முக வகுப்புகள் வழியும் சைவ சித்தாந்தம் படிக்கின்றார்கள் என்ற வகையில் படிப்பவர்களையும்,

படிப்பிப்பவர்களையும் போற்றுவதும், பாராட்டுவதும் நமது கடமை. இது சிறந்த தொண்டு. ஆனால், பல ஆண்டுகள் நேர்முகமாக இருந்து படிக்கும்போதே மலைக்கச் செய்கின்ற நமது திருமுறைகளின் தொடர்கட்கு ஆறு அல்லது பன்னிரெண்டு மாதத்தில் சான்றிதழ் பெறுவது மட்டுமே கொண்டு விளக்கம் எழுதுவது மிகையாகும். சான்றுக்கு ஓர் இடம்.

"வேத நெறி தழைத்தோங்க ! மிகுசைவத் துறை விளங்க !" என்னும் சேக்கிழார் வாக்கிற்குப் பொருள் சொல்லவந்த அன்பர் ஒருவர், "வேதநெறி என்பது சைவ சித்தாந்தத்தையே, வைதிகத்தை அன்று" என எழுதுகிறார். மேலும் "ஆரிய வேதங்கள் வழிவந்த வைதிக நெறியே 'அயல் வழக்கு' என்பது பெறப்படுகிறது" எனவும் எழுதுகிறார். இதற்கு ஒரு சைவ சந்நிதானம் வாழ்த்துச் சொல்கிறார். ஈதெல்லாம் மிகவும் பிழையான கருத்துக்கள்.

வேதநெறி என்பது, 'வைதிகத்தை அன்று' எனக் குறிப்பிடும் அன்பர், 'வைதிகத்தின்வழி ஒழுகாத' என்று வரும் சம்பந்தர் வாக்கில் காணப்படும் 'வைதிகம்' என்பதற்குச் 'சைவ சித்தாந்தம்' எனப் பொருள் கூறுவாரா? சம்பந்தர் காலத்தில் அந்த வழக்கு இருந்ததா?

வேதநெறி என்பது, 'வைதிகத்தை அன்று' எனக் குறிப்பிடும் அன்பர், 'வைதிகத்தின்வழி ஒழுகாத' என்று வரும் சம்பந்தர் வாக்கில் காணப்படும் 'வைதிகம்' என்பதற்குச் 'சைவ சித்தாந்தம்' எனப் பொருள் கூறுவாரா? சம்பந்தர் காலத்தில் அந்த வழக்கு இருந்ததா?

சமணர்களும் புத்தர்களும் ஆரிய வேதத்தை தமிழகத்தில் மட்டுமா எதிர்த்தார்கள்? இந்தப் பெருநிலம் முழுவதும் எதிர்த்தார்கள். ஆனால் சைவ சித்தாந்தம் தமிழர்களுக்கு மட்டும்தானே உரியது.

வேதம், மறை, நான்மறை எனப்படும் சொற்கள் மூவர் முதலிகளால் ஆரிய வேதங்களைச் சுட்டியே கையாளப்படுகின்றன என்பதைத் தக்க சான்றுகளுடன் கண்டு வந்துள்ளோம்.

*"மேதினிமேற் சமண்கையர் சாக்கியர்தம் பொய்ம்மிகுத்தே*
*ஆதிஅரு மறைவழக்கம் அருகிஅரன் அடியார்பால்*
*பூதிசா தனவிளக்கம் போற்றல்பெறா தொழியக்கண்(டு)*
*ஏதமில்சீர்ச் சிவபாத விருதயர்தாம் இடருழந்தார்."*

என்றும்;

*"மனையறத்தில் இன்பமுறு மகப்பெறுவான் விரும்புவார்*
*அனையநிலை தலைநின்றே ஆடியசே வடிக்கமலம்*
*நினைவுறமுன் பரசமயம் நிராகரித்து நீறாக்கும்*
*புனைமணிப்பூண் காதலனைப் பெறப்போற்றுந் தவம்புரிந்தார்."*

என்றும் வருகின்ற பெரியபுராணப் பாடல்கள், சமணர், புத்தர் ஆகியோரின் பொய்க் கொள்கைகளை அழித்து வேத வழக்கம் மிகுந்து அடியார்களிடத்துப் பூதி சாதனம் விளங்கித் தோன்றவேண்டும்; அதற்காக ஒரு பிள்ளையை எனக்குத் தந்தருள வேண்டும் எனச் சிவபாத இருதயர் தவமிருந்தார் என்பதனை விளக்கி நிற்பதை உணர வேண்டும். இந்த நோக்கத்திற்காகவே பிள்ளையார் அவதாரம் நிகழ்ந்தது என்பதனைச் சேக்கிழார் சொல்லும் இடம்தான் "வேதநெறி தழைத்தோங்க !" என்பதாகும்.

தந்தையார் நோக்கம் நிறைவேறும் வகையில், சைவ சமய வழக்கிற்கு அயல் வழக்காகிய சமணர் புத்தர் வழக்கை அழித்து ஒழிக்கத் தேவரீர் திருவுள்ளம்பற்ற வேண்டும்! என மதுரைப் பெருமானிடம் விண்ணப்பித்து ஞானசம்பந்தர் அனுமதி பெற்று வெற்றி பெற்றதை அனைவரும் அறிவர்.

*"வேதவேள்வியை நிந்தனை செய்துழல்*
*ஆதமிலி அமணொடு தேரரை"*

*"வைதிகத் தின்வழி யொழுகா தஅக்*
*கைதவ முடைக்கா ரமண் தேரரை"*

*"அழல தோம்பும் அருமறையோர் திறம்*
*விழல தென்னும் அருகர்"*

என்னும் சம்பந்தர் வாக்குகள் வைதிக நெறியைத்தானே குறிப்பிடுகின்றன. அந்த அன்பருக்கு இன்னொரு இடத்தையும் சுட்டிக்காட்டுகிறேன்.

*"புத்தரோடு சமணர்சொற்கள் புறனுரை யென்றிருக்கும் பத்தர்வந்து"*

என்னும் சம்பந்தர் வாக்கில் புறனுரை என்பது புத்தர் சமணர் சொற்களைத்தானே குறிப்பிட்டு நிற்கின்றது. அச்சொல், வேதத்தைக் குறிக்கிறது என்றும், அதுவே அயல் வழக்கு என்றும் அந்த அன்பரால் சொல்ல முடியுமா? வேதத்தை ஏற்று மெய்ப்பொருள் விளக்கத்தில் வேறுபடுவதை வேத விரோதம் என்றும்; அயல் வழக்கு என்றும் சொல்ல முடியாது.

சைவம் வேதத்தைப் பொதுவாக ஏற்றாலும் சரி, சிறப்பாக ஏற்றாலும் சரி, அதுபற்றிய கவலை இங்கே தேவை இல்லை. வேதத்தை ஏற்றுப் போற்றுகிறது, அவ்வளவுதான் தேவை. சைவத்தைப் போலவே வேதத்தை ஏற்றுக்கொள்கின்ற அனைத்தும் வேத மதமே! இதனை வைதிக மதம் என்பர். வேதத்தை ஏற்காமல் முழுவதுமாக ஒதுக்கித் தள்ளிவிட்ட வழக்கே "அயல் வழக்கு" என்பதாகும். நால்வர் வாக்கில் வேதம் என்னும் சொல் எந்தப் பொருளில் கையாளப்படுகிறதோ, அதே பொருளில்தான் சேக்கிழாரும் கையாளுகின்றார். நமக்கு இருக்கின்ற வெறுப்பைச் சேக்கிழார் சொல்கிறார் என அவர் மீது ஏற்றிக் கூறுவது எந்த விதத்தில் நியாயம்? தங்கள் தங்கள் கருத்துக்களை நூலாசிரியர்கள் மீது ஏற்றிக்கூறும் அநியாய ஆராய்ச்சி நம் தமிழகத்தில் மட்டும் தான் நடைபெறுகிறது. காரணம் ஆழ்ந்த படிப்பின்மை.

> வேதத்தை ஏற்காமல் முழுவதுமாக ஒதுக்கித் தள்ளிவிட்ட வழக்கே 'அயல் வழக்கு' என்பதாகும்.

## நான்மறை

எனது நூலுக்கு அணிந்துரை அளித்து அருளிய பரிபூரணமான

தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள், "நான்மறை என்பது நான்கு உறுதிப்பொருள்கள் என்று கொள்வதில் தவறில்லையானாலும் முடிவானதாகாது" என்றும், "மூவர் திருமுறையும் திருக்குறளும் நான்மறைகள் என்று சிலர் கூறுகின்றனர்" என்றும் கருத்துச் சொல்லியுள்ளார்கள்.

நான்மறை நான்கு உறுதிப் பொருள்கள் என்பதில் அடிகளாருக்கு முற்றாக உடன்பாடில்லை. சிலர் கருத்து இது எனச் சொன்னார்களே தவிர, அதுதான் சரி என்றும் சொல்லவில்லை.

மூவர் திருமுறையும் திருக்குறளும் நான்மறைகளா? என்பது பற்றிச் சிந்திப்பதற்கு முன்பு இந்த நான்கிலும் சொல்லப்படும் ஒத்து வேதம் மறை ஆகிய சொற்கள் வடமொழி வேதங்களைக் குறித்து நிற்கின்றனவா? அல்லவா? என்பது பற்றிச் சிறிது பார்ப்போம்.

*"மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்*
*பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்"* - என்பது குறள்.

இந்தத் திருக்குறளில் காணப்படும் "ஒத்து" என்னும் சொல், தான் எழுதிய திருக்குறளையே சுட்டுகிறது என வள்ளுவர் கூறுவாரா? இவ்வாறு வள்ளுவர் கூறுவார் எனக் கனவிலும் கருத முடியாதே! வள்ளுவர் காலத்தில் நமது மூவர் முதலிகளின் அருளிப்பாடுகள் தோன்றவில்லை; ஆதலால் மூவர் தேவாரத்தை இந்தக் குறளில் காணப்படும் "ஒத்து" சுட்டி நிற்கிறது எனச் சொல்ல முடியாது. ஆகக் குறளில் காணப்படும் ஒத்து இவற்றினும் வேறுபட்டதாகவே இருக்க முடியும். அது எது? அது வடமொழி வேதத்தையே சுட்டி நிற்கிறது என்பதை நடுவுநிலை நெஞ்சோடு ஒப்புக்கொள்ள வேண்டும். ஏனெனில், தமிழ் மொழி வேதம் என்பது வள்ளுவர் காலத்தில் இல்லை என்பது மேலே சொல்லப்பட்டது.

*"மறைகலந்த ஒலி பாடலோ டாடவர்"*
*"மந்திர வேதங்கள் ஓது நாவர்"*
*"வேதமங்கமாறு மறை நான்கவையும் ஆனார்"*
*"வேதமோதி வெண்ணூல் பூண்டு"*
*"பொய்யாமறை பாடல் புரிந்தான்"*

*"மறையும் ஓதுவார்"*
*"ஆறுநான்கும் சொன்னானும் ஐயாறுடை ஐயனே"*
*"நான்மறை யோடாறங்கம் வல்லானை"*
*"சொல்லுள சொல்லு நால்வேதப் பாட்டினார் போலும்"*

இவை போன்ற எத்தனையோ எடுத்துக்காட்டுகளைத் திருஞானசம்பந்தர் தேவாரத்திலிருந்து காட்டலாம்.

அப்பரடிகள் வாக்கிலிருந்து சில இடங்கள்,

*"ஓதினார் வேதம் வாயால்"*
*"கூறினார் ஆறும் நான்கும்"*
*"பாடினார் சாமவேதம் பைம்பொழில் பழனமேயார்"*
*"நான்மறையின் ஒலி தோன்றும்"*
*"நாலுமறை அங்கமோதக் கண்டேன்"*
*"அருமறையோ டாறங்கம் ஆய்ந்துகொண்டு*
*பாடினார் நால்வேதம்"*

விரிக்கின் நீளும் என்பதால், அடுத்து சுந்தரமூர்த்தி சுவாமிகள் வாக்கிலிருந்து சில இடங்களைப் பார்ப்போம்.

*"மறையோதீ மங்கை பங்கா"*
*"மறைநான்கும் விரித்துகந்தீர்"*
*"விரித்தவேதம் ஓதவல்லார்"*
*"சாமவேதம் பெரிதும் உகப்பானை"*
*"பாடிய நான்மறையான்"*

இவ்வாறாக திருவாசகம், திருமந்திரம், திருவிசைப்பா, பதினோராம் திருமுறை முதலானவற்றில் ஏராளமான இடங்களில் 'நான்மறை' ஆதியான சொற்களைக் காணலாம். இங்கே காட்டப்பட்டுள்ள அருளாளர்களின் அருளிப்பாடுகளில் சுட்டப்பெறும் 'நான்மறை' வடமொழி வேதங்களையே சுட்டுகிறது என்பதில் ஐயம்கொள்ள இடமில்லை.

இங்கே காட்டப்பட்டுள்ள அருளாளர்களின் அருளிப்பாடுகளில் சுட்டப்பெறும் 'நான்மறை' வடமொழி வேதங்களையே சுட்டுகிறது என்பதில் ஐயம்கொள்ள இடமில்லை.

தமிழ் நிகண்டு ஆசிரியர்களில் முதல் ஆசிரியர் திவாகரர். இவர் இயற்றிய திவாகர

நிகண்டில் "மறையே வேதமும் மறைத்து மொழி கிளவியும்" எனச் சூத்திரம் செய்தார். மறை என்பதற்குப் பரியாய நாமங்களாகச் சுருதி, வேதம், சாகை, எழுதாக்கிளவி எனவும் அதில் சொல்லப்பட்டுள்ளது. வேதம் என்பதற்கு இவர் சொந்தமாகப் பொருள் கூறினார் என்று சொல்ல முடியுமா? இவர் காலத்திற்கு முன்பிருந்த பண்டை நூல்களின் ஆட்சியையும், வழக்கையும் கொண்டுதானே பொருள் சொல்லியிருக்க முடியும். இவர் காலம் 1100 ஆண்டுகளுக்கு முந்தையது என இலக்கிய வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுகின்றனர் என்பதை நினைவில் கொள்ள வேண்டும். மேலும் நமது சிவபெருமான் துதியாகத் 'தமிழ் மறை' எனப்படும் தேவாரம் தோன்றியது போலவே திருமால் துதியாகத் 'திராவிட வேதம்' என்னும் 'நாலாயிர திவ்வியப் பிரபந்தம்' தோன்றியது. இந்தத் திராவிட வேதத்திலும், மறை, நான்மறை மறையோர் என்ற சொற்கள் பரவலாகப் பேசப்படுவதைப் பார்ப்போர் காணலாம்.

## திருக்குறளும் மறையும்

சிலர், மூவர் திருமுறைகளுடன் திருக்குறளையும் சேர்த்து 'நான்மறை' எனக் கூறுகின்றனர். இக்கூற்று சிந்திக்க வேண்டிய ஒன்று. வடமொழி வேதங்கள் நான்கு என எண்ணிக்கையை மனத்தில் கொண்டு மூவர் திருமுறைகளுடன் திருக்குறளையும் சேர்த்துக் கொண்டார்களோ என்ற ஐயம் ஏற்படுகிறது. ஏனெனில் திருக்குறளைச் சைவ சமய நூல் என்று சொல்ல இயலாது என்கின்றனர்.

அரசஞ்சண்முகனார் போன்ற பெரும் புலவர்கள் சைவ சித்தாந்தக் கருத்துக்களைத் திருக்குறளில் ஏற்றிக் கூறுகிறார்கள். அது அவர்கள் புலமைத்திறத்தையும், சமயப் பற்றையும் காட்டுகின்றதே தவிர, உண்மை அதுவாக இல்லை என்று மற்றையோர் மறுக்கின்றனர். இம் மறுப்பாளர்களின் கூற்றில் இருக்கும் நியாயத்தையும் தள்ள முடியவில்லை. திருக்குறளுக்குக் கவிராச பண்டிதர் எழுதிய சைன சம்பிரதாய உரைக்குப் பேராசிரியர் அ. சக்ரவர்த்தி நயினார் (ஏறக்குறைய நூறு ஆண்டுகளுக்கு முன்பு கும்பகோணம் அரசு

ஆடவர் கல்லூரியில் முதல்வராக இருந்தவர்) எழுதியுள்ள ஆங்கில முன்னுரையில் அதற்கான காரணங்களைக் காணலாம்.

மேலும் வேதக் கருத்துக்களைத் திருக்குறள் மறுக்கிறது எனவும் ஆய்வாளர் சிலர் கூறுகின்றனர். வைணவ சமயக் கருத்துக்கள் திருவள்ளுவரால் போற்றப்படுகின்றன எனச் சொல்வாரும் உண்டு. "முதல் திருக்குறளில் கோயில் கொண்டுள்ள ஆதிபகவனை ஆராய்ச்சிக்காரர்கள் படுத்தும்பாட்டை என்னவென்று கூறுவேன்" எனத் திரு.வி.க. வருந்திக் கூறுகின்றார். இந்த வம்பெல்லாம் வேண்டாம் எனக் கருதியோ என்னவோ தேவநேயப் பாவாணர் தமது மரபுரையில் இறைவன், கடவுள், தேவன் என்னும் பிற சொற்கள் இருக்கவும், 'பகவன்' என்னும் சொல்லை ஆண்டது, 'அகரம்' என்னும் சொற்கு எதுகையாயிருத்தல் நோக்கியே என எழுதினார்.

இந்த வம்பெல்லாம் வேண்டாம் எனக் கருதியோ என்னவோ தேவநேயப் பாவாணர் தமது மரபுரையில் இறைவன், கடவுள், தேவன் என்னும் பிற சொற்கள் இருக்கவும், 'பகவன்' என்னும் சொல்லை ஆண்டது, 'அகரம்' என்னும் சொற்கு எதுகையாயிருத்தல் நோக்கியே என எழுதினார்.

"தீக்குறளை சென்றோதோம்" என்னும் ஆண்டாள் வாக்கில் வரும் தீக்குறள் திருக்குறள்தான் எனச் சொல்லும் துணை வேந்தரும் இருக்கின்றார். சகர ஒற்று வந்தால் எப்படிப் பொருள் வரும், அவ்வொற்று இல்லாமல் வந்தால் எத்தகையப் பொருளைத் தரும் என்பதனை மயிலம் ஆ. சிவலிங்கனாரைக் கேட்டு இந்தத் துணைவேந்தர் தெரிந்துகொள்ள வேண்டும். சகர ஒற்று இல்லாமல்தான் ஆண்டாள் அருளியுள்ளார். குறளை என்பதற்குப் பொருள் 'புறங்கூறல்' என்பதாகும்.

திருக்குறளை 'மறை' என்றும், அதிலும் 'பொதுமறை' என்றும் கூறக்கூடாது என முஸ்லீம் சமுதாய அறிஞர் 'மதனீ' என்பார் “பொதுமறை எது? குறளா?, குரானா?" என்னும் தலைப்பில் ஒரு நூல் எழுதியுள்ளார்.

"வேதம் என்பது இறைவன் படைப்பு, நீதிநூல் என்பது மனிதப்படைப்பு. இறைவாக்கு மங்காது மாறாது மறையாது. மனித வாக்கோ, மங்குவது அழிவது காலத்துக்குக் காலம் மாறுவது" எனக் கருத்துரைத்து, திருவள்ளுவர் படைப்பு இறைவாக்காகாது எனச் சொல்கிறார் திரு. மதனீ.

"விவிலியத்தின் முதல் வார்த்தை 'ஆதியிலே பகவன்' என்று உள்ளதால், ஆதிபகவனைக் கிறித்தவம் சுட்டுகிறது என்கிறார் கிறித்துவ அறிஞர் திரு. மு. தெய்வநாயகம்.

இந்த வகையில் திருக்குறளை மறை எனச் சொல்வதில் பொதுமறை எனச் சொல்வதில் அதிலும் குறிப்பாக ஒரு சமயத்தினர் தங்கள் மறை எனச் சொல்வதில் கருத்து வேறுபாடுகள் அதிகம் உண்டு என்பதால், திருக்குறளைச் சைவ சமய நான்மறைகளில் ஒன்று எனக் கொள்வதில் சங்கடம் உண்டாகிறது.

> திருக்குறளைச் சைவ சமய நான்மறைகளில் ஒன்று எனக் கொள்வதில் சங்கடம் உண்டாகிறது.

## தமிழ் நான்மறை

"தமிழ் நான்மறை என்பது, தேவார திருவாசகம் என்றும், அவற்றிற்கும் வடமொழி நான்மறைக்கும் உள்ள பேதம், இரு பாஷைகளும் தங்கண் உள்ள சாத்திர உண்மைப் பொருளை அறிவுறுத்திச் சிவானந்தப் பேற்றை எய்துவிக்கும் சிறப்புடையனவாயினும், முன்னையது திராட்சபாக அமைதியும், பின்னையது நாரிகேளபாக அமைதியும் பெற்றுப் பிரகாசிக்கின்றன" எனத் தமது "தமிழ் நான்மறையின் தெய்வீக உண்மை" என்னும் நூலில் மறைமலை அடிகளார் கூறியிருக்கின்றார். இந்தக் கருத்தே சரியானது.

வைணவர்கள் நம்மாழ்வார் பிரபந்தங்கள் நான்கும் வேதத்திற்கொத்தன எனக் கொண்டு, அவற்றுள் திருவிருத்தம் இருக்கு வேதம்; திருவாசிரியம் எசுர்வேதம்; பெரிய திருவந்தாதி அதர்வண வேதம்; திருவாய்மொழி சாம வேதம் என உரைப்பர். வேத அங்கங்கள் ஆறுக்கும் திருமங்கையாழ்வார் பிரபந்தங்கள் ஆறும்

இணையாகும் என்பர்.

நம்மாழ்வார் பிரபந்தங்கள் வேதங்களின் சாரமே என்பதில் வைணவர்கள் சந்தேகப்படாமல், 'வேதம் தமிழ் செய்த மாறன்' எனக் கொண்டாடுகின்றனர். "மிக்க வேதியர் வேதத்தின் உட்பொருள் நிற்கப் பாடி என் நெஞ்சுள் நிறுத்தினான்" என நம்மாழ்வாரின் சீடர் மதுரகவியாழ்வார் நம்மாழ்வாரைப் போற்றி உச்சிமேற் கொள்கிறார்.

இந்த வகையில் நமது மூவர் முதலிகளுக்குச் சீடராகிய தெய்வச் சேக்கிழார் செய்தருளிய பெரியபுராணம் நம் சைவத் தமிழ் மக்களுக்குக் கண் போன்றது.

தேவாரம் தோன்றிய வரலாற்றையும், அத்தமிழ் மறையின் உண்மைப் பொருள் ஈது என நாம் அறிந்துகொள்ளவும் பெரியபுராணமே சான்றாதாரமாக இருக்கின்றது. சேக்கிழார் வாக்குகளே சைவ சமயத்தினருக்கு மேல்வரிச் சட்டங்களாகும்.

தேவாரம் தோன்றிய வரலாற்றையும், அத் தமிழ் மறையின் உண்மைப் பொருள் ஈது என நாம் அறிந்துகொள்ளவும் பெரியபுராணமே சான்றாதாரமாக இருக்கின்றது. சேக்கிழார் வாக்குகளே சைவ சமயத்தினருக்கு மேல்வரிச் சட்டங்களாகும்.

நமது ஞானபானுவாகிய சம்பந்தர் அவதாரத்தைச் சொல்லவந்த சேக்கிழார், எடுத்த எடுப்பிலேயே "வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்க" அவர் அவதரித்துப் புனிதவாய் மலர்ந்தழுததாகக் குறிப்பிடுகின்றார். சிவஞானத்து இன்னமுதை பாலுடன் குழைத்து அம்மை அருளிய பின்னர், சிவனுடன் சம்பந்தமாகிப் பரமசிவத்தால் பிள்ளையாக ஆட்கொள்ளப்படுகிறார்.

இந்தப் பின்புலத்தை நினைவில் கொண்டு சில இடங்களைப் பார்ப்போம். ஞானசம்பந்தர் வாக்கு வேதவாக்கு அதாவது சிவன் வாக்கே எனத் தெளிவோம்.

திருத்தருமபுரத்தில் ஒரு காட்சி. திருநீலகண்ட யாழ்ப்பாணர்

உடன்வர பிள்ளையார் தருமபுரம் எழுந்தருளுகின்றார். பாணனாரின் தாயார் பிறந்தபதி தருமபுரம். சுற்றத்தார் சூழ்ந்து நின்று "பிள்ளையாரின் பாடல் உமது கருவியால் சிறப்பு எய்துகிறது" எனச் சொல்லக் கேட்டு நடுங்கிய பாணனார், "இவர்கள் கருத்துத் தவறு என்பதை உலகோர் உணரப் பாடல் ஒன்று அருள வேண்டும்" என்று காழிக் கன்றிடம் விண்ணப்பிக்க, அவரும், எந்த முயற்சியிலும் அடங்காத "மாதர் மடப்பிடி" என்னும் தொடக்கமுடைய பதிகத்தை அருளிச் செய்தார்.

பாணனார் இசைகூட்ட இயலாமையால் மனம் உளைந்து 'இக்கருவியன்றோ இவர்களுக்கு இத்தகைய எண்ணத்தை அளித்தது' என அதனை உடைக்கப் புகுந்தார். அப்போது பிள்ளையார் அவர் செயலைத் தடுத்து, "ஐயரே! சிவசக்தியின் திருவிளையாட்டெல்லாம் இக்கருவியில் அமையுமோ? முடிந்த வரையில் முயற்சித்தலே முறை" என்று கூறி யாழை அவரிடம் தந்தருளினார்.

இப்பதிகத்தை 'யாழ் மூரிப் பதிகம் என்பர். மூரி என்றால் வலிமை என்பது பொருள். யாழ் இசையைக் காட்டிலும் பதிகத் திறன் வலிமையானது என்பதால் இப்பெயர் பெற்றது. யாழ் முறி அன்று.

இப்பதிகத்தை 'யாழ் மூரிப் பதிகம் என்பர். மூரி என்றால் வலிமை என்பது பொருள். யாழ் இசையைக் காட்டிலும் பதிகத் திறன் வலிமையானது என்பதால் இப்பெயர் பெற்றது. யாழ் முறி அன்று.

இந்த வரலாற்றிலிருந்து சேக்கிழார் நமக்கு ஒரு செய்தியைத் தருகிறார்: தாம் பாடும் பாடல்கள் எல்லாம் தாம் அருளியவை அல்ல என்றும், அவை யாவும் "ஆளுடையாளுடனேகூடச் செய்ய சடையார் அளித்த திருவருளின் பெருமையே" எனச் சம்பந்தர் கூறுவதாகும் அந்தச் செய்தி. அதாவது பெருமான் வாக்குகளே அவை என்பதாம். சிவபெருமான் வாக்கே நமது சைவர்களுக்கு 'வேதம்' எனச் சொல்லவும் வேண்டுமோ?

மேலும் ஓர் இடம். மதுரைப் பாண்டியன் முன்பு அனல் வாதத்தின் பொருட்டுத் தீ அமைக்கப்படுகிறது. அத்தீயின் அருகில்

முப்பொருள்களையும் ஆயும் முத்தமிழ் விரகர் அணைகிறார். அப்போது தீக்கடவுள் தனது புகையைக் கரந்து தனது ஒளியை மட்டும் அவருக்குக் காட்டி அமைகின்றான்.

நெருப்பில் இடுவதற்கான பதிகம் வேண்டும். புதிதாகப் பாடி இடுவதா? ஏற்கெனவே பாடப்பட்ட பதிகம் ஒன்றை எடுத்து இடுவதா? எனச் சிந்தித்த சிறிய பெருந்தகையார், ஏற்கெனவே பாடப்பட்ட பதிகத்திலிருந்து ஒன்றை எடுத்து இடுதலே சரி என முடிவுக்கு வருகிறார்.

சிவன் ஒன்றே மூலப் பொருள் என்று தாம் ஏற்கெனவே சொல்லியருளிய பதிகக் கட்டினைப் (பொத்தகத்தை சுவடியை) போற்றி எங்கள் நாதனே பரம்பொருள் எனத் தொழுது தமது அழகிய கைகளால் எடுத்துத் தமது தலைமேல் வைத்துக்கொண்டார். பின்பு அச்சுவடிக் கட்டினைப் பிரித்தார். அதன்பிறகு உண்மைப் பொருள் உணர்த்தும் திருமுறைகளைப் (பதிகங்களை) பாண்டியனுக்குத் திருநீறு அளித்த வளமுடைய தமது திருக்கைகளால் புரட்டும் போது, (அதாவது கயிறு சார்த்திப் புரட்டும்போது) "போகமார்த்த பூண் முலையாள்" எனத் தொடங்கும் திருநள்ளாற்றுப் பதிகம் நேர்பட, அதனை எடுத்து அனலில் இட்டார். இது மதுரை நிகழ்ச்சி.

இந்த மதுரை நிகழ்ச்சியைக் கொண்டு சேக்கிழார் ஒரு செய்தியை நமக்குத் தருகிறார். தாம் பாடிய திருப்பதிகங்களின் சுவடிக் கட்டைப் பரம்பொருள்எனத்திருஞானசம்பந்தர் தொழுததும், அதனை எடுத்துத் தமது உச்சிமீது வைத்துக்கொண்டதும், அது பரம்பொருள் அருளிய வேதமே என்பதை உலகோர்க்கு உணர்த்தவே அவ்வாறு செய்தார் என்பதாகும் அந்தச் செய்தி.

தாம் பாடிய திருப்பதிகங்களின் சுவடிக் கட்டைப் பரம்பொருள் எனத் திருஞானசம்பந்தர் தொழுததும், அதனை எடுத்துத் தமது உச்சிமீது வைத்துக்கொண்டதும், அது பரம்பொருள் அருளிய வேதமே என்பதை உலகோர்க்கு உணர்த்தவே அவ்வாறு செய்தார் என்பதாகும் அந்தச் செய்தி.

மேலும் திருஞானசம்பந்தர் தமது திருவாக்குகளில் "எனதுரை",

"தனதுரை"யாக, "வாய்மையினால் நாமரு கேள்வி ஞானசம்பந்தன்", "பதியான ஞான முனிவன்", "சுற்றுமுற்று மாயினான்", எனத் தம்மைப் பற்றிக் கூறுவதிலிருந்து ஞானசம்பந்தருக்கும் ஈசனுக்கும் வேறுபாடு இன்மை தெளிவாகிறது. அதாவது ஈசனே சம்பந்தர். சம்பந்தரே ஈசன். ஆதலால் ஞானசம்பந்தர் தேவாரம் ஈசன் அவரிடமாக நின்று தமிழில் அருளிய வேதமாகிறது என்பது முற்றிலும் தெளிவாகிறது. அடுத்து,

*"முன்னமே முனியாகி எமை அடையத் தவம் முயன்றான்*
*அன்னவனை இனிச்சூலை மடுத்தாள்வம் என அருளி"*

என்னும் சேக்கிழார் திருவாக்கால் திருநாவுக்கரசர் ஈசன்பக்கம் ஏற்கெனவே எய்தி இருந்ததை இனிது அறியலாம். இடைப்பட்ட காலமும் ஈசன் எண்ணத்தில் அவர் இடையறாது இருந்தார் என்பதையும் சேக்கிழார் வாக்குக் கொண்டு உணரலாம்.

சூலை நோயின் கொடுமையை அப்படியே எடுத்துக்காட்டித் தன்துயர் நீங்க வேண்டி அவர் பாடிய முதற் பாடலிலேயே செந்தமிழின் சொல்வளம் நிரம்பி நின்ற நீர்மையில் மனத்தைப் பறிகொடுத்த பரமன் "நாவுக்கரசர்" என்னும் சிறப்புப் பெயர் அருளி, அவரை ஆட்கொண்டதால் ஆளுடைய அரசரனார்.

"வாக்குக்கு ஈசன்" என, "வையகம் புரக்கும் ஈசன்" சொல்லி அருளியதால் அப்பரடிகளின் வாக்கு வேதவாக்காகியது. அவரது பாடல்களும் வேதமாயின.

சுந்தரமூர்த்தி சுவாமிகளின் பாடல்கள் வேதங்களே எனச் சொல்ல வேண்டியதில்லை. தில்லைக்கூத்தனின் திருவடிகளைத் தொழுதாலே ஊனடைந்த உடம்பின் பிறவி தானடைந்த உறுதியைச் சாரும்போது, நாள்தோறும் ஈசன் பக்கம் நின்று பணி செய்து, அவன் ஏவலால் தென்திசையில் அவதரித்து, அவனால்"தோழன்" என ஏற்கப்பட்டு, எண்டிசையும் புகழ்பரப்பி, மீண்டும் கயிலை சார்ந்து கண்ணுதல் பெருமான் கழல்களுக்குப் பணிவிடைச் செய்யப் புகுந்த ஆலால சுந்தரரின் வாக்கு ஆலமுண்டவனின் வாக்கு எனச் சொல்வது

மிகையே.

ஆண்டவன் திருக்கயிலையினின்று ஆசாரிய மூர்த்தமாக எழுந்தருளித் தம்மை ஆட்கொண்ட திறத்தையும், பூவார் அடிச்சுவடு தம்தலையில் பொறித்தருளிய பான்மையையும் மாணிக்கவாசகர் அடிக்கடிக் கூறுதலைத் திருவாசகத்துள் பரக்கக் காணலாம்.

மாணிக்கவாசகர் தமது திருவாசகத்தின் முதல் பகுதியாகிய சிவபுராணத்தை "நமச்சிவாய வாழ்க" என ஈசன் திருநாமத்தை வாழ்த்தி, வழுத்தித் தொடங்குகிறார். இவ்வாறு வாழ்த்துச் சொல்லத் தொடங்கியதும் அவன் அருட்குறிப்பே எனத்திருப்பெருந்துறைப் புராணம் கூறுகிறது. திருவாசகத்தை மாணிக்கவாசகர் சொல்ல, இறைவன் எழுதிக்கொண்டான் எனில், அடிகள் வாக்கு வேதவாக்கு என்பதில் ஐயமுண்டோ.

நமது சமய குரவர்கள் நால்வரின் வாக்குகள் நமக்கு வேதங்களே. ஆதலால் மூவர் தேவாரமும், திருவாசகமும் நமக்குரிய நான்மறைகளாக விளங்குகின்றன. இந்த நான்மறை களின் அளப்பரிய ஆற்றலை, அவற்றை அக்கற்றவர்களாலேயே எடுத்துச்சொல்ல முடியாது எனில், கல்லாத என் போன்றோர் எம்மாத்திரம்.

> நமது சமய குரவர்கள் நால்வரின் வாக்குகள் நமக்கு வேதங்களே. ஆதலால் மூவர் தேவாரமும், திருவாசகமும் நமக்குரிய நான்மறைகளாக விளங்குகின்றன.

*"சிறியேன் அறிவுக் கவர்தம்திருப் பாதம் தந்த*
*நெறியே சிறிதியான் அறிநீர்மை கும்பிட்டேன்"*

அதுவும், ஆயும் அறிவினால் அன்று அன்பால் கும்பிட்டேன் எனச் சேக்கிழாரே கூறும்போது மற்றையோர் பற்றி என்ன கூறமுடியும்?

இருமொழி வேதங்களுக்கும் ஈசனே முதல்வன்

*"நன்றாய்ந்த நீள்நிமிர்சடை*
*முதுமுதல்வன் வாய்போகாது*
*ஒன்றுபுரிந்த ஈரிரண்டின்*
*ஆறுணர்ந்த ஒருமுதல்நூல்"*

என்னும் புறநானூற்றுப் பாடல் வரிகளில் புலவர் ஆவூர் மூலங்கிழார் (இவர் பார்ப்பனர் அல்லர்) "சிவபெருமான் வாக்கே வேதம்" எனத் தெளிவாகக் கூறியுள்ளார். இந்தப் பாடலில் காணப்படும் "ஒரு முதல் நூல்" என்னும் சொல்தொகுதி மிகவும் ஊன்றிப் பார்க்க வேண்டியது. "ஒப்பற்ற ஆதி நூல்" என்பது இதற்கான பொருள். "வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன் கண்டது முதல் நூல்" என்பது தொல்காப்பியம்.

ஒருவன் செய்த வினைகளே தனித்து நின்று விளைவுகளைத் தர வல்லன. அந்த வினைகளைக் கொண்டு செலுத்த வல்லன் எனத் தனியே ஒருவன் தேவை இல்லை என்பார் மதத்தை எதிர்த்து விளைவுகளை யூட்டவல்ல வினைகளையே வெறுட்டி விளங்கித் தோன்றும் அறிவுடை அந்தணன் ஒருவன் உளன். அவன் அருளியதே இவ்வுலக த்திற்கு முதல் நூலாகும் எனத் தொல்காப்பியர் கூறியதை அப்படியே நமது மூலங்கிழார் எடுத்தாண்டு "முதுமுதல்வன்" என்றும், "ஒரு முதல் நூல்" என்றும் குறிப்பிடுவது பலகாலும் சிந்திக்கத்தக்கது. திவாகர நிகண்டிலும், பிங்கலந்தை நிகண்டிலும், சூடாமணி நிகண்டிலும் ஆதி நூல் என்று வேதம் கூறப்பட்டிருப்பதுடன். சிவனது பல நாமங்களைத் தொகுத்துக் கூறுமிடத்து வேத முதல்வன், மறை முதல்வன் என்னும் நாமங்களைச் சிவபெருமானுக்கே ஏற்றி வரையறுக்கப்பட்டிருக்கின்றது என்பதைக் கவனிக்க வேண்டும்.

ஒருவன் செய்த வினைகளே தனித்து நின்று விளைவுகளைத் தர வல்லன. அந்த வினைகளைக் கொண்டு செலுத்த வல்லன் எனத் தனியே ஒருவன் தேவை இல்லை என்பார் மதத்தை எதிர்த்து விளைவுகளை யூட்டவல்ல வினைகளையே வெறுட்டி விளங்கித் தோன்றும் அறிவுடை அந்தணன் ஒருவன் உளன். அவன் அருளியதே இவ்வுலகத்திற்கு முதல் நூலாகும் எனத் தொல்காப்பியர் கூறியதை அப்படியே நமது மூலங்கிழார் எடுத்தாண்டு "முதுமுதல்வன்" என்றும், "ஒரு முதல் நூல்" என்றும் குறிப்பிடுவது பலகாலும் சிந்திக்கத்தக்கது.

வைதிகரில் மீமாஞ்சக மதம் பற்றியோர் (வேதத்தின் பூர்வபாகமாகிய

கரும காண்டமே உண்மையானது. ஞான காண்டமும் அதற்கு முதலாகிய தெய்வங்களும் கற்பனை என்பார் இவர்கள்) வேதம் ஒருவனால் செய்யப்பட்டதன்று. அது சுயம்பு என்பார். இக்கொள்கையை மறுத்துப் பார்ப்பனர்களே பலவாறு எழுதியுள்ள விளக்கங்கள் இங்கே தேவையில்லை.

வேதம் ஒருவனால் சொல்லப்பட்டது என்பதை ஏற்பதே சைவர் கொள்கை. வேதம் பரமசிவனால் செய்யப்பட்டு, ஊழிக்காலத்து அவனிடமே ஒடுங்கிப் பின்பு படைப்புக் காலத்து முன்பு போலவே அவனால் தோற்றுவிக்கப்படும் எனச் சிவஞானபாடியம் கூறும்.

வேதம் ஒருவனால் சொல்லப்பட்டது என்பதை ஏற்பதே சைவர் கொள்கை. வேதம் பரமசிவனால் செய்யப்பட்டு, ஊழிக்காலத்து அவனிடமே ஒடுங்கிப் பின்பு படைப்புக் காலத்து முன்பு போலவே அவனால் தோற்றுவிக்கப்படும் எனச் சிவஞானபாடியம் கூறும்.

திருமாலே வேதகாரணன் என்றும், பிரம்மன் பரம்பரைக் காரணன் எனவும் வைணவர்கள் கூறுவர். "பூவினுள் பிறந்தோன் நாவினுள் பிறந்த நான்மறைக் கேள்வி" என்கிறது பரிபாடல். "தாமரையானும் இயல்புடை மாலும் தம்மாண் பறிகிலர் மாமறை நாலும்தம் பாட்டென்பர்" என அதனை மறுத்துப் பரமசிவனே முதல்வன் என்கின்றார் நமது காழிக்கன்று.

## வேதம் அருளிய இடம்

தமிழ்நாட்டிலே தமிழ்மக்கள் நால்வருக்குச் சிவபெருமான் கல்லால மரத்தடியிலே இருந்து அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப்பொருள்கள் நான்கனையும், ஆகமங்களையும் உணர்த்தினான் என்பர் ஒருசாரார். இவர்களை நோக்கித் "தமிழ்நாட்டிலே" எனக் கூறுகிறீர்களே! அப்படியாயின் தமிழ்நாட்டில் எந்தப் பகுதியிலிருந்து இறைவன் அவற்றை அருளினான் என்றால், கடல் கொண்ட குமரிக்கண்டத்தில் "மகேந்திரம்" எனப் பெயர் கொண்ட மலை ஒன்று உண்டு. அந்த மகேந்திரத்திலிருந்து அருளினான் என்கின்றனர். இதற்கு ஆதாரம் என்னையோ எனில், "மன்னு மாமலை மகேந்திரம்

அதனில் சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும்" என்னும் திருவாசகக் கீர்த்தித் திருவகவல் பகுதியை எடுத்துக்காட்டி, இந்த மகேந்திரம் குமரித்தலத்தில் இருந்தது என்பதற்குச் சிவதருமோத்தரம் கோபுரவியல் 47ஆம் பாடலைச் சான்று காட்டுகின்றனர்.

*"உன்னதத் தென்மயேந்திரமே உயர்மலை அம்சையகிரி*
*வின்னவிலும் சுத்திகமே இருக்கும் உயர்விந்தியமே*
*மன்னுபுகழ் மிகுபாரி யாத்திரமே எனப்பகர்ந்த*
*இன்னகிரி ஏழும் முதற்குமரி நலத்திசைந்தனவே"*

என்பது அப்பாடல்.

தென் மயேந்திரம், உயர்மலை, அம்சையகிரி, சுத்திகம், விந்தியம், பாரி, யாத்திரம் என ஏழு மலைகளின் பெயர்கள் இப்பாடலில் சொல்லப்பட்டுள்ளன. தென்மயேந்திரம் என்ற சொல்லைக் கண்டவுடன் திருவாசகத் தொடர் நினைவுக்கு வர இந்த மலையிலிருந்துதான் ஆகமங்களை அரன் அருளினான் என்ற முடிவுக்கு வந்ததுடன், தெற்குப் பகுதியிலிருந்து ஆகமங்களைச் சொன்னான் என்பதால் தமிழ் மொழியில் சொல்லி அருளினான் எனத் தங்கள் தமிழ்ப் பற்றினை ஈசன்மீது ஏற்றிக் கூறிவிட்டனர்.

இந்தப் பாடலில் ஏழுமலைகளின் பெயர்கள்தான் சொல்லப் பட்டுள்ளனவே தவிர, எந்த ஒரு மலையிலாவது ஈசனுக்குத் திருக்கோயில் உண்டு என்றோ, அதுவே அவனுக்குரிய மலை என்றோ, அங்கிருந்து அவன் ஆகமங்களை அருளிச் செய்தான் என்றோ கூறவில்லை. அதிலும் குறிப்பாக மகேந்திரமலையில் அவன் கோயில் கொண்டுள்ளான் எனக் கூறவில்லை.

இந்தப் பாடலில் ஏழுமலைகளின் பெயர்கள்தான் சொல்லப்பட்டுள்ளனவே தவிர, எந்த ஒரு மலையிலாவது ஈசனுக்குத் திருக்கோயில் உண்டு என்றோ, அதுவே அவனுக்குரிய மலை என்றோ, அங்கிருந்து அவன் ஆகமங்களை அருளிச் செய்தான் என்றோ கூறவில்லை. அதிலும் குறிப்பாக மகேந்திரமலையில் அவன் கோயில் கொண்டுள்ளான் எனக் கூறவில்லை.

இவர்கள் கூற்று கற்பனையே தவிர

வேறன்று என்பதனை அதே சிவதருமோத்தர கோபுரவியல் பாடல்கள் விளக்கிக் காட்டுகின்றன. எப்படி என்பதைப் பார்ப்போம்.

*"இமயகிரி வடகுணபால் இமையவர்கள் தொழுதேத்த*
*உமையுடனே பசுபதிதான் உறைவன்ஒரு கிரிமிசையில்*
*தமையுணர்ந்த தபோதனரும் தங்குவர்அச் சயிலத்தில்*
*கமையுடையோர் அதன்பெயரைக் கயிலைஎனக் கழறுவரே"*

**(பா.49)**

*"ஆகமங்கள் அனைத்தினையும் அருமறைகள் ஒருநான்கும்*
*மோகமற முனிவர்க்கு மொழிந்தருள ஒழிந்தனவும்*
*மாகரும் மாலயனும் மலர்தூவித் தலைவணங்க*
*ஏகனிறை அதன்மிசை இருக்கவிரும் பினன்இனிதே"*

**(பா.50)**

"இமயமலையின் வடகிழக்கில் தேவர்கள் வணங்கி ஏத்தும்படி பார்வதியுடன் பரமசிவம் எழுந்தருளியிருக்கும் ஒப்பற்ற மலை ஒன்று உண்டு. அம்மலையினிடத்துத் தவத்தோர் தங்கியிருப்பார்கள். அந்த மலையின் பெயரைப் பொறுமையுடையோர் கயிலை மலை எனச் சொல்வார்கள்."

"அந்தக் கயிலைமலையில் ஆகமங்களையும், வேதங்களையும் மற்றவற்றையும் முனிவர்களுக்கு உணர்த்தியருள தேவர்களும் பிரமனும் திருமாலும் மலரால் அருச்சித்துத் தலையால் வணங்க ஏகனாகிய சிவபெருமான் இனிதாக எழுந்தருளியிருக்கிறான்" என்பது மேற்கண்ட பாடல்களுக்கான பொருளாகும்.

கயிலை மலையில்தான் வேதங்களையும் ஆகமங்களையும் இறைவன் அருளிச் செய்தான் என நமது சைவத் தோத்திரங்களும், சாத்திரங்களும், பெரியபுராணமாகிய புராணங்களும் திரும்பத்திரும்பக் கூறிவருவதை ஏனோ இவர்கள் ஏற்க

கயிலை மலையில்தான் வேதங்களையும் ஆகமங்களையும் இறைவன் அருளிச் செய்தான் என நமது சைவத் தோத்திரங்களும், சாத்திரங்களும், பெரியபுராணமாகிய புராணங்களும் திரும்பத்திரும்பக் கூறிவருவதை ஏனோ இவர்கள் ஏற்க மறுக்கின்றனர்.

மறுக்கின்றனர்.

திருவாசகத்தில் கீர்த்தித் திருவகவல் 09, 19, 100 ஆகிய வரிகளிலும், போற்றித் திருவகவல் 205ஆம் வரியிலும், திருவார்த்தைப் பகுதியில் 409 ஆம் பாடல்களிலும் "மகேந்திரம்" என்ற சொல் மாணிக்கவாசகரால் ஆளப்படுகிறது. இந்த ஆறு இடங்களில் ஓரிடத்திலாவது அடிகள் "தென் மகேந்திரம்" என்றோ, "குமரி மகேந்திரம்" என்றோ குறிப்பிடவில்லை. அடிகள் குறிப்பிடும் "மகேந்திரம்" கயிலை மலையே என்பதை அவரது வாக்குக் கொண்டே அறியமுடியும்.

ஆண்டவன் திருக்கயிலை மலையிலிருந்து ஆசாரிய மூர்த்தமாக எழுந்தருளித் தம்மை ஆட்கொண்ட திறத்தை மாணிக்கவாசகர் தம் திருவாசகம் முழுவதும் பதிப்பித்துள்ளார். அவற்றுள் ஓரிடம் மிக முக்கியமான இடம்.

*"வேடுரு வாகி மகேந்திரத்து*
*மிகுகுறை வானவர் வந்துதனைத்*
*தேட இருந்த சிவபெருமான்*
*சிந்தனை செய்தடி யோங்களுய்ய*
*ஆடல் அமர்ந்த பரிமா ஏறி*
*ஐயன் பெருந்துறை ஆதியந்நாள்*
*ஏடர் களையெங்கும் ஆண்டு கொண்ட*
*இயல்பறி வாரெம் பிரானாவாரே"*

**(திருவார்த்தை: பா.04)**

தேவர்களுக்குக் குறைநேரின் அவர்கள் கயிலைக்கு வந்து சிவபெருமானைத் தரிசித்துத் தங்கள் குறைகளைக் கூறி அருள்பெற்று உய்வர். அவ்வாறு அருள்பெறும் தேவர்கள் ஒருபோது தங்கள் குறை கூறி அருள்பெறும் பொருட்டுக் கயிலைக்கு வந்தனர். அவ்வாறு வந்தவர்கள் அங்கே இறைவனைக் காணாமல் எங்கே போயினர் என்று எண்ணித் தேடுவராயினர்.

தேவர்கள் தேடும் காலத்து அருச்சுனனுக்குப் பாசுபதம் அருளும் பொருட்டுத் தேவியுடன் இறைவன் வேடன் வடிவம் கொண்டு கயிலைச் சாரலில் வராகத்தின் பின்சென்றிருந்தார். ஆதலால் தேவர்கள் தேட வேண்டியதாயிற்று. இவ்வாறு தேவர்கள் தேடவிருந்த ஐயன், பெருந்துறை ஆதி, கயிலாய நாதன் அடியார்களாகிய நாங்கள் உய்யும் பொருட்டுச் சிந்தனை செய்து இலக்கணம் அமைந்த பரிமா ஏறி அடியேனையும் மற்றவர்களையும் ஆண்டு கொண்டார் என்பது இந்தப் பாடலுக்கான உரையாகும். இந்தப் பாடலில் கயிலை மலையே மகேந்திரம் என்னும் பெயரால் குறிக்கப்பெறுகிறது என்பதை ஓர்ந்து உணரவேண்டும்.

வேதமும் ஆகமமும் அருளிய இடம் கயிலைமலை தான் என்பதையும், அதனையே மாணிக்கவாசகரும், திருமாளிகைத் தேவரும் மகேந்திரம் எனக் குறிப்பிடுகின்றார்கள் என்பதையும், மகேந்திரம் என்ற சொல்லின் பொருள் எது என்பதையும் தெளிவாகத் தெரிந்து கொள்ள விரும்புவோர், "திருநான்மறை விளக்க ஆராய்ச்சி" நூலைப் படித்துப் பார்த்தால் போதும், வேறு எங்கும் போகவேண்டாம். இதுபற்றி இங்கே விரிக்க இடமில்லை என்பதுடன், "தென் மயேந்திரம்" என்று சிவதருமோத்தரமுடையார் ஏன் குறிப்பிட்டார் எனில், வட மகேந்திரமாகிய கயிலையிலிருந்து இதனை வேறுபடுத்திக்காட்ட "தென்" என அடைகொடுத்துப் பிரித்தார் என்க.

"தென் மயேந்திரம்" என்று சிவதருமோத்தர முடையார் ஏன் குறிப்பிட்டார் எனில், வட மகேந்திரமாகிய கயிலையிலிருந்து இதனை வேறுபடுத்திக் காட்ட "தென்" என அடைகொடுத்துப் பிரித்தார் என்க.

## வேதம் அருளிய கோலம்

கல்லால மரத்தடியிலே இருந்து வேதங்களை அருளினான் என்பதில் கருத்து வேறுபாடு கிடையாது. கயிலையே அவன் வேதம் அருளிய இடம், மகேந்திரம் அன்று என ஐயமறத் தெரிவதால் கல்லாலமரம் கயிலையிலேயே இருப்பது என்பது தானே போதரும்.

"வடஆல்" என்றும், "வடமரநிழல்" என்றும் பயின்றுவரும் தொடர் மொழிகளில் காணப்படும் "வட" என்னும் சொல் திசைநோக்கிய சொல்லன்று. "வட" என்பது தவம். "வடஆல்" என்றால் தவம் செய்தற்குரிய மரம் எனப் பரிபூரணமான தவத்திரு. குன்றக்குடி அடிகளார் அவர்கள் கருத்து உரைக்கின்றார்கள். இது சரியான கருத்தே. இறைவன் தென் திசை நோக்கித் தவக்கோலத்துடன் கல்லால மரத்தின்கீழ் அமர்ந்தான் என்புழி, வட என்ற சொல்லை மரத்திற்குக் கொள்ளாமல், திசைக்குக் கொண்டால், ஈசனுக்கும் மரத்திற்கும் தொடர்பு இல்லாமல் போய்விடும். மேலும் அவன் கொண்ட தவக்கோலத்திற்கும் பொருள் இல்லாமல் போய்விடும். அடுத்து அவனுக்கு அப்பாலும் ஒரு திசை இருக்கின்றது என்று மயக்க உணர்வைத்தரும்.

*"நால்வருக்கும் அறமாதி பொருள் உரைப்பத் தென்*
*பாலின் முகமாகி வடவால் இருக்கின்ற செல்வமே"*

என்னும் தாயுமானவப் பெருந்தகையின் வாக்கு அதனை உறுதி செய்கின்றது.

தென்திசை நோக்கித் தவநிறைவுடன் சின்முத்திரைக் காட்டி இறைவன் இருந்தருளிய தோற்றத்தை,

*"இருவரும் உணரா அண்ணல் ஏனவெள் எயிறு யாமை*
*சிரநிறை அனந்த கோடி திளைத்திடும் உரத்தில் சீர்கொள்*
*கரதலம் ஒன்று சேர்த்தி மோன முத்திரையைக் காட்டி*
*ஒருகணம் செயல்ஒன் றின்றி யோகு செய்வாரின் உற்றான்"*

எனக் கந்தபுராணம் கூறும்.

*"கல்லாலின் நீழல் அறன்ஒரு நால்வர்க்கும்*
*கடவுள்நீ உணர்த்துவதும் கைகாட் டென்றால்" என்றும்;*
*"நால்வர்க்கு அன்றாலின் கீழிருந்து மோன*
*ஞானமமைத்த சின்முத்திரைக் கடலே"*

என்றும் தாயுமானவர் உணர்த்துகின்றார். மேலும்,

*"ஆலத்தார் நிழலிலறம் நால்வர்க்குக்*
*கோலத்தால் உரைசெய்தவன்"*

"ஆல நீழல் அமர்ந்த அழகனார்" என்ற அப்பரடிகள் வாக்குக் கொண்டும்;

"ஆல நீழலிருந்து அறம் சொன்ன அழகனே" என்ற ஞானசம்பந்தர் வாக்குக் கொண்டும் இறைவன் கொண்ட தட்சிணாமூர்த்திக் கோலத்தினை உணரலாம். கோலம், அழகு என்ற பொருளை உணர்த்தி நிற்கின்றது.

## வேதம் அருளிய மொழி

இப்போது இருக்கின்ற வேதங்கள் வடமொழி எனப்படும் சமஸ்கிருதத்தில் உள்ளன. வேதங்களை இறைவன் எக்காலத்தில் அருளினான் எனச் சொல்ல முடியாது. பிற சமய நூல்களுக்குக் கால வரம்பு காட்டுவது போன்று இதற்குக் காட்ட இயலாது. ஏனெனின் இது காலத்தைக் கடந்து நிற்கின்றது. இதுவே அனைவருக்கும் உடன்பாடு. எனினும் சில ஆராய்ச்சியாளர்கள் கால எல்லை சொல்லுகின்றனர். இதில் ஒத்த கருத்து ஏற்படுவதில்லை என்பதையும் நினைவில்கொள்ள வேண்டும்.

தொல்காப்பியப் பாயிரத்திற்கு உரை சொல்லப் போந்த நச்சினார்க்கினியர் "நான்கு கூறுமாய் மறைந்த பொருளும் உடைமையின் நான்மறை என்றார். அவை தைத்திரியமும் பௌடிகமும் தலவாகாரமும் சாமவேதமுமாம். இனி, இருக்கும் யசுர்வும் சாமமும் அதர்வணமும் என்பார் உளர். அது பொருந்தாது. இவர் இந்நூல் செய்த பின்னர் வேதவியாதர் சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினோருக்கு நான்கு கூறாக இவற்றைச் செய்தாராதலின்" என எழுதினார்.

வியாசர் காலத்துக்கு முன்பே தைத்திரியமாதி நான்கு வேதங்கள் இருந்தன என்பதும் இக்காலத்துக்குக் தக்கபடி வியாசர் சுருக்கி இருக்காதி நான்மறைகளாக வகுத்தார் என்பதும்

நச்சினார்க்கினிரியர் கருத்து.

நச்சினார்க்கினியர் காலத்துக்கு முன்பிருந்தவர் எனக் கருதப்படும் திருமங்கையாழ்வார், "சந்தோகா, பௌழியா, தைத்திரியா, சாமவேதியனே நெடுமாலே" எனத் திருமாலை விளித்துப் பேசும் வாக்குகள் நச்சினார்க்கினியர் உரைக்கு அரண் செய்கின்றன.

*"இறந்தன வரம்புல கெவரும் வேதநூல்*
*மறந்தனர் பவநெறிமல்கி நாடொறும்*
*சிறந்தன அவையுயிர் செய்த தொல்வினை*
*யறிந்தருளி ஐயநீ அமைத்த வாயினும்"*

*"காதலின் அருளுமுன் தலையின் பன்மையிற்*
*கோதறும் ஓர்கலை கொண்டு நேமிசூழ்*
*மேதினி யதனிடை வியாதன் என்றிடு*
*போதக முனஎனப் போந்து வைகுதி"*

*"போந்தவன் இருந்தபின் புகரிலா மறை*
*ஆய்ந்திடின் வந்திடும் அவற்றை நால்வகை*
*வாய்ந்திட நல்கியே மரபினோர்க் கெலாம்*
*ஈந்தனை அவரகத் திருளை நீத்தியால்"*

இங்கே காட்டப்பட்டுள்ள கந்தபுராணச் செய்யுள்கள் சிவபெருமான் விஷ்ணுவை நோக்கி, "உலகோர் வேதநூலை மறந்தமையான் நீவிர் உம்முடைய ஒருகலையால் வியாசன் என்னும் பெயருடன் உலகில் தோன்றி அவ்வேதங்களை நான்கு கூறாகச் செய்வீராக!" என அருளியதாகக் கூறுகின்றன.

கந்த புராணத்தைச் சைவமரபினர் எனக் கூறிக் கொள்பவர்களே கற்பதில்லை. வடமொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது எனக் காரணம் கற்பிப்பாரும் இதனைப் பயிலுவதில்லை. சைவ சமயத் தலைவன் ஈசனே என நம்பிக்கைக்கொள்வோர் மொழிக்காரணம் காட்டி இதனிடம் செல்லாமல் இருப்பதும், புராணத்துச் செய்திகளில்

நம்பிக்கைக் கொள்ளாமல் இருப்பதும் நான் ஏற்கனவே சுட்டிக்காட்டியுள்ள விகிதாசார கொள்கை பற்றியதே. இது நல்லதாகாது.

கம்பராமாயணமும் மொழிபெயர்ப்பே. ஆனால் அதனைப் போற்றுகின்றனர். ஏனெனில் கம்பனால் "கழஞ்சு ஆயிரம்" கிடைக்கின்றது. கச்சியப்பரால் கிடைக்கவில்லை. காசேதான் கடவுளடா எனக் கருதும் சைவ சமய உலகு பற்றி வேறு என்ன சொல்ல இருக்கின்றது. இதனை விடுத்துச் செய்யுட் கருத்தினைச் சிந்திப்போம்.

செய்யுளில் "எவரும் வேத நூல் மறந்தனர்" எனக் கூறப்பட்டுள்ளதே தவிர, நான்மறைகள் எனச் சொல்லப்படவில்லை. மேலும் பண்டைய மறைகளைக் கொண்ட வியாசர் இருக்காதிய நான்மறைகளைத் தொகுத்தார் என்று கூறப்படவில்லை. ஏற்கெனவே ஈசனால் தோற்றுவிக்கப்பட்ட வேதத்தை அவனருளால் வியாசர் ஓதாமலேயே உணர்ந்தார் எனக் கொள்ளுவதே பொருத்தமாகும்.

வேதநூல் எவரும் மறந்தனர் என்னும் தொடரில், வேதம் இந்த மொழியில் ஆக்கப்பட்ட நூல் என எந்த ஒரு மொழியும் சுட்டப்படவில்லை. "விஷ்ணுவே, நீ சென்று சமஸ்கிருதத்தில் வேதங்களைச் செய்!" என்று சிவபெருமான் சொன்னதாகவும் இல்லை.

வேதநூல் எவரும் மறந்தனர் என்னும் தொடரில், வேதம் இந்த மொழியில் ஆக்கப்பட்ட நூல் என எந்த ஒரு மொழியும் சுட்டப்படவில்லை. "விஷ்ணுவே, நீ சென்று சமஸ்கிருதத்தில் வேதங்களைச் செய்!" என்று சிவபெருமான் சொன்னதாகவும் இல்லை.

வியாசர் இருக்காதி நான்மறைகளை ஓதாமல் உணர்ந்தார் எனினும், அவற்றைப் பிறர் அறிய ஏதேனும் ஒரு மொழியில்தான் வெளிப்படுத்தியிருக்க வேண்டும். அந்த மொழி இமயம் தொட்டுக் குமரிவரை பரந்துகிடந்த வட மொழியாக (சமஸ்கிருதமாக)

இருக்க வேண்டும் என்பதில் தவறில்லை. எவ்வாறெனில் வியாசர் வடமொழியில் வேறு நூல்களும் செய்திருக்கிறார் என்பதால் என்க.

இவ்வாறு வியாசரால் வகுக்கப்பட்ட வேதங்களைக் கற்ற முனிவருள் நால்வர்

(இவர்கள் பெயர்களைத் தாயுமானவர் பாடலில் காணலாம்) ஆலமர் செல்வன் பால் உற்று வேதத்தின் மெய்ப்பொருளை உணர்த்த வேண்டினர். வேதப் பொருள் தெரியவில்லை என இந்நால்வர் சிவனிடம் செல்லவில்லை. தெரிந்ததால் உண்டான சந்தேகங்களை நீக்கிக்கொள்ளவே சென்றனர். ஐயம் எப்பொழுது தோன்றும்? ஒன்றை அறிய முற்படும் முயற்சியில் தோன்றும். அறிய அறியத்தான் ஐயம் தோன்றும். இதனைத்தான் நமது வள்ளுவர் அறிதோறும் அறியாமை என்றருளினார். மெய்ப்பொருள் எது? என்ற கேள்விக்கு வேதம் கற்றோர் தலைக்குத்தலை வியாக்கியானம் செய்ததை எண்ணியே எல்லாத் தலைக்கும் தலையாயப் பரமனிடம் அவர்கள் சென்றனர். "வேதம் புடைதொறும் மலைப்ப" "அமைந்திலது உணர்வு" என்னும் தொடர்கள் அதனை உறுதி செய்கின்றன.

பிற்காலத்தில் வேதத்திற்குப் பாஷ்யகாரர்கள் பலராகப் போனது போல வியாசர் காலத்திலேயே வேத வியாக்கியானத்தில் ஐயங்கள் தோன்றிவிட்டன போலும். இவ்வாறு சென்று அணுகிய சநகாதி முனிவர் நால்வரின் சந்தேகங்களை ஈசன் பேசியா போக்கினான்? இல்லை. வியாசர் வேதங்களைத் தொகுப்பதற்கு முன்பு தன்னால் அருளப்பட்ட வேதங்களில் நால்வருக்கு ஏற்பட்ட ஐயங்களைப் போக்க கல்லால மரத்தின்கீழ் எழுந்தருளி தெற்கு முகமாக அமர்ந்து ஞான முத்திரையைக் காட்டி அவர்கள் ஞானம் பெறும் வகையை அருளினான். இங்கேயும் மொழி பற்றிய பேச்சுக் கிடையாது. அவன் உற்ற நிலை மோனநிலை. அதாவது மௌனம். பேசாமை. அதனால் அன்றோ நம் சிவபெருமானுக்குரிய நாமங்களில் ஒன்றாக "மௌனகுரு" என்னும் நாமம் தோன்றியது.

"சொல்லாமல் சொன்னவர்" எனச் சிவபெருமானைச் சுட்டிக்கூறும்போது, அவர் மொழியற்றவர் எனப் பொருள் கொள்ளக்கூடாது. இறைவனைக் "குணமிலி" எனச் சொல்லும்போது குணமற்றவன் எனப் பொருள் கொள்ளாது எல்லாக் குணமாகவும் உள்ளவன் எனப் பொருள் கொள்வது போல எல்லா மொழியாகவும் இருப்பவன் எல்லா மொழிகளுக்கும் அவனே கர்த்தா எனக் கொள்ள வேண்டும்.

"சொல்லாமல் சொன்னவர்" எனச் சிவபெருமானைச் சுட்டிக்கூறும்போது, அவர் மொழியற்றவர் எனப் பொருள் கொள்ளக்கூடாது. இறைவனைக் "குணமிலி" எனச் சொல்லும்போது குணமற்றவன் எனப் பொருள் கொள்ளாது எல்லாக் குணமாகவும் உள்ளவன் எனப் பொருள் கொள்வது போல எல்லா மொழியாகவும் இருப்பவன் எல்லா மொழிகளுக்கும் அவனே கர்த்தா எனக் கொள்ள வேண்டும்.

வியாசர் ஆரிய மொழியில் வேதம் செய்தார் என்னும்போது அதற்குக் கர்த்தாவாகிய சிவபெருமானே அம்மொழிக்கும் கர்த்தாவாகிறான் எனக் கொள்ள வேண்டும். உலகில் உள்ள எல்லா மொழிகளுக்கும், இந்தியாவில் இருக்கும் அனைத்து மொழிகளுக்கும் இறைவனே காரணன் என்பதே சமயஞ் சார்ந்த கொள்கை. மொழியாராய்ச்சியை இங்கே கொண்டு வந்து புகுத்தக்கூடாது.

வியாசர் ஆரிய மொழியில் வேதம் செய்தார் என்னும்போது அதற்குக் கர்த்தாவாகிய சிவபெருமானே அம்மொழிக்கும் கர்த்தாவாகிறான் எனக் கொள்ள வேண்டும். உலகில் உள்ள எல்லா மொழிகளுக்கும், இந்தியாவில் இருக்கும் அனைத்து மொழிகளுக்கும் இறைவனே காரணன் என்பதே சமயஞ் சார்ந்த கொள்கை. மொழியாராய்ச்சியை இங்கே கொண்டு வந்து புகுத்தக்கூடாது.

நம்மைப் பொறுத்தமட்டில் இந்த நூலில் எடுத்துப் பேசிவருவது வடமொழியாகிய சமஸ்கிருதத்திற்கும், அம் மொழியில் செய்யப்பட்டுள்ள நால் வேதங்களுக்கும், தென் மொழியாகிய தமிழிற்கும், அம்மொழியில் அருளப்பட்டுள்ள நான்மறைகளுக்கும் அவனே கர்த்தா ஆகிறான் என்பதே.

## வேறுபாடு

தங்களுக்குப் பிறந்த பிள்ளைகளின் வெற்றி தோல்விகளில் தாய்க்கும் தந்தைக்குமிடையே வேறுபாடு உண்டு. பிள்ளையின் வெற்றியைத் தனது வெற்றியாகவும், தோல்வியைத் தனது தோல்வியாகவும் கொண்டு மகிழ்வதும் வருந்துவதும் தந்தையின் இயல்பு. வெற்றி தோல்வி பற்றிக் கவலைப்படாது,

பிள்ளையின் வாழ்வு பற்றிக் கவலைப்படுவது தாயின் இயல்பு. இந்த இயல்பையும் மீறித் தம் பிள்ளைகளில் ஒரு பிள்ளை பலராலும் பலவகையாலும் பாராட்டப்படும்போது, அவன்மீது தனி அன்பு செலுத்தும் இயல்பும் தாயிடம் உண்டு. இதனைப் பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்.

*"பிறப்போ ரன்ன உடன்வயிற் றுள்ளும்*
*சிறப்பின் பாலால் தாயும் மனந்திரியும்"*

என மிக அருமையாகக் கூறிச் சென்றுள்ளான்.

இந்தத் தாயின் உள்ளத்தைத்தான் நமக்குத் தாயாகவும் தந்தையாகவும் இருக்கும் தயாபரன் நம் தமிழ்மொழி மீது காட்டு கின்றான், போற்றுகின்றான், புரக்கின்றான். அது எவ்வாறு என்பதைப் பார்ப்போம்.

திருமறைக்காட்டு நிகழ்ச்சிகளை மீண்டும் சிந்திப்போம். வேதங்களால் அடைக்கப்பட்ட கதவுகள் திறக்கப்படாமல் இருப்பதற்குக் காரணம், பெருகிய அன்புடை அடியார்கள் அணைந்து வேண்டாததே என்று கதவடைப்பு நிகழ்ச்சியைச் சொல்வார் கூற்றில் வைத்து, அன்பை அடித்தளமாகக் கொண்ட தமிழ் வழிபாட்டிற்கும், அறிவாற்றலை அடித்தளமாகக் கொண்ட சமஸ்கிருத மொழி வழிபாட்டிற்குமிடையேயான தாயன்பு இடைவெளியைச் சேக்கிழார் நயமாகக் கூறுகிறார். இவ் விடத்தில் 'மொழி' என்பது ஆகுபெயராக நின்று வேதத்தைக் குறிக்கிறது என்க்கொள்க. இது பற்றிய விளக்கத்தை ஏற்கெனவே பார்த்து வந்துள்ளோம்.

## பக்தி நெறி

*'முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்*
*பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்'*

என்பார் மாணிக்கவாசகர். "இறைவா நீ எனக்கு அன்பு வழியைக் காட்டினாய். அந்த வழியில் நான் சென்றேன். அதனால் எனது பழைய வினைகள் அனைத்தும் சிதறி ஓடின!" என்கிறார் அடிகள். இதனையெல்லாம் 'நீயே செய்தாய்' என்கிறார்.

தாங்கள் அருளிய பாடல்களை ஓதுபவர்களை வினைகள் பற்றாது என்றும்; வினைகள் நீங்கும் என்றும்; வினைகளால் ஒன்றும் செய்ய முடியாது என்றும், மூவர் முதலிகள் பன்னிப் பன்னிக் கூறுவது, பக்தியின்பாற்பட்டே என்பதை உணர்ந்துகொள்ள வேண்டும். அடியார்கள் அன்புக்குக் கட்டுப்படும் ஆண்டவன் வினைகளை மாற்றி அமைப்பான் என்பது குறிப்பு. மார்க்கண்டேயர் வரலாறு கொண்டு இதனை நன்கறியலாம்.

பக்தி நெறி, பிரபக்தி நெறி என இரண்டு நெறிகளை வைணவர் சொல்வர். பக்தி நெறியாவது, பற்றுவதெல்லாம் பற்றி ஆண்டவனைப் பற்றுவது. பிரபக்தி நெறியாவது, விடுவதெல்லாம் விட்டுத் தன்னையும் விடுகை. தன்னையும் விடுகை என்றால் என்னவெனில், விட்டோம் என்ற எண்ணத்தையும் விட்டுவிடுதல். 'எல்லாம் அவன் செயல்' எனக்கருதி அவனருளையே எதிர்பார்த்திருத்தல். 'எல்லாம் அவன் செயல்' என்பது, சைவத்திற்கும் உடன்பாடே. பக்திநெறி வழி இறைவன் பாதங்களில் சரணடைதல் என்பது இரண்டு சமயங்களுக்கும் ஏற்புடையதே.

உலகில் நிகழும் நிகழ்ச்சிகள் அனைத்தும் பொய், உலகமே பொய் என்று கூறும் மாயாவத வேதத்திற்கும் நமது வேதத்திற்குமான வேறுபாடு அன்பிற்கும் அறிவிற்குமான வேறுபாடாகும். இரண்டு மொழி வேதத்திற்கும் சிவபெருமானே கர்த்தா என்று கொள்ளும் சைவர்கள் எதிர்ப்பது அன்பு நெறி (பக்தி மார்க்கம்) பாராட்டாத வேதப்

பிராமணர்களையே என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

ஏனெனில் அன்பு நெறியால் முத்தி சித்தியாது என்பதும்; 'ஞானம்' என்பது அன்பு வழிக்கு முற்றிலும் வேறானது என்பதும்; பிரம்மத்தை அறியும் ஞானத்தாலேயே முத்தி சித்திக்கும் என்பதும்; அதில் செல்கின்றவர்களுக்குப் பக்தி வேண்டா என்பதும் அவர்கள் கொள்கை. அவர்கள் கடவுள் வழிபாட்டில் முழுவதுமாகச் சிந்தனை செலுத்துவதில்லை.

இரண்டு மொழி வேதத்திற்கும் சிவபெருமானே கர்த்தா என்று கொள்ளும் சைவர்கள் எதிர்ப்பது அன்பு நெறி (பக்தி மார்க்கம்) பாராட்டாத வேதப் பிராமணர்களையே என்பதை நினைவில் கொள்ள வேண்டும். ஏனெனில் அன்பு நெறியால் முத்தி சித்தியாது என்பதும்; 'ஞானம்' என்பது அன்பு வழிக்கு முற்றிலும் வேறானது என்பதும்; பிரம்மத்தை அறியும் ஞானத்தாலேயே முத்தி சித்திக்கும் என்பதும்; அதில் செல்கின்றவர்களுக்குப் பக்தி வேண்டா என்பதும் அவர்கள் கொள்கை.

ஆகமங்கள், புராணங்கள் முதலியவற்றையும் சிறப்பாகக் கொள்வதில்லை. திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், மாணிக்கவாசகர் ஆகிய அருளாளர்களின் திருநாமங்களைத் தங்களுக்குப் பெயராகக் கொள்வதில்லை.

அதிலும் நமச்சிவாய என்னும் இறைவனின் திரு நாமத்தை அவர்கள் உச்சரிப்பது இல்லை. பெயராக இட்டுக்கொள் வதில்லை. இக்காலத்தில் தேவாரம், திருவாசகம், பெரிய புராணம் ஆகியவற்றின்மீது பற்றிருப்பார் போலப் புறத்தில் காட்டிக்கொண்டாலும் அகத்தில் (மனத்திலும், வீட்டிலும்) பாராட்டுவதில்லை. தமிழ்நாட்டில் வேதப் பிராமணரால் நடத்தப் படும் பல்கலைக் கழகத்தில் கடவுள் வழிபாடு தமிழில் கிடையாது என்பது தெரிந்துகொள்ள வேண்டிய ஒன்றாகும்.

## அறிவாராய்ச்சி

இறைவனை அன்பு வழியாகவே அடைய முடியும் என்பது நிற்க, நமது சித்தாந்த சைவம் இறைவனைப் பற்றி ஆய்ந்து அறியும் (தத்துவ ஆராய்ச்சி) நிலையையும் ஏற்றுக்கொள்கிறது. இறைவன்

அனுபவப் பொருள் என்றும், அவன் அறியப்படுபவனே என்றும் நமது சித்தாந்தம் கூறுகிறது. எப்படியெனில், உயிர்கள் தம்மை அறிவுப் பொருளாக அறியும் அறிவு 'பசுஞானம்' எனப்படும். இந்தப் 'பசுஞானம்' தனித்து நின்று இறைவனைக் காண இயலாது. அவன் அருளைப் பற்றிக்கொண்டு அதன் வழியே அவனைக் காண இயலும் என்கிறது. இதனைப் 'பதிஞானம்' என்கிறது. இதனை நமது மாணிக்கவாசகர், "அவனருளாலே அவன்தாள் வணங்கி" எனச் சுட்டுகின்றார். அவன் அருளைப் பெற அன்பு ஒன்றுதான் வழி என்பதை மறந்துவிடக்கூடாது.

ஆண்டவனை அறிவு கொண்டு ஆராய்வது ஓரளவில்தான் நிற்க வேண்டுமே தவிர, மிகைபடச் செல்வது கூடாது என்பதனை, "உலகச் சமயங்களின் தத்துவங்கள் அனைத்தையும் ஆராய்ந்து கொண்டிராமல், இறைவன் திருவருளைக் கூடி அத்திருவருளையே பதியாகக் கொண்டுள்ள சிவபெருமானைக் கும்பிட வேண்டும்" என்கிறது திருக்களிற்றுப்படியார். இதனைத்தான் நமது ஞானசம்பந்தர், "ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச் சோதிக்க வேண்டா சுடர்விட்டுள்ளன எங்கள் சோதி" என்கின்றார். "இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவன் இறைவன் என்றெழுதிக் காட்டொணாதே!" என்பது அப்பரடிகள் வாக்கு.

இறைவன், தனக்குரிய பிள்ளையாகத் தம்மை ஆட்கொண்ட திறத்தைச் சொல்லி முடித்த ஞானசம்பந்தர், தாம் சொல்லிய பத்துப்பாடல்களிலும் இறைவனுக்கும் தமக்குமான உறவு அன்பினால் கட்டப்பட்டது என்றும்; அது காதலிக்கும் காதலனுக்கும் இடையிலான அன்பு என்றும்; அதனையே "திருநெறிய தமிழ்" என்னும் தொடர் மொழியில் குறிக்கின்றார். இவ்விடத்தில் நெறி என்பது, அன்பைச் சுட்டி நிற்கின்றது என்று விளக்குகின்ற திருப்பனந்தாள் காசித் திருமடத்தின் தலைவர், தவத்திரு. முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகளின் கருத்து போற்ற வேண்டிய ஒன்றாகும்.

# சொந்த மொழியும் வந்த மொழியும்

கண்ணப்பநாயனாரை அருளாளர் அல்லர் என்று சொல்வதற்கு இனிமேல்தான் ஒருவன் பிறந்துவரவேண்டும்.

*"வேடாதிபதி, உடுப்பூர் வேந்தன், நாகன்*
*விளங்கிய சேய், திண்ணனார், கன்னிவேட்டைக்*
*காடதில் வாய் மஞ்சனமும் குஞ்சிதரு மலரும்*
*காய்ச்சின மென்றிரு தசையும் காளத்தியார்க்குத்*
*தேடரும் அன்பினில் ஆறு தினத்தளவும் அளிப்பச்*
*சீறுசிவ கோசரியும் தெளிய, விழிப்புண்நீர்*
*ஓட, ஒருகண் அப்பி, 'ஒரு கண்ணப்ப*
*ஒழிக, எனும் அருள்கொடு அருகுநின்றாரே"*

என்று கொற்றவன் குடி உமாபதி சிவாச்சாரியார் கண்ணப்பநாயனாரின் சீர்மையைப் பாடுகிறார். ஆகம நெறி பிறழாமல் மந்திரங்கள் ஓதி, முறைப்படி சடங்குகள் செய்த சிவகோசரியார் என்ற சிவாச்சாரியார் பெறாத திருவருளை ஆறே நாளில் பெற்றார் கண்ணப்பநாயானார். தம்மொழி தவிரப் பிற மொழியைப் பேசியோ கற்றோ அறியாதவர் திண்ணனாராகிய கண்ணப்பர். அவர் எந்த மொழியைப் பேசிக் குடுமித்தேவரை வழிபட்டிருப்பார்? நிச்சயமாகச் சமசுகிருதம் இல்லை, அல்லவா?

"நீ என்ன கண்ணப்பனா" என்று சமசுகிருதவாலாக்கள் கேட்கலாம். கேள்விகள் கேட்டுக் கேட்டுத்தானே பாராளு மன்றத்தை நகராமல் நடத்துகிறோம்! நாமும் கேள்வி கேட்கலாம்; சமசுகிருத்த்திலேயே சடங்கு செய்தவர்கள் எத்தனை பேர் கண்ணப்பர் ஆகியிருக்கிறார்கள்? சிவகோசாரியார் சமஸ் கிருத மந்திரம் சொன்னார்; கண்ணப்பர் வழிபாடு கண்டு சிவகோசரியார் தெளிவடைந்தார் என்கிறார் உமாபதி சிவாச்சாரியார். இங்கே வென்றது வந்த மொழியா? சொந்த மொழியா?

சுந்தரமூர்த்திநாயனார் ஆதிசைவர் முப்போதும் திருமேனி தீண்டிச் சடங்குகள் செய்யும் குலத்திலே பிறந்தவர். அவரைச் சிவபிரான் தடுத்தொட்கொண்டார். ஆட்கொண்டபின் "என்னைப் பாடிப் புகழ்வாயாக" என்று சிவபிரான் சுந்தரருக்குக் கட்டளை இட்டார். "நான் என்ன பாட? எப்படிப் பாட?" என்ற சுந்தரர் கேட்டார். சிவபிரான் சொன்ன விடையைச் சேக்கிழார் பாடுகிறார்.

*"மற்றுநீ வன்மை பேசி வன்தொண்டன் என்னும் நாமம்*
*பெற்றனை; நமக்கும் அன்பின் பெருகிய சிறப்பின் மிக்க*
*அருச்சனை பாட்டேயாகும்; ஆதலால் மண்மேல் நம்மைச்*
*சொற்றமிழ் பாடுக" என்றார் தூமறை பாடும் வாயார்"*

இந்தப் பாடல் வடமொழி! தமிழ்க் கிளர்ச்சியிலே மிகவும் அறிமுகமாகிவிட்ட பாடல். தூய வேதங்களைப் பாடிய சிவபெருமான் ஆதிசைவப் பிராமணராகிய சுந்தரரைப் பார்த்து, வடமொழி மந்திரங்களைக் கொண்டு எனக்கு அருச்சனை செய் என்று கட்டளை இடவில்லை; அப்படி வடமொழி அருச்சனை செய்க என்று பெருமான் கட்டளை இட்டிருந்தால், அருச்சனை முதலிய சடங்குகளுக்கு உரியது வடமொழிதான் என்பதைச் சிவபிரானும் சேக்கிழாரும் வற்புறுத்தியதாகக் கொள்ள வேண்டியிருக்கும்.

(தொடரும்...)

ஆக்கம்: முனைவர். ம,ரா.போ. குருசாமி சிவசாந்தலிங்கர் — அக்டோபர் 2007

## பகுதி III

ஈசனுக்கு இருவரும் உகந்தவர்களே!

இந்த நூலைக் 'குருசாமி'யில் தொடங்கி 'குருசாமி'யில் முடிக்கின்றேன். இதற்குக் குருவருள் துணை நிற்கின்றது என்பது உண்மை.

"கண்ணப்ப நாயனாரை அருளாளர் அல்லர் என்று சொல்வதற்கு இனிமேல்தான் ஒருவன் பிறந்து வரவேண்டும்" (ம.ரா.போ. சிவசாந்தலிங்கர்,அக்டோபர் 2007) என எழுதுகிறார் பேராசிரியர். இவர் வீட்டுக் கதவைத் தட்டி, 'கண்ணப்ப நாயனார் அருளாளர் அல்லர்' என்று யாரோ சொன்னது போலவும், அதற்குப் பதிலாக, 'அப்படிச் சொல்வதற்கு இனிமேல்தான் ஒருவன் பிறந்து வரவேண்டும்' என நெஞ்சு நிமிர்ந்து பேசி, அவரைப் பேராசிரியர் விரட்டி அடித்தது போலவும் எழுதுவது ஏன் என்று புரியவில்லை. 'இனிமேல் ஒருவன் பிறந்து வந்தாலும், அவரை அருளாளர் அல்லர் என்று சொல்ல முடியாது' என்பதைப் பேராசிரியர் ஏனோ மறந்துவிட்டார்.

"கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை" என வாதவூரர் வரையறுத்துக் கூறியருளிய பின்பு, கண்ணப்பன் அன்புடன் சிவகோசரியார் அன்பினை ஒப்பிட்டோ வேறுபடுத்தியோ பேசுவது வீண்வேலை. மேலும் இவர்கள் வரலாற்றில் மொழியைக் கொண்டுவந்து புகுத்துவது தேவையற்ற ஒன்றாகும்.

'கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை' என வாதவூரர் வரையறுத்துக் கூறியருளிய பின்பு, கண்ணப்பன் அன்புடன் சிவகோசரியார் அன்பினை ஒப்பிட்டோ வேறுபடுத்தியோ பேசுவது வீண்வேலை. மேலும் இவர்கள் வரலாற்றில் மொழியைக் கொண்டுவந்து புகுத்துவது தேவையற்ற ஒன்றாகும்.

சிவகோசரியார் கனவில் எழுந்தருளிய ஈசன், "திண்ணன் செய்யும் எல்லாச்

செயலும் மற்றவர்கள் செயல்களைவிடத் தனக்கு உகப்பானது" என்று சொல்கிறாரே தவிர, "ஒத்தன" என்ற சொல்லவில்லை என்பதை உணரவேண்டும்.

இருவர் அன்பிலும் வேறுபாடு காண முடியாது என்பதனைச் சேக்கிழார் இரண்டு நிகழ்ச்சிகள் வழி விளக்குகிறார். நடுவு நிலை நெஞ்சுடன் இதனைப் பார்க்க வேண்டும். சிவகோசரியாருக்குத் திண்ணனார் அன்பினைக் காட்ட (அன்பினைக் காட்ட வேண்டிய அவசியம் ஈசனுக்கு ஏன் வந்தது என்பதனைப் பின்பு பார்ப்போம்) வலக் கண்ணில் உதிரம் கொட்டிக் கொண்டிருக்கும் வண்ணம் ஈசன் இருந்தான் என்பது அனைவரும் அறிந்த ஒன்றே.

தான் உயிரினும் மேலாக நேசிக்கின்ற ஒருவருக்கு நோய்வந்தாலே ஒருவரால் தாங்க முடியாது என்பது உலகத்து இயற்கை. உறுப்புகள் முறிந்தால் அதிகத் துன்பம். கண்ணில் சிறந்த உறுப்பில்லையாதலால், கண்ணில் அடிப்பட்டால் இவர் கண்கொண்டு பார்க்க முடியாது. அத்தகையக் கண்ணில் ஆறாக இரத்தம் கொட்டினால், பார்ப்பவர் பொறுப்பாரோ? பயந்து பதைத்துப் படபடத்து செய்வதறியாது மயக்கமாகிக் கீழே விழுந்துவிடுவாரன்றோ! இதுபோன்ற நேரத்தில் தன்னுணர்வுடன், சுயநிலையுடன் இருப்பவரே மயங்கி விழுந்துவிடுகிறார் என்கின்றபோது ஈசனால் ஈர்க்கப்பட்டு உன்மத்த நிலையில் திரியும் கண்ணப்பர் நிலை எப்படி இருக்கும் என்ற கேள்வியை உள்ளத்துள் கொண்டு கண்ணப்பரைப் பார்ப்போம்.

வெல்லக் கட்டி இனிக்கும். அதனை ஒரு பாத்திரத்தில் போட்டு வைக்கிறோம். இந்தப் பாத்திரம் இனிக்காது. அதே சமயம் பாத்திரமே வெல்லத்தால் செய்யப்பட்டது என்றால், தொட்ட தொட்ட இடமெல்லாம் இனிக்குமல்லவா! இந்த வெல்லப் பாத்திரம் போலத் திண்ணனார் அன்புப் பாத்திரமாகப் பரிணமித்தார் என்கிறார் சேக்கிழார்.

திண்ணன் என்னும் காரணப் பெயர் வைக்கப்பட்ட காலத்தில், "உலகத்தில் உள்ள புண்ணியங்கள் எல்லாம் ஒன்றுதிரண்டு வந்து

குழந்தை உருவத்தில் மாறிக் கனத்து இருந்தன" என்று சொல்லும் சேக்கிழார், "பதினாறு வயதில் முற்றிலும் கனம் குறைந்து அன்பு வயப்பட்டு, அன்பு உருவம் ஆனார்" என்கின்றார்.

இந்த அன்பு உருவமும் கண்ணப்பர் தானாக செய்து கொண்டதன்று. திருக்களாத்தி அப்பர் தனது திருநோக்கால் (நயனதீட்சை) மாற்றி அமைத்ததாகும். இவ்வாறு ஈசனால் அன்பு உருவமாக ஆக்கப்பட்ட கண்ணப்பரின் திருமேனியைப் பின்பு ஜோதி வடிவமாக்குகிறான் இறைவன். இந்த ஒளி வடிவமும் அன்பினாலேயே ஆக்கப்படுகிறது. இது எப்படி இருக்கிறது எனில், "ரசவித்தையால் இரும்பு பொன்னாக மாறுவது போல இருக்கின்றது" என்கிறார் சேக்கிழார். இவ்வாறு ஈசன் திறத்தில் அன்பு பிழம்பாக உன்மத்தம் கொண்டு திரியும் திண்ணனார், அவனது கண்ணில் உதிரம் கொட்டுவதைப் பார்த்து, "நிலத்திடைப் பதைத்து வீழ்ந்தார்" என்பது வியப்பிற்குரியதன்று. அவ்வாறு விழாமல் நின்றார் என்றால்தான் ஆச்சரியப்பட வேண்டும்.

இறைவனால் மாற்றப்பட்டு ஈசன் நினைப்பைத் தவிர வேறு நினைப்பின்றி உன்மத்தனாகிய கண்ணப்பர் செயல் அவ்வாறுதான் அமையும். அமைய முடியும். ஆனால், இறைவ னால் எந்தவித மாற்றமும் செய்யப்படாமல், உலக நினைப்பிலும் உள்ளம் செலுத்தி, தன்னுடைய நாட்கடனாக இறைவனுக்குப் பூசனை செய்துவரும் சிவகோசரியார் செயல்தான் நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது. ஏனெனில், பெருமானின் உறுப்புக்களில் எந்தவித குறையையும் காணவில்லை. அவரைப் பொறுத்தமட்டில் இறைவன் இருந்தபடியே இருக்கின்றான். இறைவன் திருமுன்பு இறைச்சியும் எலும்பும் கண்டபோது அவர் அவற்றைத் திருவலகால் மாற்றிப் பூசனை செய்து சென்றிருக்கலாம். ஆனால் அவ்வாறு செய்யாமல் அவற்றைப் பார்த்தவுடன் உள்ளம் நொறுங்கி ஏதோ ஓர் உடல் உறுப்பு இற்று விழுந்தது போலப் பதறி அழுது விழுந்து அரற்றுகிறார். ஈசனே! உன் நேர்வர அஞ்சாத வேடுவரே இதனைச் செய்திருக்க வேண்டும். இவ்வாறு அவர் செய்து செல்ல நீர் திருவுள்ளம்

பற்றலாமோ! என ஈசனிடம் முகமுகமாக பேசி வருந்துகிறார்.

ஓர் உருவத்தைப் பார்த்து அதுவே தான் வழிபடும் கடவுள் என்ற உணர்வில், அந்த உருவத்தில் இருக்கும் கண்ணில் கொட்டும் உதிரத்தைக் கண்டபோது பதைத்து விழுவதற்கும், எந்த உருவமும் இல்லாத நிலையில் இலிங்கத்திற்கும் சேதமில்லாத நிலையில் அதன் முன்பு சாதாரணமாகக் கிடக்கும் இறைச்சியையும் எலும்பையும் பார்த்துப் பதறி அழுது விழுந்து அல்லல்படுதவற்கும் இடையிலான வேறுபாட்டைத் உணர்வுடையோர் அறிவர். மற்றையோர் அறியார்.

சிவகோசரியார் ஈசனிடத்துக் கொண்ட அன்பு கண்ணப்பர் கொண்ட அன்பைவிடக் குறைந்தது அன்று என்பதையும்; இருவர் அன்பிலும் ஏற்றத் தாழ்வு கிடையாது என்பதையும் இந்த நிகழ்ச்சிகள் வழி அறியலாம். மேலும், சிவகோசரியார் பார்ப்பனர், படித்தவர், இறை இருப்புப் பற்றி அறிந்தவர் ஆதலால், அவர் ஈசனிடம் கொண்ட பக்தியைவிட, படிக்காத இறை இருப்புப்பற்றி அறியாத பூசை முறை தெரியாத, வேடராகிய கண்ணப்பர் ஈசனிடம் கொண்ட பக்தி உயர்ந்தது எனச் சொல்லக் கூடாது என்பதையும் விளங்கிக்கொள்ள வேண்டும்.

சிவகோசரியார் ஈசனிடத்துக் கொண்ட அன்பு கண்ணப்பர் கொண்ட அன்பைவிடக் குறைந்தது அன்று என்பதையும்; இருவர் அன்பிலும் ஏற்றத் தாழ்வு கிடையாது என்பதையும் இந்த நிகழ்ச்சிகள் வழி அறியலாம். மேலும், சிவகோசரியார் பார்ப்பனர், படித்தவர், இறை இருப்புப் பற்றி அறிந்தவர் ஆதலால், அவர் ஈசனிடம் கொண்ட பக்தியைவிட, படிக்காத இறை இருப்புப்பற்றி அறியாத பூசை முறை தெரியாத, வேடராகிய கண்ணப்பர் ஈசனிடம் கொண்ட பக்தி உயர்ந்தது எனச் சொல்லக் கூடாது என்பதையும் விளங்கிக்கொள்ள வேண்டும்.

## தெளிவு

"வேடாதிபதி..... தேடரும் அன்பினில் ஆறு தினத்தளவும் அளிப்பச் சீறு சிவகோசரியும் தெளிய விழிப்புண் நீர் ஓட ஒரு கண் அப்பி ஒரு கண்ணப்ப ஒழிக எனும் அருள் கொடு அருகு நின்றாரே" என்னும் பாடலில் சமசுகிருத சிவகோசரியார், கண்ணப்பன் வழிபாடு கண்டு

தெளிவடைந்தார் என்று உமாபதிசிவம் சொல்கிறார் எனப் பேராசிரியர் கூறுகிறார். இந்தப் பாடலில் தெளிய என்னும் சொல்லை உமாபதி சிவம் இந்தப் பொருளில்தான் கையாளுகின்றார் என்றோ, அல்லது ம.ரா.போ. ஆகிய நான் இந்தப் பொருள் கொள்கின்றேன் என்றோ எழுதவேண்டாமா? சிவகோசரியாரின் கலக்கம் தெரிந்தால்தானே அவர் தெளிவடைந்த திறத்தை நாம் அறியமுடியும். அதுபற்றி எதுவும் எழுதாமல், தனது கருத்தாக, "இங்கே வென்றது வந்த மொழியா? சொந்த மொழியா?" எனக் கேட்டு முடிக்கின்றார் ம.ரா.போ.

இங்கே எங்கே வந்தது மொழிப் பிரச்சினை, ஈசனிடம் மொழிப் பிரச்சினையை சொல்லியா கவலைப்பட்டார் சிவகோசரியார். 'நான் சொல்கின்ற சமஸ்கிருத மந்திரம் சொல்லாமல் வேடன் தமிழில் பேசுகிறான், ஆதலால் அவனை அகற்றி அருள்' என்றா வேண்டினார். வந்த மொழியை வதைக்கிறானே என்றா வருத்தப்பட்டார்!

இங்கே எங்கே வந்தது மொழிப் பிரச்சினை. ஈசனிடம் மொழிப் பிரச்சினையை சொல்லியா கவலைப்பட்டார் சிவகோசரியார். 'நான் சொல்கின்ற சமஸ்கிருத மந்திரம் சொல்லாமல் வேடன் தமிழில் பேசுகிறான், ஆதலால் அவனை அகற்றி அருள்' என்றா வேண்டினார். வந்த மொழியை வதைக்கிறானே என்றா வருத்தப்பட்டார்!

ஐந்து நாட்களாக இறைச்சியுடன் பூசை செய்கின்றவன் யார்? அவன் உருவம் எப்பேர்ப்பட்டது? அவன் மொழி எது? அவனுக்குச் சமஸ்கிருதம் தெரியுமா? தெரியாதா? என்று எதுவுமே சிவகோசரியாருக்குத் தெரியாது.

பூசனையில் தான் அமைத்துச் செல்லுகின்ற மலராதிய பொருட்கள் நீக்கப்பட்டு, வீசியெறியப்படு கின்றன. பெருமான் முன்பு செருப்படி, நாயடி இவற்றின் தடங்கள் பதிந்துள்ளன. இவற்றிற்கெல்லாம் மேலாக மாமிசங்கள் பெருமான் முன்பு படைக்கப்பட்டுள்ளன. இவை பற்றியே முனிவர் கவலைப்பட்டு ஈசனிடம் 'இதனை நீக்கி அருள வேண்டும்' என விண்ணப்பித்தார் என்பதுதானே கதை. ஐந்து நாட்கள் ஆகியும்

எந்தப் பதிலும் இவருக்குக் கிடைக்கவில்லை. அது பற்றிய கவலையே சிவகோசரியாரைப் பற்றி நின்றது என்பதுதானே உண்மை.

உண்மையான தனது பக்தனின் (சிவகேசரியார்) கவலையைப் போக்கித் தெளிவிக்க வேண்டியது பரமனின் கடமை, இந்தக் கடமையைச் சாக்கிட்டே கண்ணப்பருக்கு முத்திப்பேறு தர வேண்டும். இதன் வழி கண்ணப்பனின் அன்பின் திறத்தை உலகவர் அறியச் செய்ய வேண்டும். ஒரு கல்லில் மூன்று மாங்காய் விழும்படிச் செய்கிறான் ஈசன்.

அநுசிதமான பூசை களையப்பட்டு நித்தியமாகத் தாம் செய்யும் பூசை தொடரவேண்டுமே எனக் கவலைப்பட்டுக் கொண்டிருக்கும் சிறப்புடைய சிவகோசரியாரின் மனம் தெளிவடையும்படி திண்ணனைக் கொண்டு ஒரு கண் அப்பச் செய்து, மற்றொரு கண்ணைப் பிடுங்கும் காலத்துத் தடுத்துக் கண்ணப்பனுக்கு அருள்கொடுக்க, அவரும் ஈசன் பக்கத்தில் நின்றார் என்பதுதானே உமாபதி சிவாசாரியர் சொல்லும் செய்தி.

கண்ணப்பர் வரலாற்றில் இந்த இடத்தில் எங்கே வந்தது மொழி? சிவகோசரியார் கண்ணப்பனிடம் சென்று வடமொழி மந்திரம் சொல்லிக் கொடுத்தாரா? அவன் அதனை மறுத்துத் தமிழில் மந்திரம் சொன்னானா? அல்லது ஈசன் சிவகோசரி யாரிடத்து, "நீ வடமொழி மந்திரம் சொல்ல வேண்டாம்! கண்ணப் பன் சொல்லும் தமிழ் மந்திரமே போதும் எனச் சொன்னானா? இவர் கட்டுரைக் கருத்துக்கள் முழுவதும் காற்றிலே கத்திச் சண்டை போடுவது போன்று அல்லவா இருக்கின்றன. வேறு

கண்ணப்பர் வரலாற்றில் இந்த இடத்தில் எங்கே வந்தது மொழி? சிவகோசரியார் கண்ணப்பனிடம் சென்று வடமொழி மந்திரம் சொல்லிக் கொடுத்தாரா? அவன் அதனை மறுத்துத் தமிழில் மந்திரம் சொன்னானா? அல்லது ஈசன் சிவகோசரியாரிடத்து, "நீ வடமொழி மந்திரம் சொல்ல வேண்டாம்! கண்ணப்பன் சொல்லும் தமிழ் மந்திரமே போதும் எனச் சொன்னானா? இவர் கட்டுரைக் கருத்துக்கள் முழுவதும் காற்றிலே கத்திச் சண்டை போடுவது போன்று அல்லவா இருக்கின்றன.

வழியில்லாமல் நான் விளக்கம் எழுதிக் கொண்டிருக்கிறேன்.

வந்த மொழியில் வல்லவரான சிவகோசரியாருக்குக் கிடைத்த பேறு யாருக்கும் கிடைக்காத ஒன்று. கனவில் ஈசன் எழுந்தருளியதும்; சொன்னதும்; கண்ணப்பன் தன் கண்ணைத் தோண்டி அப்பியதைப் பார்த்ததும்; உதிரம் நின்று உதிரம் கொட்டியதைப் பார்த்ததும்; மற்றோர் கண்ணை இடந்தப்ப கண்ணப்பன் முயற்சி மேற்கொண்டபோது, ஈசன் திருக்கரம் வெளிப்பட்டு திண்ணன் கையைப் பிடித்ததைப் பார்த்ததும்; "கண்ணப்ப நிற்க" என்ற ஈசன் திருவார்த்தையைக் கேட்டதும்; கண்ணப்பன் பரமனின் வலப்பக்கம் சென்று சேர்ந்ததும் காணத் தவம் செய்திருக்க வேண்டும். ஆதலால்தான் சிவகோசரியாரைச் சேக்கிழார், மாமுனிவர், தவ முனிவர் எனப் பலமுறைச் சொல்லிச்சொல்லி அழைத்து மகிழ்கின்றார்.

கண்ணப்பர் வரலாற்றைப் பேராசிரியர் ஊன்றிப் படிக்க மேலும் சில இடங்கள். முதல் வேட்டை, அது கன்னி வேட்டை. அந்தக் கன்னிவேட்டையில் அகப்பட்ட பன்றியின் இறைச்சியே கண்ணப்பர் இறைவனுக்குப் படைத்த முதல் படையல். இந்த முதல் படையலின்போது "எந்த எந்தத் தசைகளை சூட்டுக்கோலில் கோக்கவேண்டுமோ அவற்றை மட்டும் கோர்த்து, தீயில் பதமாகக் காய்ச்சி, வெந்தது எது வேகாதது எது என்பது அறிந்து, வெந்ததை மட்டும் நல்ல சுவையாக இருக்கிறதா? என அறிய பல்லில் அதுக்கி, நாவினால் ருசி பார்த்து (ருசி பார்த்தவுடன் அப்போது தோன்றும் எச்சிலை நாயனார் விழுங்கமாட்டார்) கொண்டுவந்து படைத்து, இது மிகுதியும் நல்லது. தலைவனே அமுது செய்து அருள வேண்டும்!" என வேண்டுகின்றார். தமிழில்தான் வேண்டுகிறார் எனக் கொள்வதில் தவறில்லை. இங்கே இன்னொரு செய்தியையும் சேர்த்துப் பார்க்க வேண்டும். நாணனோடு நாயகனைப் பார்த்த திண்ணன், "இந்தப் பச்சிலையோடு பூவும் பறித்து இட்டு நீரும் வார்த்து 'மச்சிது' செய்தார் யாரோ?" எனக் கேட்கிறார். 'மச்சு' என்பது தெலுங்குச் சொல். அழகு அல்லது நல்லது என்னும் பொருள் இச்சொல்லுக்கு உரியது. 'மச்சிது செய்தார் யார்?' என்னும் தொடர், 'அழகு செய்தார் யார்?'

என்னும் பொருளைக் கொண்டு நிற்கிறது. இந்தத் தொடர் கொண்டு திண்ணன் நாணனிடம் தெலுங்கில் பேசியுள்ளான் என்று கூறுதற்கு இடமுண்டு. ஏனெனில் திருக்காளத்தி இருப்பது தெலுங்கு தேசத்தில்.

அறுபத்து மூவரில் இந்தத் தெலுங்கருக்கு ஒப்பாக உவமையாக இணையாக ஒருவரையும் சொல்ல முடியாது என்னும்போது, சமய உலகில் இனத்திற்கும், சாதிக்கும், மொழிக்கும் என்ன வேலை? சமயப் பற்றில்லார்தான் இது போன்ற ஆராய்ச்சிகளைச் செய்து தங்களுக்குள் தாங்களே மகிழ்ந்துகொள்வர். 'சைவப் பரம்பரையில் வந்த' நமது ம.ரா.போ. இதுபோன்று ஆய்வு செய்வது பொருத்தமாகாது.

அறுபத்து மூவரில் இந்தத் தெலுங்கருக்கு ஒப்பாக உவமையாக இணையாக ஒருவரையும் சொல்ல முடியாது என்னும்போது, சமய உலகில் இனத்திற்கும், சாதிக்கும், மொழிக்கும் என்ன வேலை? சமயப்பற்றில்லார்தான் இது போன்ற ஆராய்ச்சிகளைச் செய்து தங்களுக்குள் தாங்களே மகிழ்ந்துகொள்வர். 'சைவப் பரம்பரையில் வந்த' நமது ம.ரா.போ. இதுபோன்று ஆய்வு செய்வது பொருத்தமாகாது.

மேலும், ஐந்துநாட்கள் கண்ணப்பர் இவ்வாறே கறி அமுது படைக்கின்றார். பன்றி, புள்ளிமான், கலைமான் ஆகியவற்றுடன், உருவில் பெரிய மரைமான், கடமைமான் ஆகியவற்றையும் வேட்டையாடி, அவற்றில் இறைவனுக்காகும் அமுதுக்கான இறைச்சியைப் பக்குவப்படுத்தி, தானும் சுவை பார்த்து, அவற்றில் தேனும் கலந்து எடுத்துக்கொண்டு இறைவன்முன் "வந்து, "தேவரீரே! இது தித்திக்கும்! சாப்பிடுங்கள்!" எனத் தான் கொண்டுவந்துள்ள கறியமுதின் சிறப்பினை இறைவனிடம் சொல்கிறார். இறைவன் முன்பு நின்று, கண்ணப்பர் பேசுகின்றாரேயொழிய, அவர் அர்ச்சனைச் செய்யவில்லை. (அதாவது பாடவில்லை) ஒரு தந்தை தன் குழந்தைக்கான உணவைக் கொண்டுவந்து, அதன் சிறப்பைக் கூறி, அதற்கு ஊட்டிவிடுவதைப் போல இறைவனுக்கு இவர் ஊட்டிவிடுகின்றார். தந்தை மகனுக்கு உணவை ஊட்டிவிடும்போது

பேசும் பேச்சுக்கும், ஆண்டவன் முன்னின்று ஒருவர் அர்ச்சனைப் பாட்டைப் பாடுவதற்கும் மிகுந்த வேறுபாடு உண்டு.

கண்ணப்பர் பேசினார். சிவகோசரியார் மந்திரங்கள் சொன்னார். கண்ணப்பர் தெலுங்கு மொழியில் அல்லது தமிழ் மொழியில் பேசினார். சிவகோசரியார் வடமொழில் அருச்சனை செய்தார். இதில் வெல்வது தோற்பது எங்கே வந்தது. வரலாறு இப்படி இருக்க, வென்றது வந்தமொழியா? சொந்த மொழியா? எனக் கேட்பது வேடிக்கையாக இல்லையா! சிந்தித்தால், ம.ரா.போ. அவர்களுக்கே இது வேடிக்கையாக இருக்கும். கண்ணப்பர் வரலாற்றில் சொந்த மொழியும் வந்த மொழியும் சந்திக்கவேயில்லை. சொந்த மொழியும் வெற்றிபெறவில்லை; வந்த மொழியும் வெற்றிபெறவில்லை. வெற்றிபெற்றது அன்பு ஒன்றுதான். சமஸ்கிருதமே தெரியாத நாம் பேசுவதைப் போல, எழுதுவதைப் போல அங்கே நிகழ்ச்சிகள் ஏதும் இல்லை என்பதுதான் சத்தியம்.

> கண்ணப்பர் வரலாற்றில் சொந்த மொழியும் வந்த மொழியும் சந்திக்கவேயில்லை. சொந்த மொழியும் வெற்றிபெறவில்லை; வந்த மொழியும் வெற்றிபெறவில்லை. வெற்றிபெற்றது அன்பு ஒன்றுதான். சமஸ்கிருதமே தெரியாத நாம் பேசுவதைப் போல, எழுதுவதைப் போல அங்கே நிகழ்ச்சிகள் ஏதும் இல்லை என்பதுதான் சத்தியம்.

## ஈசனுக்கும் சுந்தரருக்கும் இருந்த உறவு

இருமொழி வேதங்களுக்கும் ஈசனே மூலம் என்பதனை ஏலவே பார்த்து வந்திருப்பினும், மிகச் சுருக்கமாக மீண்டும் அதனை இங்கே நினைவில் கொள்வோம்.

பெருமாட்டியின் வேண்டுதல் பேரில் பெருமான் திருமாலை நோக்க, அவர் கலை ஒன்று பூமியில் போந்து வியாசராக விளங்க, இந்த வியாசர் ஈசன் திருவுள்ளக் குறிப்பறிந்து அவனால் ஆதியில் அருளப்பட்ட வேத விஷயங்களை நான்கு வேதங்களாக வடமொழியில் வகுத்தருளினார்.

இவர் செய்தளித்த வேதச் செய்திகளில் ஐயம் கொண்ட

நால்வர், அந்த ஐயங்களைத் தீர்த்தருள வேண்டும் என ஈசனை வேண்டிக்கொள்ள, அவனும் கல்லால மரத்தின்கீழ் அமர்ந்து மோன முத்திரைக்காட்டித் தீர்த்தருளினான்.

சைவம் மட்டும் அல்லாமல் வேறு பல சமயங்களும் வேதத்தை ஏற்றுக்கொள்வதால் வேதம் பொது எனப்பட்டது. நமது சமய குரவர்களுக்கும் இதில் உடன்பாடே. எனினும் மெய்ப்பொருள் தேடுதலில் இவர்கள் நெறி பிற சமயங்களின் வழிகளிலிருந்து மாறுபட்டது. அல்லது இவர்களால் அந்நெறி புதிதாக விளக்கப்பட்டது. இது எவ்வாறு புதிதானது என்பதைக் குமரகுருபர சுவாமிகள் பாடலிலிருந்து அறியலாம். இப்பாடல் கருத்து ஏற்கனவே காட்டப்பட்டுள்ளது.

> சைவம் மட்டும் அல்லாமல் வேறு பல சமயங்களும் வேதத்தை ஏற்றுக்கொள்வதால் வேதம் பொது எனப்பட்டது. நமது சமய குரவர்களுக்கும் இதில் உடன்பாடே.

அவன் அருளையே கண்ணாகக் கொண்டு அவனை நமக்குக் காட்டிய சமயகுரவர் நால்வர் வரலாற்றில் நமது சுந்தரர் வரலாறு தனியானது. நனிசுவையுடையது. அவர் வரலாற்றை அறிந்து கொண்டால்தான் தன்னைத் தமிழில் பாடுக! என ஈசன் அவருக்கு இட்ட கட்டளை நமக்குப் புரியும். முன்பின் கதைத் தொடர்பு, செய்யுள் தொடர்பு, கருத்துத் தொடர்பு, சேக்கிழார் சிந்தனை ஆகியவற்றை அறிந்தால்தான் புரிந்துகொண்டால்தான் தெளிவு கிடைக்கும். இல்லையேல் குழப்பம்தான்.

மூவர் முதலிகளின் அவதாரங்களில் சம்பந்தருக்கும் அப்பருக்கும் தங்கள் முற்பிறவி பற்றியோ, அவர்கள் முற்பிறவியில் எவ்வாறு இருந்தார்கள் என்பது பற்றியோ தெரியாது. தமிழ்நாட்டில் தோன்றினார்கள். ஈசன் அருள் கிடைத்தது. அவனால் பிள்ளையாகவும், தொண்டனாகவும் ஏற்றுக்கொள்ளப்பட்டார்கள். தாய்மொழியாம் தமிழில் இறைவனைப் போற்றினார்கள். அவனோடு உறவு கொண்டார்கள். ஈசன் அவர்கள் அன்பினை நுகர்ந்து அனுபவித்தான். அருள்பாலித்தான். அவ்வளவே.

ஆனால் சுந்தரர் தோற்றம் வேறுவகையானது. சம்பந்தரும் அப்பரும் போன்றே இவரும் அவதாரம் செய்தார். மணப்பருவம் எய்தினார். மணமேடையில் அமர்ந்தார். ஆனால் இறைவன் கிழ வடிவில் வந்து திருமணத்தைத் தடைசெய்து சுந்தரர் தனது அடிமை என நிரூபித்துத் தன்வசம் கொண்டான். செய்வதறியாது திகைத்து நின்றார் சுந்தரர்.

"திருவருட்துறை"யில் புகுந்த கிழவரைக் காணாது, இவர் ஏன் நமது இறைவன் குடிகொண்டுள்ள இங்கே புகுந்தார் என்று சிந்தித்து ஐயா எங்கே போனீர்கள்! நீங்கள் யார்? ஒன்றும் புரியவில்லையே! தயவுசெய்து வாருங்கள் எனத் தனியே நின்று தொடர்ந்து அழைத்தார்.

அப்போது விண்ணில் விடைமீது தோன்றிய பெருமான், முற்பிறவியில் நீ எனக்கு அணுக்கத் தொண்டன். அக்காலத்தில் உன்னிடத்துத் தோன்றிய ஒரு விருப்பத்தால், எனது ஏவலால் மண்ணின்மீது பிறந்தனை. துன்பம் செய்யும் இந்த மனை வாழ்க்கை உன்னைத் தொடரக்கூடாது என்பதற்காகத் தொடர்ந்து வந்து தடுத்து ஆட்கொண்டேன் எனச் சொல்லியருள; தன்னை ஈன்ற தாய்ப்பசுவின் கனைப்புக் கேட்ட காலத்தில் அம்மா! என்றழைக்கும் கன்றுக்குட்டிப் போலத் தன் உடல் நடுநடுங்கத் தொழுத கை தலைமேல் அப்படியே நிற்க, மன்றின் நாயகனே! இப்படி வந்து வலிய ஆட்கொண்டது தங்கள் செயலா? என்று கூறிச் செயலற்று நின்றார்.

சுந்தரரை ஈசன் தடுத்து ஆட்கொண்ட வரலாற்றைக் கூறிவரும்போது சேக்கிழார் மூன்று இடங்களில் மன்று என்னும் சொல்லைக் கையாளுகின்றார். "பழைய மன்றாடி போலும்" "மன்றுளீர் செயலோ" "மன்றுள் ஆடிய செய்யதாளை" என்னும் தொடர்கள் கொண்டு அதனை அறியலாம்.

இங்கே ஆளப்பட்டுள்ள மன்று என்னும் சொல் பொதுவாக நோக்குமிடத்துத் "திருச்சிற்றம்பலம்" என்று நமது சைவ உலகம் அழைக்கும் இறைவன் ஆனந்த நடனம் புரியும் இடத்தையே குறிக்கும். ஆனால் சுந்தரர் வரலாற்றில் இந்த இடத்தை மட்டும் அச்சொல்

குறிக்காமல் வேறு ஓர் இடத்தையும் குறித்து நிற்கிறது என்பதை உய்த்து உணர வேண்டும்.

சுந்தரர் முற்பிறவியில் கயிலையில் கண்ணுதற் கடவுளுக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்தவர் என்பது மேலே கண்டுவந்த செய்தியால் நன்கு தெரிகிறது. சுந்தரர் செய்த பணிவிடை யாது?

*"வள்ளல் சாத்தும் மதுமலர் மாலையும்*
*அள்ளும் நீறும் எடுத்தணை வானுளன்"*

என்று உபமன்னிய முனி சொல்வதாகச் சொல்லும் சேக்கிழார் வாக்கினால் பெருமானுக்கான பூசைக்குப் பூவும் திருநீறும் கொண்டு வந்து தரும் பணியே சுந்தரரது பணி என்பது புரிகிறது.

நாள்தோறும் இந்தப் பணிவிடை எந்த இடத்தில் நிகழும்? இறைவன் எழுந்தருளும் இடத்தில் நிகழும். அந்த இடத்தை மன்றம் என்றும், அம்பலம் என்றம், மூலத்தானம் என்றும் சொல்வது சமய வழக்கு.

சேக்கிழார் இறைவன் இருந்தருளும் கைலை மன்றினைக் குறிப்பிடவில்லையாயினும், கந்த புராணமுடையார் அதனை மிக அழகாகக் குறிப்பிட்டுள்ளார் என்பது அறிந்து இன்புறத்தக்கது.

சேக்கிழார் இறைவன் இருந்தருளும் கைலை மன்றினைக் குறிப்பிடவில்லை யாயினும், கந்த புராணமுடையார் அதனை மிக அழகாகக் குறிப்பிட்டுள்ளார் என்பது அறிந்து இன்புறத்தக்கது.

*என்றுமீ றென்ப தின்றி யிருந்திடுங்கைலை வெற்பிற்*
*பொன்றிகழ் நகரம் தன்னுள் பொருவிலாக் கோளு நாளும்*
*துன்றிய தன்மைத் தென்னத் தூமணிக் கதிர்கள் சூழ*
*மன்றும ருறையு ளொன்று வனப்பொடு வைகிற் றன்றே*

| | | |
|---|---|---|
| நகரம் | – | கோயில் என்பது பொருள். |
| மன்று | – | இறைவன் எழுந்தருளும் இடம். |

உறையும் வாழும் தங்கியிருக்கும் என்பது பொருள்.

நகர் என்பது இறைவன் கோயில் என்பதனைப் புறநானூறு கொண்டு அறியலாம்.

மேலும் நமது சுந்தரர் இறைவனால் ஆட்கொள்ளப்பட்ட பின்னரே நிலவுலக தில்லை மன்றுக்குச் சென்று இறைவனைக் காணப் போகின்றார். ஆனால் அதற்கு முன்பே இறைவனால் முற்பிறவி அறிவிக்கப்பட்டவுடன் "மன்றுளீர் செயலோ" என வாய் விட்டுக் கதறுகிறார் என்றால், அவர் எந்த மன்றத்தைக் குறிப்பிட்டுக் கதறுகிறார்? கயிலை மன்றைக் குறிப்பிட்டே கதறுகின்றார் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? மேலும் ஓர் இடத்தைப் பார்ப்போம். நான் கொண்டுவந்த ஓலையைக் கிழித்ததின் மூலம் இவன் எனக்கு அடிமை என்பதை நிரூபித்தான் எனத் திருமணப் பந்தலில் இறைவன் சொல்லக் கேட்ட சுந்தரர் மனத்தில் என்ன நினைக்கின்றார்? இவரை மனம் மிகவும் விரும்புகிறது. அந்த விருப்பம் மேன்மேல் பொங்குகின்றது. இவருக்கும் எனக்கும் ஏதோ ஒரு பழையத் தொடர்பு இருக்கின்றது போலும் என நினைக்கின்றார். "பழைய மன்றாடி போலும்" என்னும் இத்தொடர் வழக்குமன்றம் செல்வதிலேயே தன் வாழ்நாளைக் கழிப்பவர்போலும் என்ற பொருளையும், நான் பணி செய்த மன்றத்துக்குரியர் போலும்; (முன்னைத் தொடர்பு) என்ற பொருளையும் தந்து நிற்கின்றது.

"பழைய மன்றாடி போலும்" என்னும் இத்தொடர் வழக்குமன்றம் செல்வதிலேயே தன் வாழ்நாளைக் கழிப்பவர்போலும் என்ற பொருளையும், நான் பணி செய்த மன்றத்துக்குரியர் போலும்; (முன்னைத் தொடர்பு) என்ற பொருளையும் தந்து நிற்கின்றது.

கயிலை மன்றில் அணுக்கத் தொண்டனாகச் சுந்தரர் இருந்தது பற்றியே அவரை அர்ச்சிக்கும் மறையோர் குலத்தில் பெருமான் பிறக்கச் செய்தார் எனக் கொள்வதில் தவறில்லை.

## ஈசன் இட்ட கட்டளை

"சுந்தரமூர்த்தி நாயனார் ஆதி சைவர். முப்போதும் திருமேனித் தீண்டிச் சடங்குகள் செய்யும் குலத்திலே பிறந்தவர். அவரைச்

சிவபிரான் தடுத்தாட் கொண்டார். ஆட்கொண்ட பின்பு என்னைப் பாடிப் புகழ்வாயாக! என்று சிவபிரான் சுந்தரருக்குக் கட்டளை இட்டார். நான் என்ன பாட? எப்படிப்பாட? என்று சுந்தரர் கேட்டார். சிவபிரான் சொன்ன விடையைச் சேக்கிழார் பாடுகின்றார்.

*"மற்றுநீ வன்மை பேசி வன்றொண்டன் என்னும் நாமம்*
*பெற்றனை; நமக்கும் அன்பிற் பெருகிற சிறப்பின் மிக்க*
*அர்ச்சனை பாட்டே ஆகும் ஆதலால் மண்மேல் நம்மைச்*
*சொற்றமிழ் பாடு கென்றார் தூமறைபாடும் வாயார்"*

இந்தப் பாடல் வடமொழி / தமிழ்க் கிளர்ச்சியிலே மிகவும் அறிமுகமாகிவிட்ட பாடல் என்று பேராசிரியர் எழுதுகிறார். இதுபற்றி விசாரிப்போம்.

பேராசிரியர் பெரியபுராணத்தை யாரிடம் பாடம் கேட்டார்? பாடம் சொன்னவர் இப்படிச் சொன்னாரா? இவர் கையில் வைத்துள்ள பதிப்பில் நான் என்ன பாட? எப்படிப் பாட? என்று சுந்தரர் கேட்டபின்பு, மேலே காணும் பாடல் பதிப்பிக்கப்பட்டுள்ளதா? திருப்பனந்தாள் காசித் திருமடத்துப் பதிப்பில் இவ்வாறு இல்லையே. காசித் திருமடம்தான் பேராசிரியர் பார்வையில் சமஸ்கிருத வாலாவாயிற்றே; அதனால் அந்தப் பதிப்பை விட்டுவிடுவோம். இவர் ஊரினரான சிவக் கவிமணியின் பதிப்பில் இப்படிக் காணப்படுகிறதா? கதைப்போக்கு எப்படிச் செல்கிறது என்பதனைக் கீழே காணும் வரிசை கொண்டு அறியலாம்.

*"என்றெழும் ஓசை கேளா ஈன்றஆன் கனைப்புக் கேட்ட*
..............................................................................
..............................................................................
*மன்றுளீர்! செயலே வந்துவலிய ஆட்கொண்ட தென்றார்"*

(பாடல் 68)

*"எண்ணிய......... அண்ணலை ஓலை காட்டி*
*ஆண்டவர் அருளிச் செய்வார்"*

*(பாடல் 69)*

*"மற்றுநீ ...... சொற்றமிழ் பாடுகென்றார்*
*தூமறை பாடும் வாயார்"*

*(பாடல் 70)*

*"தேடிய ........... ஆடிய செய்யதாளை*
*அஞ்சலி கூப்பி நின்ற"*

*(பாடல் 71)*

*"வேதியன் ஆகிஎன்னை ....... யாதினை*
*அறிந்தென் சொல்லிப் பாடுகேன்*
*என மொழிந்தார்"*

*(பாடல் 72)*

*"அன்பனை அருளின் நோக்கி...........*
*வன்பெருந் தொண்டர் ஆண்ட*
*வள்ளலைப் பாடலுற்றார்"*

*(பாடல் 73)*

தேவரீரே! மன்றுளீரே! தாங்களே எழுந்தருளி இவ்வாறு தடுத்து என்னை ஆட்கொண்டீர்களே! எனப் பேசி செய்வதறியாது திகைத்து நின்ற சுந்தரரிடம், நீ என்னிடம் வன்மை பேசியதால் (இதுவரை சாதாரணத் தொண்டனாக இருந்த, நீ இன்றுமுதல்) வன்தொண்டன் என்னும் பெயர் பெறுகிறாய்; அன்பு ஊற்றெடுக்கும் சிறப்பு மிகுந்த அர்ச்சனைக்குரிய பாட்டே நாம் உகப்பதாகும். ஆதலால் இந்த நிலவுலகில் தெரிந்தெடுக்கப்பெற்ற நல்ல சொற்களால் ஆகிய தமிழ்ப் பாட்டுப் பாடுக! என்கிறான் ஈசன். இவ்வாறு ஈசன் எப்போது சொல்கிறான்? சுந்தரர் எப்படிப்பாட? என்னபாட? எனக் கேட்பதற்கு முன்பு சொல்கிறான். தானே சொல்கிறான். ஈசன் அவ்வாறு தானே சொல்லியதைக் கேட்டு அதன்பின்பே என்ன சொல்லிப் பாடுவது எனச் சுந்தரர் கேட்கிறார்.

## பூசை அருச்சனை

> ஆளுடைய பிள்ளையிடமும், அரசிடமும் தமிழில் பாடுக! எனச் சொல்லாத ஈசன், சுந்தரரிடம் மட்டும் இவ்வாறு சொல்லியதில் ஏதோ காரணம் இருக்க வேண்டும்.

ஆளுடைய பிள்ளையிடமும், அரசிடமும் தமிழில் பாடுக! எனச் சொல்லாத ஈசன், சுந்தரரிடம் மட்டும் இவ்வாறு சொல்லியதில் ஏதோ

காரணம் இருக்க வேண்டும். அதன் காரணம் பற்றிச் சிந்திப்பதற்கு முன்பு பூசை, அருச்சனை என்னும் சொற்கள் எந்தப் பொருளை உணர்த்தி நிற்கின்றன என்பதனைப் பார்ப்பது அவசியம்.

இறைவனைத் திருமஞ்சனம் ஆட்டுதல், மலரும் மாலைகளும் சாத்துதல், ஆடை அணிகலன் அணிவித்தல், நீறு மற்றும் சந்தனாதி வாசனைப் பொருட்களைப் பூசுதல், திருவமுது படைத்தல், தேங்காய் உடைத்தல், தூபதீபம் எடுத்தல் ஆகிய பலவகை உபசாரங்கள் செய்து; பின்னர், ஆண்டவனின் அளப்பரிய ஆற்றலையும் அடியார்க்கு அவன் முன்னின்று அருளும் திறத்தையும் போற்றிப் புகழ்ந்து வாழ்த்தி, இறுதியில் அவன் திருவடிக்கே அனைத்தையும் அடைக் கலமாக்குதலே (சமர்ப்பித்தல்) பூசை எனப்படும். இதனையே அருச்சனை என்ற சொல்லாலும் குறிப்பிடுவர். பூசையும் அருச்சனையும் ஒன்றே.

தேங்காய் உடைத்த பின்பு கற்பூரம் காட்டும் காலத்தில் குருக்கள் முணுமுணு என்று தன் வாய்க்குள்ளேயே சொல்கிறாரே ஏதோ சில மந்திரங்கள் அவற்றையே அர்ச்சனை என்று இன்று பலர் நினைத்து வருகின்றனர். குறிப்பாகச் சொந்த மொழி வந்த மொழிக்காரர்கள் இதனையே பற்றிக்கொண்டு பேசுகின்றனர். இந்த நினைப்புத் தவறானது எனச் சேக்கிழார் சொல்கின்றார். நான் சொல்லவில்லை. அதற்கான சேக்கிழார் வாக்கினைக் காண்போம்.

தேங்காய் உடைத்த பின்பு
கற்பூரம் காட்டும் காலத்தில்
குருக்கள் முணுமுணு என்று தன்
வாய்க்குள்ளேயே சொல்கிறாரே
ஏதோ சில மந்திரங்கள் அவற்றையே
அர்ச்சனை என்று இன்று பலர்
நினைத்து வருகின்றனர். குறிப்பாகச்
சொந்த மொழி வந்த மொழிக்காரர்கள்
இதனையே பற்றிக்கொண்டு
பேசுகின்றனர். இந்த நினைப்புத்
தவறானது எனச் சேக்கிழார்
சொல்கின்றார்.

*"வாசத் திருமஞ் சனம்பள்ளித் தாமம் சாந்தம் மணித்தூபம்*
*தேசிற் பெருகும் செழுந்தீபம் முதலா யினவும் திருவமுதும்*
*ஈசற் கேற்ற பரிசினால்அருச்சித் தருள எந்நாளும்*
*பூசைக் கமர்ந்த பெருங்கூத்தர் பொற்பார் சிலம்பின் ஒலி அளித்தார்"*

(கழறிற்றறிவார் புராணம் – பாடல் 24)

இந்தப் பாடலில் காணப்படும் அருச்சித்து, பூசை என்ற சொற்கள் ஒருபொருளையே உணர்த்துகின்றன என்பதை எளிதில் அறியலாம். சேரமான் பெருமாள் நாயனார் தில்லைக் கூத்தனை வழிபட்டமுறையையும், கூத்தப் பெருமான் அதனை ஏற்றுக்கொள்வதற்காக எந்நாளும் நாயனார் பூசையில் எழுந்தருளி அவருக்குச் சிலம்பொலி செய்து அருளியதையும் இந்தப் பாடலில் சேக்கிழார் சொல்கின்றார்.

பூசைக் காலத்தில் இறைவன்மீது பாடுகின்ற பாட்டைத் திருப்பாட்டு எனக் குறிப்பிடும் குன்றை முனிவர், அத்திருப்பாட்டைச் சேரமான் பாடிய திறத்தையும் நமக்குச் சொல்லியருளியுள்ளார். அந்த இடத்தைப் பார்ப்போமா!

*"திருமஞ் சனமும் கொணர்ந்துதிரு வலகும் இட்டுத் திருமெழுக்கு*
*வரும்அன் புடன்இன் புறச்சாத்தி மற்றும் உள்ள திருப்பணிகள் பெருமை*
*பிறங்கச் செய்தமைத்துப் பேணும் விருப்பில் திருப்பாட்டும் ஒருமை*
*நெறியின் உணர்வுவர ஓதிப் பணிந்தே ஒழுகுநாள்"*

திருமஞ்சனத்திற்கான நீர் கொண்டுவந்து, பெருமானுக்கு உரிய இடத்தைத் தூய்மை செய்து, மஞ்சனமாட்டித் திருநீறு முதலானவற்றைச் சாத்தி, மற்றுள்ள உபசாரங்களைப் பெருமை விளங்கும்படிச் செய்து, தம்மைப் பாதுகாத்து அருள வேண்டும் என்ற விருப்பத்தால் இறைவனை ஒருமை உள்ளத்துடன் ஓதிப் பணிந்து வாழும் காலத்து என்பது இந்தப் பாட்டிற்கான பொருள்.

இந்தப் பாடலில் காணப்படும் திருப்பாட்டு பூசைக்குரிய பாட்டு, அர்ச்சனைக்குரிய பாட்டு, அர்ச்சனைக் காலத்தில் பாடும் பாட்டு எனப் பொருள் விளக்கி நிற்பதை உணர வேண்டும்.

அருச்சனை என்ற சொல்லின் முன்னும் பின்னும் எந்த ஓர் அடைமொழியும் கொடுக்காமல் சொன்னால் அது பூசை என்ற பொருளையே தரும் என்பதுதான் சேக்கிழார் கொள்கை. பெரியபுராணத்தில் பல இடங்களில் இந்தப் பொருளிலேயே இச்சொல் ஆளப்பட்டுள்ளது.

## தமிழில் பாடச் சொன்னது ஏன்?

தமிழ்நாட்டில் தமிழ்க் குடியில் பிறந்து தமிழறிந்த சுந்தரரைத் தமிழில் பாடுக! என இறைவன் சொன்னான் எனில், அதில் ஏதோ ஒரு குறிப்பு இருக்க வேண்டுமல்லவா? அது எதுவாக இருக்கும்?

தமிழ்நாட்டில் தமிழ்க் குடியில் பிறந்து தமிழறிந்த சுந்தரரைத் தமிழில் பாடுக! என இறைவன் சொன்னான் எனில், அதில் ஏதோ ஒரு குறிப்பு இருக்க வேண்டுமல்லவா? அது எதுவாக இருக்கும்?

சுந்தரர் வேதம் கற்றவர். வடமொழி அவருக்கு நன்கு தெரியும். சிவபெருமானால் முற்பிறவி அறிவிக்கப்பட்டவுடன் அவனைச் சுந்தரர் வழுத்தத் தலைப்படுவார். அப்போது அவர் எந்த மொழியில் வாழ்த்துச் சொல்லத் தொடங்குவார்? நிச்சயம் வடமொழியாகத்தான் இருக்கும். எப்படி?

சுந்தரர் கயிலையில் பரமனுக்குப் பணிவிடை செய்து வந்தவர். கயிலை மன்றில் சிவனுக்கான அர்ச்சனை வடமொழியில் நடந்துவந்ததை நாள்தோறும் பார்த்து வந்தவர். ஆதலால் அந்த மொழியிலேயே அவர் தொடங்குவார் என்பதை ஈசன் நன்கறிவான்.

பெருமான் உள்ளிருந்து உணர்த்த வேதங்கள் வியாசரால் வகுக்கப்பட்டன என்பதை ஏற்கெனவே பார்த்து வந்துள்ளோம். அவற்றுள் ஒன்றான சாமவேதம் பரமனைப் பற்றியது. வியாசருக்கு முன்பிருந்த வேதங்களின் பெயர்களைக் குறிப்பிடும் நச்சினார்க்கினியரும் சாம வேதத்தைக் குறிப்பிடுகின்றார் என்பது நினைவுகூரத்தக்கது. அந்தச் சாமவேதம் பரமனைப் பற்றிய பாடலே என்பதைக் கீழே காணும் மூவர் வாக்குகள்

பெருமான் உள்ளிருந்து உணர்த்த வேதங்கள் வியாசரால் வகுக்கப்பட்டன என்பதை ஏற்கெனவே பார்த்து வந்துள்ளோம். அவற்றுள் ஒன்றான சாமவேதம் பரமனைப் பற்றியது. வியாசருக்கு முன்பிருந்த வேதங்களின் பெயர்களைக் குறிப்பிடும் நச்சினார்க்கினியரும் சாம வேதத்தைக் குறிப்பிடுகின்றார் என்பது நினைவுகூரத்தக்கது.

உறுதிசெய்வதை அறியலாம்.

*"சாகை ஆயிரம் உடையார் சாமமும் ஓதுவதுடையார்"*
*"தயங்கு சோதி சாம வேதா"* - *ஞானசம்பந்தர்.*

*"பாடினார் சாமவேதம் பாடிய பாணியாலே ஆடினார்"*
*"சாமவேத கந்தருவம் விரும்புமே"* – *அப்பர்.*

*"சாமவேதம் பெரிதும் உகப்பானை"* – *சுந்தரர்.*

இராவணன் சாமவேதம் பாடியே உய்திபெற்றான் என்பது அனைவரும் அறிந்த ஒன்றே. வியாசர் சொல்லச் சொல்ல விநாயகர் தனது கோடொன்று கொண்டு பாரதத்தை கயிலையில் எழுதியதாகச் சொல்வர். இவரே வேத வியாசர் எனப்படுவார். இந்தச் செய்திகளைச் சமயப் பற்றும் உணர்வும் உடையோர் நம்ப வேண்டும்.

"ஜிப்ரில் அல் உறிஸ்ஸலாம்" என்னும் பெயருடைய தேவதூதரால் நாயன் செய்தி "உறிரா"மலையில் நபிக்குச் சொல்லப்பட்டதையும், "யோர்தான்" நதிக்கரையில் பரிசுத்த ஆவி இறங்கிவந்து இயேசுவிடத்துக் குடிகொண்டதையும் ஒவ்வொரு இஸ்லாமியனும், ஒவ்வொரு கிறிஸ்துவனும் நம்புவதைப்போல நம்ப வேண்டும். போலி நாத்திகர்கள் நமது சைவ வைணவச் சமய வரலாறுகளை நம்பாமல் பேசுவர். இவர்களுடன் கூட்டணி வைத்துள்ளவர்களே சொந்தமொழி வந்தமொழி ஆய்வாளராகிய நமது போலிச் சைவர்கள் என்பதையும் அறிந்துகொள்ள வேண்டும்.

"ஜிப்ரில் அல் உறிஸ்ஸலாம்" என்னும் பெயருடைய தேவதூதரால் நாயன் செய்தி "உறிரா"மலையில் நபிக்குச் சொல்லப்பட்டதையும், "யோர்தான்" நதிக்கரையில் பரிசுத்த ஆவி இறங்கிவந்து இயேசுவிடத்துக் குடிகொண்டதையும் ஒவ்வொரு இஸ்லாமியனும், ஒவ்வொரு கிறிஸ்துவனும் நம்புவதைப்போல நம்ப வேண்டும். போலி நாத்திகர்கள் நமது சைவ வைணவச் சமய வரலாறுகளை நம்பாமல் பேசுவர். இவர்களுடன் கூட்டணி வைத்துள்ளவர்களே சொந்தமொழி வந்தமொழி ஆய்வாளராகிய நமது போலிச் சைவர்கள் என்பதையும் அறிந்துகொள்ள வேண்டும்.

எண்டோள் ஈசன், அட்டமூர்த்தி என்று அழைக்கப்படும் பெருமான் வான் திசைகள் எட்டுக்கும் உரியவன், சொந்தக் காரன். இந்த எட்டுத் திசை மொழிகளுக்கும் அவனே கர்த்தா வாகிறான். ஆதலால் அந்தந்தத் திசை மொழிகளாக அவனே விளங்குகின்றான்.

வடதிசை இமயத்தில் வடமொழியாளனாகவும், தென் திசைத் தில்லையில் தென் மொழியளானாகவும் திகழ்கின்றான். இந்த வகையில் கயிலையில் தேவர்களும், மூவர்களும், முனிவர்களும் சாமவேதம் பாடியே பெருமானை வழிபடுவதை நன்கு அறிந்திருந்த சுந்தரர், சிவபெருமானைச் சாமவேதம்பாடி வழிபடத் தொடங்குவார் என்பது உய்த்து உணரத்தக்கதுதானே.

நாமே உய்த்து உணரக்கூடிய இந்தச் செய்தியைப் பெருமான் உணர்ந்து கொள்கின்றான் என்பது பெரிய செய்தியா என்ன? அவனால் உணரமுடியாத ஒன்றுளதோ? ஆதலால் தென் திசையில் தோன்றிய சுந்தரர் வழிபாடு தென் மொழியிலேயே இருக்க வேண்டும் என்று திருவுளம் பற்றுகின்றான். அதற்கான காரணம் சேக்கிழாரால் சொல்லப்படுகிறது. அதனைப் பார்ப்போம்.

எட்டுத்திசையும் ஈசனுக்குரியதாயினும், அவன் குடிகொண்டுள்ள தலங்களின் சிறப்பினால் தென்திசை மாதவம் செய்ததாயிற்று என்று கூறி; பரமனிடம் கொண்ட பக்தியினால் தங்கள் உடல் பொருள் ஆவி அனைத்தையும் அர்ப்பணித்த தொண்டர் பலர் அங்கே தோன்றியதனாலும், அவர்கள் பெருமையினை உலகம் உணரவேண்டும் என ஈசன் திருவுளம் பற்றியதாலும் சுந்தரரைத் தமிழ்நாட்டில் பிறக்கச் செய்தான் என உபமன்னிய

எட்டுத்திசையும் ஈசனுக்குரியதாயினும், அவன் குடிகொண்டுள்ள தலங்களின் சிறப்பினால் தென்திசை மாதவம் செய்ததாயிற்று என்று கூறி; பரமனிடம் கொண்ட பக்தியினால் தங்கள் உடல் பொருள் ஆவி அனைத்தையும் அர்ப்பணித்த தொண்டர் பலர் அங்கே தோன்றியதனாலும், அவர்கள் பெருமையினை உலகம் உணரவேண்டும் என ஈசன் திருவுளம் பற்றியதாலும் சுந்தரரைத் தமிழ்நாட்டில் பிறக்கச் செய்தான் என உபமன்னிய முனி வழிச் சேக்கிழார் காரணம் கூறுகின்றார்.

முனி வழிச் சேக்கிழார் காரணம் கூறுகின்றார்.

ஈசனை அறிவு கொண்டு ஆய்ந்து அடைய முடியாது. அன்பு ஒன்று மட்டும் கொண்டே அடைய முடியும் என்பதையும், அறிவு கொண்டு அவனை வடமொழி வேதங்கள் தேடுகின்றன. ஆனால் தென்மொழி வேதங்கள் அறிவை ஓர் அளவில் நிறுத்திக்கொண்டு அன்பினாலேயே தேடுகின்றன என்பதையும் இந்த நூலின் தொடக்கம் முதல் கண்டுவருகின்றோம்.

இந்த அன்பு, சைவம் வைணவம் ஆகிய இரண்டிற்கும் பொதுவானதே. வைணவ ஆழ்வார்களும் சரி! சைவ நாயன்மார்களும் சரி! ஈசனைத் தங்கள் அன்பின் திறத்தால் அடைந்தார்களே தவிர, ஆய்ந்து அறிந்ததால் அடையவில்லை என்பதைச் சமய உலகம் நன்கறியும். வடபுல இதிகாசப் பாத்திரங்கள் இறந்துபோகின்றன. வியாசர் முதலான முனி புங்கவர்கள் மீண்டும் மீண்டும் பிறப்புக் கொள்கின்றனர். ஆனால் நமது நாயன்மார்களும் ஆழ்வார்களும் பிறப்பு நீங்கிச் செம்பொருளைச் சேர்ந்துவிடுகின்றனர். இச்சேர்க்கை அன்பால் மட்டுமே ஆகக்கூடியது என்பதனை நமது திருமுறைகளும், திவ்வியப் பிரபந்தங்களும் திரும்பத் திரும்பக் கூறுகின்றன. இத்தகைய அன்பு கைவரப்பெற்றவர்களே திருத்தொண்டர்கள் என அழைக்கப்படுகின்றனர்.

> வடபுல இதிகாசப் பாத்திரங்கள் இறந்துபோகின்றன. வியாசர் முதலான முனி புங்கவர்கள் மீண்டும் மீண்டும் பிறப்புக் கொள்கின்றனர். ஆனால் நமது நாயன்மார்களும் ஆழ்வார்களும் பிறப்பு நீங்கிச் செம்பொருளைச் சேர்ந்துவிடுகின்றனர். இச்சேர்க்கை அன்பால் மட்டுமே ஆகக்கூடியது என்பதனை நமது திருமுறைகளும், திவ்வியப் பிரபந்தங்களும் திரும்பத் திரும்பக் கூறுகின்றன.

## திருத்தொண்டு

திருத்தொண்டு என்பது இப்போது பேசப்படும் பொதுத் தொண்டிலிருந்து முற்றிலும் மாறுபட்டதாகும். பொதுத் தொண்டில்

கடவுட் சிந்தனை, கடவுள் பற்று இல்லாமல் போகலாம். ஆனால் திருத் தொண்டில் கடவுளிடத்து அன்பு என்பது இல்லாமல் போகமுடியாது. இதனைப் பரிபூரணமுற்ற தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள், "கடவுளுக்கும் திருக்கோயில்களுக்கும் இவை இரண்டையும் சார்ந்து வாழும் மக்களுக்கும் கடவுட் சிந்தனையுடன் தன்முனைப்பின்றி 'என் கடன் பணிசெய்து கிடப்பதே' என்று செய்வது திருத்தொண்டு" என அருமையாக விளக்கிச் சொல்கிறார்கள்.

'கடவுளுக்கும் திருக்கோயில்களுக்கும் இவை இரண்டையும் சார்ந்து வாழும் மக்களுக்கும் கடவுட் சிந்தனையுடன் தன்முனைப்பின்றி 'என் கடன் பணிசெய்து கிடப்பதே' என்று செய்வது திருத்தொண்டு'

பெரியபுராணத்தில் பேசப்படும் அடியார்கள் அனைவரும் தமிழ்நாட்டில் பிறந்தவர்கள். ஈசனிடத்துப் பெரிதும் பக்தி பூண்டவர்கள். ஈசனிடத்துக் கொண்டிருந்த அன்பினால் பிறருக்கு உதவி செய்தபோது எந்தவித ஊதியத்திற்கும், எதிர்பார்ப்பிற்கும், புகழுக்கும் இவர்கள் ஏங்கியதில்லை. இவைகள் தம்மை வந்து சேரும் எனக்கனவிலும் கருதியதில்லை. பெருமான் தங்களைத் தேடிவருவான் என்றோ, பிறப்பறுப்பான் என்றோ எண்ணி எந்தக் காரியத்தையும் இவர்கள் செய்ததும் இல்லை. இப்பேர்ப்பட்ட திருத்தொண்டர்களின் அன்பினை உலகுக்கு உணர்த்தவே தனக்குத் தொண்டு செய்துகொண்டிருந்த சுந்தரரைத் தமிழ்நாட்டில் பிறக்கச் செய்கின்றான் பெருமான். தமிழ்நாட்டில் பிறந்த பின்பு, பழம் பிறப்பு அறிந்த காரணத்தால், பழையபடி வடமொழி வழிபாட்டைச் சுந்தரர் தொடங்கிவிட்டால், தான் கருதிச் செய்த பிறப்பின் குறிக்கோள் கெட்டுவிடும் என்பதால்தான் சுந்தரர் எதனையும் கேட்பதற்கு முன்பே இறைவன் முந்திக்கொண்டு அவரிடம் தமிழில் பாடுக ! என்றான்.

## தமிழ் என்பதன் பொருள்

"தமிழர்கள் தங்கள் மொழியைத் தமிழ் என்றனர். தங்கள் இலக்கியத்தைத் 'தமிழ்' என்றனர். தங்கள் உயரிய கோட்பாடு

களையும் இலட்சியத்தையும் 'தமிழ்' என்றே வழங்கினர். பண்டைத் தமிழ் இலக்கியங்களைப் பயிலும்போது தமிழர்கள் தாங்கள் சிறப்பாகக் கருதிய களவுக் காதலைத் (களவியல் உரை) 'தமிழ்' என்றே குறிப்பிட்டமையினையும் வீரத்தையும் (படைகளை சிலம்பு) அவ்வாறே குறிப்பிட்டமையினையும் அறிய முடிகிறது. பக்திப் பாடல்களுக்கு அப்பாடல்களைத் 'தமிழ்' என்றே வழங்குவதோடு இறைவன்பால் கொண்டுள்ள பக்தியினையும் 'தமிழ்' என்றே கூறுவதாகத் தோன்றுகிறது" எனக் கூறி, மேலும் "நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பும் ஞானசம்பந்தன் என்னும்போது இங்குத் தமிழ் பக்தியைக் குறித்து நிற்பதாகவே தோன்றுகிறது" எனப் பேராசிரியர் ப. அருணாசலம் கருத்துரைக்கின்றார். இக் கருத்தில் இரண்டு இருக்க நியாயமில்லை.

பக்திப் பாடல்களுக்கு அப்பாடல்களைத் 'தமிழ்' என்றே வழங்குவதோடு இறைவன்பால் கொண்டுள்ள பக்தியினையும் 'தமிழ்' என்றே கூறுவதாகத் தோன்றுகிறது" எனக் கூறி, மேலும் "நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பும் ஞானசம்பந்தன் என்னும்போது இங்குத் தமிழ் பக்தியைக் குறித்து நிற்பதாகவே தோன்றுகிறது" எனப் பேராசிரியர் ப. அருணாசலம் கருத்துரைக்கின்றார். இக் கருத்தில் இரண்டு இருக்க நியாயமில்லை.

இந்த நூலில் சைவ சமயத் தொடர்பான கருத்துக்களையே ஆய்வு செய்து வருகின்றோம். ஆதலால் சமய நோக்கில் தமிழ் என்ற சொல் எந்தப் பொருளில் ஆளப்படுகிறது என்பதை மட்டும் கவனித்தால் போதுமானது. நமது சைவ சமயகுரவர்களில் தலையாயவர் ஞானசம்பந்தர். அப்பரடிகளாலும், சுந்தரராலும் வணங்கப்பட்டவர். நமது திருமுறைகளில் முதல் மூன்று அவருடையனவே. ஈசனாகவும் முருகனுமாகவே சைவர்கள் இவரைக் கொண்டாடுவர். எல்லா வகையாலும் பெருமைக்குரிய சம்பந்தர் தாம் பாடிய முதல் திருப்பதிகத்தின் இறுதிப் பாடலில் (பதினொராம் பாடல் சம்பந்தர் பாடல்களைத் திருக்கடைக் காப்பு என்பது மரபு)

*"ஒருநெறியமனம் வைத்துணர் ஞானசம்பந் தனுரைசெய்த*
*திருநெறியதமிழ் வல்லவர் தொல்வினை தீர்தலெளிதாமே"*

என்று கூறுகின்றார்.

ஒன்றிய மனத்துடன் ஈசனை உணர்ந்த ஞான சம்பந்தனாகிய நான் சொல்லிய பேரின்பத்தைத் தரவல்லதும் ஒழுக்க நெறியை உணர்த்துவதுமாகிய தமிழை உணர்ந்துகொள்ள வல்லவர் தங்கள் பழைய வினைகளை எளிதாகத் தீர்த்துக்கொள்ளலாம் என்பது மேலே காணும் தொடர்களுக்கான பொருளாகும். ஒருநெறிய மனம் என்பதனைப் பாட்டைப் படிப்போருக்கும் ஏற்றலாம்

இந்த இடத்தில் தமிழ் என்னும் சொல்லைத் தாம் பாடிய பாடல்களுக்காக்கிக் கையாண்டுள்ளார் சம்பந்தர் என்பது அறிந்து உணரவேண்டிய ஒன்றாகும். (உரை செய்த தமிழ்: பாடிய பாடல்கள் என்பது பொருள்) நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன் என்னும்போது நாள்தோறும் தமது இனிய இசையால், தமிழில் ஈசனைப் பற்றிய பாடல்களைப் பாடி, அவன் புகழ் பரப்பும் ஞானசம்பந்தன் என்னும் பொருள் போந்து நிற்கவில்லையா?

*"..............திருவெண் காட்டின்மேல்*
*சொல்லிய அருந்தமிழ் பத்தும் வல்லவர்"*

*"............. கொள்ளிக் காடரைச்*
*சொற்றமிழ் இன்னிசைமாலை சோர்வின்றி"*

*"................... விசயமங்கையை*
*நண்ணிய புகலியுள் ஞானசம்பந்தன்*
*பண்ணிய செந்தமிழ் பத்தும் வல்லார்"*

*"..............பூவணத்துறை*
*..........................................*
*........................ஞானசம்பந்தன்*
*பண்ணிய தமிழ்சொல் பறையும் பாவமே"*

இந்தக் காட்டுகளிலிருந்து தமிழ் என்னும் சொல் திருமுறைகளை அதாவது பாடல்களைக் குறித்து நிற்கிறது என்பதனையும்; அது மொழியையோ, காதலையோ, வீரத்தையோ குறித்து நிற்கவில்லை என்பதனையும் தெளிவாகத் தெரிந்துகொள்ள வேண்டும்.

## வேள்வியும் திருமுறையும்

வேள்வி பற்றி ஏற்கெனவே விரிவாகப் பேசியுள்ளோம். தற்காலத்தில் "யாகம்" என்பதனைப் பண்டைக்காலத்தில் "வேள்வி" என்ற சொல்லால் குறித்தனர். இப்போதெல்லாம் திருக் கோயிலைச் சார்ந்தே யாகங்கள் நடத்தப்படுகின்றன. யாகசாலையில் உள்ள அக்னிகுண்டத்தில் பல பொருட்களை இட்டு நெய் சொரிந்து "ஸ்வாகா" சொல்லுகின்றனர். "ஸ்வாகா" என்னும் வடமொழிச் சொல்லுக்கு மிச்சம் மீதி வைக்காமல் "விழுங்கிவிடு" அல்லது "ஏற்றுக்கொள்" என்பது பொருளாகும். "அவி சொரிந்து" தீயின்கண் நெய் முதலிய அவிகளைச் சொரிந்து எனப் பரிமேலழகர் உரை சொல்கிறார்.

"ஸ்வாகா!" என்பதற்குப் பதில் "ஏற்றுக் கொள்க!" அல்லது "உவகையாகுக!" அல்லது "உண்டுவிடு!" என்றும்; "நமஹ!" என்பதற்குப் பதில் "போற்றி!" என்றும்; "ததாஸ்து!" என்பதற்குப் பதில் "அவ்வாறே ஆகுக!" என்றும்; "சாந்தி" என்பதற்குப் பதில் "அமைதி" என்றும் கொண்டு சடங்கினைச் செய்வதை யார் வேண்டாம் என்பர்? யாரும் தடையாக இல்லையே!

வடமொழி மந்திரங்களுக்குப் பதிலாக இங்கே காட்டியுள்ளவாறு தமிழ் மொழி மந்திரங்களைத் தாராளமாக ஓமகுண்டத்தில் அக்னி காரியமாகப் பயன்படுத்தலாம். யாக கிரியைக்குத் தமிழ் மொழியைப் பயன்படுத்துவதில் கருத்து வேறுபாடு கிடையாது.

வடமொழி மந்திரங்களுக்குப் பதிலாக இங்கே காட்டியுள்ளவாறு தமிழ் மொழி மந்திரங்களைத் தாராளமாக ஓமகுண்டத்தில் அக்னி காரியமாகப் பயன்படுத்தலாம். யாக கிரியைக்குத் தமிழ் மொழியைப் பயன்படுத்துவதில் கருத்து வேறுபாடு கிடையாது.

"அவி உணவு" அவியாகிய உணவு. நெய், அசனம் முதலாகிய ஓமத்திரவியங்களைக் கொட்டுதல். இவ்வாறு அக்னியில் பொருட்களை இடும்போது எந்தத் தெய்வத்தை எண்ணி இடுகிறோமோ அந்தத் தெய்வத்தின் பெயரை விளித்து, இதனைக் கொள்வாயாக! எனச் சொல்லி இடுதல் வழக்கம்.

நீர்க்கடவுளை நோக்கி இடும்போது நீரிறையே கொள்க! இவ்வாறே நெருப்பிறையே கொள்க! விண்ணிறையே கொள்க! எனப் பஞ் சபூதங்களுக்கான அவியைத் தமிழ் மொழியில் சொல்லி இடலாம். யாருக்கும் வருத்தமில்லை. யாரும் தடை சொல்லவில்லை.

சிவனையோ திருமாலையோ ஐயனாரையோ மாரியம்மனையோ எந்தத் தெய்வக் கோயில்களில் யாகசாலை அமைக்கப்படுகிறதோ அந்த யாகசாலையின் ஓமகுண்டத்தின் எதிரில் உட்கார்ந்து அக்னியில் நெய் முதலான அவி உணவை அளிக்கும்போது சிவபெருமான் மற்றும் உள்ள தெய்வங்களின் பெயர்களையும் ஆற்றல்களையும் தமிழில் சொல்லி அளிப்பதில் வருத்தமில்லை. மாறாக வரவேற்கவே செய்கிறோம்.

*சிவனே கொள்க!*
*சீரோன் கொள்க!*
*முப்புரம் எரித்த முதலே கொள்க!*
*யானை உரிநாயகனே கொள்க!*
*குவளைக் கண்ணிக் கூறனே கொள்க!*

என இப்படியாகத் தமிழில் சொல்வதில் யார் மாறுபடுவார்? மாறுபடமாட்டார். மாறுபாடு எங்கே எழுகிறது? தேவாரம் திருவாசகமாகிய திருமுறைகளை அவி சொரியும்போது பயன்படுத்துவது பற்றி எழுகிறது. வேள்விச் சாலையில் மற்ற எந்தக் காரியத்தின் பொருட்டும் பயன்படுத்துவது பற்றி மாறுபாடு இல்லை. அவி (உணவு) தரும்போதுதான் கூடாது.

## கிரியைக்குப் பயன்படுத்தலாமா?

கிரியைக்குப் பயன்படுத்தலாம் என்போர், தேவாரமாதிய பாடல்கள் தமிழ்ப் பாடல்களே! தமிழர்களே அவற்றை அருளியுள்ளனர். அவை வடமொழி மந்திரங்களைவிட ஆற்றலுடையவை. எலும்பைப் பெண்ணாக்கியது தமிழ்! முதலை உண்ட பாலகனை உயிர்த்து எழச் செய்தது தமிழ்! இறந்துபோன பிள்ளையை எழுப்பியது தமிழ்!

என்றெல்லாம் சொல்லி மேலும் ஈசனே சுந்தரரைத் தமிழில்தானே பாடச் சொன்னான் என்று கூறி அவி சொரியும்போது திருமுறைகளைப் பயன்படுத்தலாம் என்று சொல்கின்றனர்.

பெருமான் சுந்தரரிடம் தன்னைத் தமிழில் பாடுக! எனச் சொல்லியது பற்றி முன்னர் விளக்கமாகப் பேசப்பட்டுள்ளதை நினைவுகூர்க!

கிரியைக்கு அதாவது அவிசொரியும்போது பயன்படுத்தக்கூடாது என்போர் மந்திரம் என்ற பொருளில் 'தமிழ்' மொழியாகவும் 'பாடல்' என்ற பொருளில் 'தமிழ்' பரம்பொருளாகவும் விளங்குகிறது. இந்த நுணுகிய வேறுபாட்டை விளங்கிக்கொள்ள வேண்டும். 'தமிழ்'மந்திரமாக நிற்கும்போது கிரியைக்குப் பயன்படுத்துவதில் வேறுபாடில்லை. 'தமிழ் பரம்பொருளாக நிற்கும்போது கிரியைக்குப் பயன்படுத்து வதில்தான் வேறுபாடு என்கின்றனர்.

மந்திரம் என்ற பொருளில் 'தமிழ்' மொழியாகவும் 'பாடல்' என்ற பொருளில் 'தமிழ்' பரம்பொருளாகவும் விளங்குகிறது. இந்த நுணுகிய வேறுபாட்டை விளங்கிக்கொள்ள வேண்டும். 'தமிழ்'மந்திரமாக நிற்கும்போது கிரியைக்குப் பயன்படுத்துவதில் வேறுபாடில்லை. 'தமிழ் பரம்பொருளாக நிற்கும்போது கிரியைக்குப் பயன்படுத்துவதில்தான் வேறுபாடு என்கின்றனர்.

பரம்பொருளே! ஈசனே! நீ இவ்விடத்தில் எழுந்தருள வேண்டும்! என வேண்டிச் செய்யும் கிரியையில் பரம்பொருளையே நெருப்பில் இட முடியுமா? எனக் கேள்வி கேட்கின்றனர்.

'தமிழ்' பரம்பொருள் என்பதை எதைக் கொண்டு சொல்கிறீர்கள்? எனக் கேட்டால், அதற்கு இவ்வாறு பதில் சொல்கிறார்கள். மதுரையில் சமணர்களோடு 'அனல்' வாதம் செய்ய சம்பந்தர் புதிதாக எந்தப் பதிகத்தையும் (அதாவது புதிதாக எந்த வேண்டுகோளையும்) செய்யவில்லை. சிவபெருமான் பரம்பொருள் என்று ஏற்கெனவே தாம் தெளிவித்த பதிகங்கள் பொதிந்து வைக்கப்பட்டுள்ள சுவடிக்கட்டினைத் தொழுது தமது அழகிய திருக்கரங்களால் எடுத்துத் தம் தலைமீது வைத்து வணங்கிய பின்பு அவிழ்த்து (அவிழ்த்து என்பது இவ்விடத்தில் கயிறு சார்த்திப் பார்ப்பதைக் குறிக்கிறது) ஒரு பாடலைக் கொண்டார் என்றால், தாம் பாடிய பாடல்களை வெறும்

தமிழ் மொழிப் பாடல்கள் என்றா அவர் எண்ணினார்? இல்லையே! அவற்றை அவர் பரமசிவனாகவே எண்ணி இருந்தார் என்பதுதானே உண்மை. இதனை மறுக்க முடியுமா? அல்லது மறக்க முடியுமா? இந்த நிகழ்விலிருந்து நமக்கு என்ன தெரிகிறது? தேவாரத் திருவாசகப் பாடல்கள் வெறும் மொழிப் பாடல்கள் அல்ல. அவை சிவபரம்பொருளே என்பது தெரிகிறது எனச் சொல்கிறார்கள்.

## திருவாசகமும் அவியும்

*"ஆண்டவன் அடியவனுக்குச் சொல்லியது கீதை"*
*"அடியவன் ஆண்டவனுக்குச் சொன்னது திருவாசகம்"*

என்பது வழக்கு. திருவாசகத்தை மாணிக்கவாசகர் சொல்ல நடராசமூர்த்தி தன் கைப்பட எழுதித் "திருச்சிற்றம்பலமுடையான்" எனக் கைச்சாத்திட்டதாக சைவ உலகம் சொல்லி மகிழும். சொல்லியது மூலம். எழுதியது படி. இன்னும் ஒருபடிமேலே சென்று ஊழிக்காலத்தில் தனது தன்தனிமையைப் போக்கிக் கொள்ள ஈசன் திருவாசகத்தை எழுதித் தன்னிடம் வைத்துக்கொண்டான் என்பர். "நீ புகழ்ந்து உரைத்த பழுதில் செய்யுள் எழுதினான்" என்று சிவப்பிரகாசர் அதனைப் போற்றிப் புகழ்ந்து கொண்டாடுவது உளங்கொளத்தக்கதாகும்.

இனிப்புப் பண்டங்கள் பலவாயினும் அவற்றினிடையே இனிப்பில் வேறுபாடு உண்டு. அதுபோல நமது நான்மறைகள் தித்திக்கும் தன்மையில் ஒன்றை ஒன்று விஞ்சி நிற்கும் பான்மையை உணர்ந்தோர் உணர்த்துவர். கேட்டு இன்புறலாம். இந்த வகையில் நமது திருவாசகத்தின் இனிப்பு, தனித் தன்மையுடையது, நனி சிறந்தது.

திருவாசகத்தின் சிறப்புப் பற்றிப் பேச இங்கே இடமில்லை. அதுவிடுத்து வேள்வியில் அவிசொரியும் காலத்தில் திருவாசகம் சொல்லலாம் என்றும்; சொல்வது முறையன்று என்றும் கூறுவார் கூற்றுப் பற்றிச் சிந்திப்போம்.

சொல்லலாம் என்பார் தம் கருத்துக்கள் ஏற்கனவே பார்க்கப் பட்டன. சொல்லக்கூடாது என்பார்தான் கருத்துக்கள் ஏற்கெனவே பார்க்கப்பட்டிருந்தாலும், திருவாசகத்தைப் பொறுத்து அவர்கள் ஒரு சான்றினைத் தருகின்றார்கள். அது எது?

*"பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ள*
*மூழ்கிய புனிதன் மொழிந்த வாசகமே*
*வாசகம் அதற்கு வாச்சியம்*
*தூசகல் அல்குல்வேய்த் தோளிடத்தவனே"*

என்னும் சிவப்பிரகாச சுவாமிகள் பாடலே அது. மாணிக்கவாசகர் அருளிய திருவாசகமே திருவாசகம். அந்தத் திருவாசகத்திற்குப் பொருள் யாதெனில், சிவபெருமானே! என இந்தப் பாடலில் சுவாமிகள் வரையறை செய்து வரம்புகட்டி விட்டதைக் கவனிக்க வேண்டாமா? என்கின்றனர். தேவாரமும் சரி, திருவாசகமும் சரி! அவை சிவபெருமானே, சிவபெருமானுக்குச் சிவபெருமானையே அவியாகத் (உணவாக) தரமுடியுமா? எனக் கேட்கின்றனர்.

> தேவாரமும் சரி. திருவாசகமும் சரி! அவை சிவபெருமானே, சிவபெருமானுக்குச் சிவபெருமானையே அவியாகத் (உணவாக) தரமுடியுமா? எனக் கேட்கின்றனர்.

இவர்கள் எடுத்துக்காட்டும் திருஞான சம்பந்தர் தொடர்பான செய்தியினையும் (தாம் பாடிய பாடல்களைப் பரமனாகவே கொண்டாடியது) சிவப்பிரகாசர் வாக்கினையும் நோக்க; வேள்வியில் அவி சொரியும் காலத்தில் திருமுறைகளைப் பயன்படுத்தக்கூடாது என்னும் கருத்து மிகுந்த வலுவுடையதாக இருக்கின்றது என்பது தெளிவு.

## சிவபுராணமும் அவியும்

"நிறையவி நல்கும்போது நெய் வால் நெல் அளவு தாரை; தாரையாகத் தீயில் சொரிக. சொரியும்போது சிவபுராணம் ஓதுக!" என வேள்விச் சடங்கில் சதுரர் பட்டம் பெற்றவர் கூறுகின்றார். இது பற்றிச் சிந்திப்போம்.

தனி மனிதர்களுக்காகவும், ஒரு குழுவின் பொருட்டும், அல்லது திருக்கோயிலில் இறைவனை எழுந்தருளச் செய்வதற்காகவும் செய்யும்வேள்விகள் அனைத்தும்பயன்கருதியேசெய்யப்படுவனவாம். இந்தப் பயனும் இருவகைப்படும். இம்மை மறுமை என்பர். அதுதானும் செய்யும் நல்வினை தீவினை பற்றி நிற்கும். பாலைக் கௌதமனார் சுவர்க்கம் சென்றார், பிள்ளைப்பேறு வேண்டி செய்த யாகத்தால் சேரனுக்குப் பிள்ளை பிறந்தது என்பனவாதிய யாகப் பயன்கள் தனி மனிதனுக்கானவை. திருக்கோயிலில் இறைவனைப் பிரதிட்டை செய்யும் யாகத்தினால் மழை பொழிந்தது. மக்கள் மனம் மகிழ்ந்தனர் என்பது பொதுப்பயன் கருதியது.

சூரியனும் சந்திரனும் நமது கண்களுக்கு உதிக்காமல் மறையாமல் இருக்க முடியாது. அவை கோள்கள். மழை அப்படிப்பட்டதன்று. கோள்களின் இயக்கங்களால் ஏற்படும் இயற்கை நிகழ்ச்சி. ஒரு வருடம் இரண்டு வருடம் என வருடக் கணக்கில் மழை பெய்யாமல் நின்றுவிட்டால் பஞ்சம், பசி, கொள்ளை, கொலை என நிகழ்வுகள் தொடரும். கடல் சீற்றத்தால் துன்பம் ஏற்படும். இதுபோன்றவற்றை நீக்கவும், இறைவனை வேண்டி இன்பம் எய்தவும் யாகங்கள் செய்யப்படுகின்றன.

நமது சண்பைக் காவலர் அருளிய 'வாழ்க அந்தணர்' எனத் தொடங்கும் தேவாரத்திற்குப் பொருள் சொல்லப் போந்த நமது சேக்கிழார் வேள்வி நற்பயன் வீழ்புனல் எனத் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். வானின்று வரும் மழைத்துளி நிலத்தில் பட்டு நீராகிறது. இந்த நீரின்றேல் உலகம் வாழ முடியாது. இதனை ஓர்ந்தே ஆசிரியர் வள்ளுவனார், 'நீரின்றி அமையாது உலகு' எனத் தெளிவுடக் கூறிச் சென்றார்.

## இனி வேள்விச் சாலைக்குள் போவோம்

யாகசாலையில் அக்னிக் காரியங்கள் செய்து ஈசனை அங்கே எழுந்தருள வேண்டுகின்றோம். நமது இடைவிடாத அன்பார்ந்த

வேண்டுகோளுக்குத் திருச்செவி சாய்த்து பரமன் வந்தருளுகின்றான். இந்த இடத்தை விளங்கிக்கொள்ள சதுரர் எடுத்தாண்டுள்ள அப்பர் சுவாமிகளின் பாடல் அருமையானது. பொருத்தமானது.

*"..............................................யான்*

*பவனெனும் நாமம் பிடித்துத் திரிந்துபன் னாளழைத்தால்*
*இவனெனைப் பன்னாள் அழைப் பொழியான் என்று எதிர்ப்படுமே*

என்பது பாடல். ஓம் எல்லா வல்ல சிவமே எழுந்தருள்க! என்று நெய் ஆகுதி செய்த பின்பு தீ முகத்தில் சிவன் எழுந்தருளிவிட்டான்.

*"அஞ்சிட்ட கோலம் அளப்பன ஐயைந்தும்*
*மஞ்சிட்ட குண்டம் மலர்ந்தங் கிருத்தலால்*
*பஞ்சிட்ட சோதி பரந்த பரஞ்சுடர்*
*கொஞ்சிட்ட வன்னியைக் கூடுதல் முக்தியே"*

*"முத்திநற் சோதி முழுச்சுட ராயவன்*
*கற்றற்று நின்றார் கருத்துள் இருந்திடும்*
*பற்றற்று நாடிப் பரந்தொளியூடு போய்ச்*
*செற்றற் றிருந்தவர் சேர்ந்திருந் தாரே"*

என்னும் இந்தத் திருமந்திரப் பாடல்கள் சிவபரம்பொருள் தீ முகத்தில் எழுந்தருளியுள்ளதைத் தெளிவாகக் குறிப்பிடு கின்றன.

இங்கே தீயில் திகழும் பெருமானுக்குத் தூப தீபம் எடுத்து அமுதூட்டலோடு அமைவதா? அல்லது அவி கொடுத்து அதன்பின் மேற்கண்டவாறு செய்வதா? என்பதில் கருத்து வேறுபாடுகள் இருப்பினும்; தீயில் எழுந்தருளித் திகழும் பெருமானுக்கு அவி கொடுப்பதையே ஏற்போம். இவ்வாறு அவி கொடுக்கும் காலத்தில் தமிழில் மந்திரங்களைச் சொல்லி உணவு தர வேண்டுமே தவிர தேவாரமாகிய திருமுறைகளைச் சொல்லி உணவு தருதல் முறையன்று ஏனெனில், பரம்பொருளுக்குப் பரம்பொருள் உணவாக முடியாது என்பதனை ஏற்கனவே விளக்கமாகப் பார்த்து வருகின்றோம்.

நமது சதுரர் தீமுகத்தில் திகழும் பெருமானுக்கு அவி

அளிக்கும்போது சிவபுராணம் ஓதுக! என்கிறார். அவி தரும்போது திருமுறைகள் வேண்டாம் எனக் கூறிவரும்காலை, குறிப்பிட்டுச் சிவபுராணம் ஓதுக! என்பது மேலும் அதிர்ச்சியளிக்கின்று. இம்மைப் பயன் வேண்டிச் செய்யும் யாகத்தில் (அவி தரும்போது மட்டும் நீக்கி), மற்ற மற்ற இடங்களில் எல்லாம் தேவாரம் ஓதலாம், ஓத வேண்டும். பயன் உறுதியாகக் கிட்டும்.

*பொன்னும் மெய்ப்பொருளும்தரு வானைப்*
*போக மும்திரு வும்புணர்ப் பானைப்*
*பின்னை என்பிழை யைப்பொறுப் பானைப்*
*பிழையெ லாம்தவி ரப்பணிப் பானை*
*இன்ன தன்மையன் என்றறி வொண்ணா*
*எம்மா னைஎளி வந்தபி ரானை*
*அன்னம்வை கும்வ யற்பழ னத்தணி*
*ஆரு ரானை மறக்கலு மாமே*

என்றும்;

*தம்மை யேபுகழ்ந் திச்சை பேசினும்*
*சார்கி னும்தொண்டர் தருகிலாப்*
*பொய்ம்மை யாளரைப் பாடா தேயெந்தை*
*புகலூர் பாடுமின் புலவீர்காள்*
*இம்மை யேதரும் சோறும் கூறையும்*
*ஏத்த லாம்இடர் கெடலுமாம்*
*அம்மை யேசிவ லோகம் ஆள்வதற்*
*கியாதும் ஐயுற வில்லையே*

என்றும் நமது சுந்தரமூர்த்தி நாயனார் அருளும் திருப்பாடல்களைப் பாடினால் பயன் கிட்டும் என்பதில் ஐயமில்லை. இந்த இரண்டு பாடல்களிலும் சுந்தரர் என்ன கூறுகின்றார்? இறைவனாகிய ஈசனை ஏத்தி வழிபடுவருக்கு இந்த இப்பிறவியில் பொன்னைத் தருவார், அதுவாயிலாக உலக இன்பங்களைத் தருவார், உண்ண உணவும், உடுக்க ஆடையும் தருவார், உலகத் துன்பங்களும் கெட்டுவிடும் என இம்மைப்பயன் எய்துவது குறித்தும்; பின்பு வீட்டின்பம் கிட்டும் என்றும், அதுதான் சிவலோகமாக விளங்கித் தோன்றுகிறது என்றும் சொல்லுகின்றார்.

இம்மைப் பயன் கருதி வேள்வி செய்யாமல் ஈசனது வழிபாட்டினாலேயே இம்மையும், மறுமையும் அடைய முடியும் என்பது ஒருபுறமிருக்க, நாம் இங்கே வேள்விப் பயன் பற்றி மட்டுமே பேசுகிறோம் என்பதை நினைவில் கொள்வோம். வேள்வியினால் இம்மைப் பயன் கிட்டும். பரம்பொருளும் எழுந்தருளி அருள்பாலிப்பான், உண்மை.

ஆனால் வேள்வியால் சுந்தரர் சொல்கின்ற வீட்டின்பம் அதாவது சிவலோகம் சேர்தல் கிட்டாது. வேறு என்ன கிட்டும்? இந்திரன் முதலிய தேவர் பதங்கள் கிட்டும். இதனையே நாம் சுவர்க்க இன்பம் என்கிறோம்.

வேள்வியால் சுந்தரர் சொல்கின்ற வீட்டின்பம் அதாவது சிவலோகம் சேர்தல் கிட்டாது. வேறு என்ன கிட்டும்? இந்திரன் முதலிய தேவர்பதங்கள் கிட்டும். இதனையே நாம் சுவர்க்க இன்பம் என்கிறோம்.

இந்திரன், பிரமன் முதலான தேவர்களுக்கு மீண்டும் மீண்டும் பிறப்புண்டு. இவர்களையே நமது குமரகுருபரர் "செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள்" என்பார். அப்பரடிகள் இதனை நன்கு விளக்குவார்.

இந்தப் பின்புலத்தைக் கொண்டு சிவபுராணத்தை அணுகுவோம். ஆசாரிய மூர்த்தமாக எழுந்தருளி ஆண்டுகொண்ட ஈசன் தன் திருவடி நீழலில் தம்மைச் சேர்த்துக் கொள்ளாது வாளா இருந்தமை பற்றி எழுந்த கையறவினாலே திருவாசகப் பாடல்கள் எல்லாவற்றையும் பாடினார் மாணிக்கவாசகர். இந்தக் கையறவு திருவாசகம் முழுதும் வெளிப்பட்டுக் கிடப்பதைத் திருவாசகத்தை ஊன்றிப் படிப்பார் உணர்வர்.

திருவாசகத்தின் உயிர்ப்பு எது? சிவபுராணம். சிவபுராணத்தின் உயிர்ப்பு எது? ஆற்றாமை. ஆற்றாமை என்றால் என்ன? பொறுக்க இயலாமை. எதனைப் பொறுக்க இயலாது தவியாகத் தவிக்கிறார் மாணிக்கவாசகர்? அல்லல் பிறவியை அறுத்து அவரைத் தன் திருவடிக்கீழ் அணைக்காமல் ஈசன் வாளா இருக்கின்றானே எனத் தவிக்கின்றார். அதாவது பிறவி அற வேண்டும். பெம்மான் திருவடிக்கீழ் சென்று சேர வேண்டும் என்பதே அவரது ஒரே நோக்கம், குறிக்கோள்.

ஈசனே! எம்பெருமானே! நான் வாழுகின்ற பூமியில் மழை பொழிய வேண்டும், வளம் பெருக வேண்டும், பொன் வேண்டும், பொருள் வேண்டும், சோறு வேண்டும், கூறை வேண்டும் என்று இப்பிறவிக்குத் தேவையான எதனையாவது சுந்தரர் போலக் கேட்கின்றாரா? இல்லையே!

ஈசனே! எம்பெருமானே! நான் வாழுகின்ற பூமியில் மழை பொழிய வேண்டும், வளம் பெருக வேண்டும், பொன் வேண்டும், பொருள் வேண்டும், சோறு வேண்டும், கூறை வேண்டும் என்று இப்பிறவிக்குத் தேவையான எதனையாவது சுந்தரர் போலக் கேட்கின்றாரா? இல்லையே!

மாறாக என்ன கேட்கிறார்? குழந்தை என்றும், சிறுவன் என்றும், வாலிபன் என்றும், கிழவன் என்றும் வெவ்வேறு மாற்றம் கொள்ளும் தசையால் ஆகிய உடம்புக்குள்ளே கிடந்து உழல என்னால் இனி முடியாது; வஞ்சகத்தையுடைய ஐம்பொறிகளுக்கிடமான இந்த உடம்பை அழித்துவிடு. அவ்வாறு அழிக்கும் காலத்தில் மீண்டும் என்னிடம் வினைகள் வந்து சேர்ந்து பிறக்காது பார்த்துக்கொள். ஐயனே! நான் ஏற்கெனவே உன்னிடம்,

*புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்*
*பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்*
*கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்*
*வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்*
*செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்*
*எல்லா பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்*

என்று பிறந்து இளைத்ததைச் சொல்லிவிட்டேன். இனி அத்தகைய அல்லல் பிறவி என்னை வந்து எய்தாமல் அறுத்து உனது திருவடிக்கீழ் சேர்த்துக்கொள்! என்றல்லவோ கேட்கின்றார்!

*"ஆராத இன்பம்"*
*"பொய்யாயின எல்லாம் போயகல"*
*"பிறந்த பிறப்பறுக்கும்"*
*"பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும்"*
*"மீட்டு இங்கு வந்து வினைப்பிறவி சாராமே!"*
*"கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே!"*
*"அல்லல் பிறவி அறுப்பானே!"*

என்னும் தொடர்கள் இவ்வுலக இன்பம் வேண்டிய மாணிக்கவாசகரால் கையாளப்படுகின்றன. இம்மைப்பயன் இந்த வாசகங்களில் எங்கேயாவது காணப்படுகின்றதா? திருவாசகத்தில் எங்கேயும் இம்மைப்பயன் வேண்டுவதைக் காணமுடியாது.

திருவாசகத்தில் எங்கேயும் இம்மைப்பயன் வேண்டுவதைக் காணமுடியாது.

இம்மை இன்பம் வேண்டியும், மறுமையில் சில பதவிகளை வேண்டியும் செய்யும் வேள்வியில் வீட்டின்பம் வேண்டி நிற்கும் மாணிக்கவாசகரின் சிவபுராணத்தை அதுவும் அவி சொரியும் காலத்தில் ஓதுவது 'மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சுப் போடுவது' போன்ற செயலாகும்.

இம்மை இன்பம் வேண்டியும், மறுமையில் சில பதவிகளை வேண்டியும் செய்யும் வேள்வியில் வீட்டின்பம் வேண்டி நிற்கும் மாணிக்கவாசகரின் சிவபுராணத்தை அதுவும் அவி சொரியும் காலத்தில் ஓதுவது "மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சுப் போடுவது" போன்ற செயலாகும். சிவபுராணத்தை இவ்விடத்தில் ஓதுவது தவறு மட்டும் அன்று; அது "புண்ணியத்திற்குப் பதில் பாவத்தை சேர்க்கும்" என்கின்றார் சிவாகமவழி யாகங்கள் பல செய்து அனுபவப்பட்டுள்ள கும்பகோணம் இலுப்பப்பட்டு திரு எஸ். கல்யாணசுந்தர சிவாச்சாரியார் அவர்கள்.

சிவபுராணம் திருப்பெருந்துறையில் முதற்கண் உரைக்கப் பெற்றதாக வாதவூரர் புராணம் வகுக்கிறது. நம்பி திருவிளையாடல் மந்திரியாக மன்னனிடம் விடைபெற்றுக் கொண்டுபோகும் பொழுது பாடிக்கொண்டே ஆலயத்துள் நுழைந்தார் என்கின்றது.

எது எப்படியாயினும் "சிவபுராணம் தன்னை முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பன்" எனத் தொடங்கி, அதனைப் பலபடியாக விளிமுகமாக அருளி, இறுதியில் தாம் சொல்லிய சிவபுராணமாகிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார் தாம் அடையும் பேரின்பப் பேறாகிய சிவப்பேற்றினை சிவபுரத்தில் எய்துவர் என்கின்றார் மாணிக்கவாசகர் என்பதே இவ்விடத்தில் நாம் கவனிக்க வேண்டிய ஒன்றாகும்.

## பெரியபுராணமும் வேள்விச் சடங்கும்

ஈசனுக்கு மனக்கோயில் கட்டிய பூசலார் புராணத்தில் வேள்விச் சடங்கு குறிப்பிடப்படவில்லை என்பதை ஏற்கெனவே பார்த்துள்ளோம்.

> தன்னைச் 'செந்தமிழ் வேள்விச் சதுரர்' எனக் கூறிக்கொள்ளும் அன்பர் ஒருவர், பெரிய புராணத்தை நன்கு படிக்காதவர் என்பதை ஞான சம்பந்தர் செய்தித் தொடர்பான இடத்தில் முன்னரே கண்டு வந்துள்ளோம்.

தன்னைச் 'செந்தமிழ் வேள்விச் சதுரர்' எனக் கூறிக்கொள்ளும் அன்பர் ஒருவர், பெரிய புராணத்தை நன்கு படிக்காதவர் என்பதை ஞான சம்பந்தர் செய்தித் தொடர்பான இடத்தில் முன்னரே கண்டு வந்துள்ளோம். ஏதோ தனக்குத் தெரிந்த வரையில் பெரியபுராணத்தைப் படிப்பதும், பொருள் வரையறை செய்துகொள்வதும் தவறாகாது. ஆனால் அந்தப் புராணத்தைக் கற்றுத் தெளிந்தவர் போலவும், சேக்கிழாரிடம் பாடம் கேட்டது போலவும், கருதிக் கொள்வதுதான் பெரிய தவறு. பொறியாளராகப் பணியாற்றித் தான் ஒரு கொள்கையைக் கொண்டு அதன் பொருட்டுப் பாடுபடுவதும், அதனைப் பரப்ப முயல்வதும் பாராட்டுக்குரியதே. ஆனால் பண்டைய இலக்கியங்களையும், குறிப்பாகச் சமய நூல்களையும் மனம்போன போக்கில் கையாளுவதும், தவறாகப் பொருள் சொல்வதும் மிகவும் கண்டிக்கத்தக்கது.

ஒரு நூலின் செய்தி பற்றிச் சொல்லப் புகுமுன், "இது இன்ன காலத்துத் தோன்றிய நூல் என்ற கால அறிவும்; இக்காலத்து இச்சொல்லுக்கு இப்பொருள் என்ற சொல்லறிவும்; இன்ன காலத்து இருந்த பழக்க வழக்கங்கள் இவை என்ற சமுதாய அறிவும்; இத்தொடர் ஓடிக்கிடக்கும் முறை இது என்ற நடையறிவும்; நாட்டின் வரலாற்றறிவும்; இன்ன பிறவும் இருந்தால்தான்; உரை எழுதும்பொழுது நினைவுக்கு வந்தால்தான் பொருளை முரணின்றுக் காண முடியும்" எனச் சொல்லும் தமிழ்ச் செம்மல் வ.சுப. மாணிக்கம் கருத்து இவர்களிடம் எடுபடுமா? எடுபடாது. ஏனெனில் இவர்களுக்கு அடிப்படைக் கிடையாது.

பெரியபுராணத்தை எழுத்து எண்ணிப் படித்தவராகிய, சித்தாந்த

வித்தகர், புலவர் மாமணி. திரு.முரு.பழ. இரத்தினம் செட்டியார் அவர்களிடம் உட்கார்ந்து பாடம் கேட்ட எனக்குப் புரியாத புலப்படாத பலப்பல இடங்கள் பெரிய புராணத்தில் இன்னும் உள்ளன. தெளிவிப்பாரைத் தேடுகிறேன். வேள்விச் சதுரரிடம்தான் போக வேண்டும் போல் இருக்கின்றது. ஏனெனில் காலம் அப்படி இருக்கிறது. என்ன செய்வது? சரி! இது போகட்டும். தேவைப்படும் இடத்திற்கு வருவோம்.

கலசத்தில் நீர் ஊற்றி அதனை இறை திருமேனி ஆக்கல் (கலச ஸ்தாபனம்)

*மன்னுந் திசைவேதியில் மங்கல ஆகு திக்கண்*
*துன்னுஞ் சுடர்வன்னி வளர்த்துத் துதைந்த நூல்சூழ்*
*பொன்னின் கலசங்கள் குடங்கள் பூரித்த தூநீர்*
*உன்னுஞ் செயல்மந் திரயோகர் நிறுத்தி னார்கள்.*

– பெரியபுராணம்.

இந்தப் பாடலைச் சதுரர் எழுதியுள்ள தலைப்பில் பொருள் தெரிந்து படிப்போர் (பலருக்குப் பொருள் தெரியாது புரியாது) என்ன நினைப்பர்? சிவனுக்கான வேள்விச் சாலையில் இறை திருமேனி ஆக்குதல் பொருட்டுக் குடங்களை நிறுவினர் என்றுதானே நினைப்பர். அவர்கள் நினைப்பது தவறாகாது. அவர்களை அவ்வாறு நினைக்கத் தூண்டிய சதுரரே தவறானவராகிறார். "பறை அறைந்து அல்லது செல்லற்க என்னா இறையே தவறு உடையான்" என்பது போன்றது.

பெரியபுராணத்தில் இந்தப் பாடல் எங்கே வருகின்றது? மூர்த்தி நாயனார் புராணத்தில் வருகின்றது. எந்தச் சூழ்நிலையில் வருகின்றது? வாரிசு இல்லாமல் பாண்டிய மன்னன் இறந்து போக, ஆட்சிக்கு அரசன் வேண்டுமே என்ற கவலையில் அமைச்சர்கள் பட்டத்து யானையின் கண்களைக் கட்டி அனுப்ப, அது நமது மூர்த்தி நாயனாரைத் தேர்ந்தெடுத்துத் தன் முதுகின்மீது கொள்ள, நாயனார் அரண்மனைக்கு வருகின்றார். அமைச்சர்கள் அவரை யானை முதுகினின்றும் இறக்கி, முடிசூடும் மண்டபத்திற்குக் கொண்டு

சென்று முடி சூட்டுதற்குரிய சடங்குகளை எண்ணிச் செய்வராயினர்.

இந்த இடத்தில் நாயனாருக்கு முடிசூட்டுவதற்கு முன்பு அவரைத் திருமஞ்சனம் செய்விக்க கிழக்குத் திசையில் அமைக்கப்பட்ட வேதிகையின் அருகில் முப்புரி நூலை நெருங்கச் சுற்றிய பொற்கலசங்களிலும், குடங்களிலும் திருமஞ்சனத்திற்கான தூய நீரை நிறைவித்து மந்திரம் வல்லோர் நிறுவினர் என்பது பெரியபுராணச் செய்தி.

இவ்வாறு அரசர்கள் நீராடுவதை நமது புறப்பொருள்

*"மண்ணுமங்கலம்" எனக் குறிப்பிடும்.*
*"எண்ணரும் சீர்த்தி இறைவன் எய்தி*
*மண்ணு மங்கலம் மலிவுரைத் தன்று"*

என்பது கொளு.

இக்கொளுவில் காணப்படும் இறை என்ற சொல் அரசனைக் குறிப்பது. 'இறைமாட்சி' என்னும் வள்ளுவர் வாக்கினை உன்னுக!

அரசனுக்கான திருமஞ்சனக் குடங்களை ஈசனுக்குரிய குடங்கள் போலக் காட்டிப் பெரியபுராணத்தில் வேள்விச்சாலை இருந்தது. அதில் இறை திருமேனி நிறுவினர் எனப் பொருள் காணுவது அறியாமையின் பாற்பட்டதே.

## இதயமும் மூளையும்

நமது திருமுறைகள் இதயம் கொண்டு ஓதப்படுவன. மற்ற நூல்கள் மூளைகொண்டு கற்கப்படுவன. அன்பிற்கு இருப்பிடம் இதயம். அறிவுக்கு இருப்பிடம் மூளை. மூளை செயல்படாதபோது இதயம் இயங்கும். இதயம் இயங்காமல் போனால் மூளை செயல்படாது.

நமது திருமுறைகள் இதயம் கொண்டு ஓதப்படுவன. மற்ற நூல்கள் மூளைகொண்டு கற்கப்படுவன. அன்பிற்கு இருப்பிடம் இதயம். அறிவுக்கு இருப்பிடம் மூளை. மூளை செயல்படாதபோது இதயம் இயங்கும். இதயம் இயங்காமல் போனால் மூளை செயல்படாது.

இறை இருப்பை அறிவுகொண்டு

ஆராயலாம். வேதத்தின் உபநிடதங்களும் பல்வேறு சமயத்தின் சாத்திரங்களும் இவ்வாறே ஆராய்கின்றன. ஆனால் இறுதியில் அவனை அடையும் வழி தெரியாமல் திகைத்து நின்றுவிடுகின்றன. அவனைத் தன்வயத்தில் கொண்டு அனுபவிக்க முடியாது அறிவு நின்றுவிடுகிற இடத்தில் அன்பு முகிழ்க்கின்றது. உயிரிடமாக நிற்கும் அறிவைப் புறந்தள்ளி அன்பு முழுவதுமாக அந்த உயிரைப் பற்றிக்கொள்கிறது. அப்போது அன்பே நிறைந்து நிற்கின்றது. இது பற்றியே ஆசிரியர் திருவள்ளுவர் 'அன்பின் வழியது உயிர்நிலை' என்கின்றார்.

நமது நால்வர்களும், சேக்கிழாரும் அன்பிற்கும் அறிவுக்குமான வேறு பாட்டைக் குறிப்பாகவும் விளக்க மாகவும் சொல்லிச் செல்கின்ற இடங்கள் அறிந்து இன்புறத்தக்கன. வேள்விக்கு நமது மூவர்கள் முக்கிய இடம் தரவில்லை. அவர்கள் வேள்வி செய்யவும் இல்லை. ஆனால் அதேபோது சிவபெருமானைத் தலை வராகக் கொண்டு செய்யப்பெறும் வேள்விகளை அவர்கள் போற்றவும் பாராட்டவும் தவறவில்லை. வேள்வி என்ற ஒன்றில்லாமல் அன்பு ஒன்றே கொண்டு ஈசனை அடைய முடியும் என்பதுதான் அவர்கள் கொள்கை. அதுவே நமது சைவ சமயத்தின் கொள்கையுமாகும்.

நமது தோத்திர நூல்களையும், சாத்திர நூல்களையும் அருளிச் செய்துள்ள அருளாளர்கள் வேதம், நான்மறை, மறை என்பவாதிய சொற்களைக் கையாளும்போது வடமொழி வேதங்களையே திருவுள்ளத்தில் கொண்டிருக்கின்றார்கள் என்பதை நடுவு நிலை நெஞ்சோடு பார்ப்பவர்கள் அறிவர்.

நமது தோத்திர நூல்களையும், சாத்திர நூல்களையும் அருளிச் செய்துள்ள அருளாளர்கள் வேதம், நான்மறை, மறை என்பவாதிய சொற்களைக் கையாளும்போது வடமொழி வேதங்களையே திருவுள்ளத்தில் கொண்டிருக்கின்றார்கள் என்பதை நடுவுநிலை நெஞ்சோடு பார்ப்பவர்கள் அறிவர்.

நமது அருளாளர்கள் பக்தி ஒன்றே

பரமனை அடையும் வழி என்பதனை நமக்குச் சொல்லியருளியதுடன் அந்தப் பக்தி நெறியிலே நின்று வாழ்ந்துகாட்டியும் சென்றிருக்கின்றனர் என்பது கண்கூடு.

*"நத்தம்போல் கேடும் உளதாகும் சாக்காடும்*
*வித்தகர்க் கல்லால் அரிது"* – என்பார் வள்ளுவர்.

இந்த உளதாகும் சாக்காடு அவர்களுக்கு ஈசனிடம் கொண்ட பக்தியால் கைவரப்பெற்றது என்பதும்; அதுவே அவர்களை வித்தகர்களாக்கியது என்பதும் உண்மையல்லவா!

இப்பேர்ப்பட்ட வித்தகர்கள் அருளிய திருமுறைகளை இற்றைநாள் சிலர் இதயத்தில் ஏற்றாமல் மூளையில் ஏற்றுவதும், தங்கள் நோக்கத்திற்குத் தக்கவாறு அவற்றைப் பயன்படுத்துவதும், உரிய பொருளைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வம் இல்லாமல் இருப்பதும், திரித்துப் பொருள் சொல்வதும் வருத்தத்தைத் தருகின்றன. இந்த வருத்தம் எதிர்காலத்தில் மாறும் என்ற உறுதியான நம்பிக்கையில் சென்ற காலத்தின் பழுதிலாத் திறம் வந்து வாய்க்க அந்தப் பரம்பொருளை வேண்டி நிற்போம்.

## பணிவான வேண்டுதல்

1. பரிபூரணமுற்ற தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் தலைமையில் "மகாவித்துவான்" ச. தண்டபாணி தேசிகர்: "தமிழ்ச் செம்மல்" பேராசிரியர் வ.சுப. மாணிக்கம்; பேராசிரியர் க.த. திருநாவுக்கரசு; பேராசிரியர் இரா. சாரங்கபாணி, பேராசிரியர் இ. சுந்தரமூர்த்தி, பேராசிரியர். முருகரத்தனம் பேராசிரியர் சொ. சிங்காரவேலன் ஆகியோருடன் நானும் பங்கேற்றுத் திருக்குறள் உரைகளை ஆய்வு செய்யும் வகையில் 1988ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 9, 10, 11 ஆகிய மூன்று நாட்கள் ஆய்வரங்கம் ஒன்றினைக் குடந்தையில் நடத்தினேன்.

மூன்றாம் நாள் முடிவில் "இவ்வளவு காலம் நான் கொண்டிருந்த சில கருத்துக்கள் தவறானவை என்பதை இந்த ஆய்வரங்கு உணர்த்தியது" என அடிகளார் கூறியருளினார்கள். அறிஞர்களும் இவ்வாறே கூறினர். "இந்தக் குறளுக்கு இந்த நூலில் நீங்கள் இவ்வாறு பொருள் சொல்லியுள்ளீர்கள்" எனத் தமிழ்ச் செம்மலிடம் நான் கூறியதற்கு, "அந்தக் காலத்தில் அவ்வாறு கருதினேன் இப்போது இந்தப் பொருள்தான் சரியானது எனக் கருதுகிறேன்" என்றார்கள்.

இந்த நிகழ்வினைச் சுட்டிகாட்ட வேண்டிய கட்டாயத்திற்கு இப்போது நான் உள்ளாகியிருக்கின்றேன். ஏனெனில், பதினான்கு ஆண்டுகளுக்கு முன்பு நான் எழுதிய நூலில் வேதம்பற்றி எழுதியுள்ள செய்திகளுக்கு முற்றாக மாறுபட்ட கருத்துக்களை இந்த நூலில் எழுதியுள்ளேன். பதினான்கு ஆண்டுகளில் தேவாரத் திருவாசகத்தினைத் திரும்பத் திரும்பப் படித்ததினாலும்; பெரியபுராணத்தை ஊன்றிப் பார்த்ததினாலும்; சமயத் தொடர்பான நூல்களைக் கற்கும் வாய்ப்புக் கிட்டியதாலும் இந்த மாற்றம் என்னுள் நிகழ்ந்தது. எனது அந்த நூலைத் தேடிப்பிடித்து அதில் அப்படி எழுதியுள்ளீர்களே என அன்பர்கள் எழுத வேண்டாம் என்பதற்காகவே உரை ஆய்வரங்கு நிகழ்ச்சியினைச் சொல்லவேண்டியதாயிற்று.

2. அவரவர்களுக்கு என்று சில கொள்கைகள் கோட்பாடுகள் தனியே இருக்கலாம். அவற்றைப் பொது நூலாகிய நமது திருமுறைகளில் ஏற்றி இவற்றையே அருளாளர்கள் கூறினார்கள் எனக் கூறுவது சரியான முறையன்று. தனித்தத் தங்கள் கொள்கைகளுக்குத் திருமுறைகளில் இடம் தேட வேண்டாம்.

3. புராணங்கள் நடந்தவையா, கற்பனையா, குப்பையா, கோபுரமா என ஆராய்ச்சி செய்வதைவிட அவற்றில் சொல்லப்படும் கருத்துக்களை நமது வாழ்வியலுக்கு ஒத்துவரும் அளவில் ஏற்பதே அறிவுடைமை.

4. திருமுறைகளில் சொல்லப்படும் புராணக் கதைகளைத் தெரிந்துகொண்டால்தான் திருமுறைகளின் போக்கு நன்கு புலப்படும். கதைகள் தெரியாமல் 'கதையளக்க' வேண்டாம்.

5. 'வேதநெறி என்பது சைவசித்தாந்தமே' என நான் அறிந்த வரையில் எனது ஞானாசிரியர் கூறியதில்லை. எழுதியுள்ளதாகவும் நினைவில்லை. இருந்தால் தெரிவித்தால் பார்த்துத் தெளிவேன். வேதத்தைக் கடலாகவும்; காடாகவும்; மரமாகவும்; நெறியாகவும் நமது முன்னோர்கள் உருவகப்படுத்துகின்றனர். அவற்றில் நெறி என்னும் உருவகத்தைச் சேக்கிழார் கையாளுகின்றார். நெறியல் கிளைத்துச் செல்கின்ற நெறிகளும் உண்டு. மேலும், 'துறை' என்ற சொல்லைச் சேக்கிழார் பயன்படுத்துவதால் இங்கே நெறி என்பது அவரால் நதி என அதாவது 'வேத நதி' (வேதமாகிய ஆறு) என உருவகம் செய்யப்படுகின்றது எனக் கொள்வதே பொருத்தம்.

'துறை' என்ற சொல்லைச் சேக்கிழார் பயன்படுத்துவதால் இங்கே நெறி என்பது அவரால் நதி என அதாவது 'வேத நதி' (வேதமாகிய ஆறு) என உருவகம் செய்யப்படுகின்றது எனக் கொள்வதே பொருத்தம்.

6. நமது சைவத்திற்குச் சாதிப் பாகுபாடு கிடையாது. இந்தப் பாகுபாட்டினை 'ஆராய்ச்சி' என்ற பேரிலும்; 'மரபு' என்ற முறையிலும்;

'கருத்து' என்ற வகையிலும் யார் கூறினாலும் அது தவறே! ஆதிசைவர் குடும்பத்தில் பிறந்த சுந்தரருக்குப் 'பதியிலார்' குடும்பத்துப் பெண்ணாகிய பரவையைப் பரமன் திருமணம் செய்கின்றான் என்றால் அதற்கு என்ன பொருள்? திருஞானசம்பந்தர் திருநீலகண்டப் பெரும்பாணரை "ஐயரே!" என அழைத்துப் போற்றிக்கொண்டார் என்பது எதனைக் காட்டுகின்றது? "புலையரேனும் அவர் கண்டீர் யாம் வணங்கும் கடவுளாரே" என்னும் அப்பரடிகளின் 'உம்மை' எதனைச் சுட்டுகின்றது? சாதி குலம் சைவத்திற்கு உடன்பாடன்று என்பதனைத்தானே சுட்டுகின்றன. ஆதலால் சாதி குலம் பார்க்க வேண்டாம்.

7. நமது திருக்கோயில்களில் பூசை செய்யும் குருக்கள், அவர்கள் பணி செய்யும் கோயில் பாடல் பெற்றதாயின் அத்தலத்திற்குரிய தேவாரப் பாடல்களை மூலத்தானத்திலிருந்து கட்டாயம் ஓத வேண்டும். வைப்புத் தலமாயின் அதனை ஓத வேண்டும். அதுவும் இல்லையேல் பொதுவான தேவாரப் பாடல்களைப் பாட வேண்டும். திருமால் கோயில்களில் பட்டாச்சாரியார்கள் கைக்கொள்ளும் ஒழுங்கினை இவர்கள் பின்பற்ற வேண்டும்.

8. தமிழ்நாட்டுக் கோயில்களில் தமிழில்தான் அர்ச்சனைப் பாட்டு இருக்க வேண்டும். வடமொழியில் கேட்போர்க்கு வடமொழி பயன்படுத்தலாம். அப்போதும் தமிழ் மந்திரங்களைச் சொல்லிய பின்பே வடமொழி மந்திரங்களைச் சொல்ல வேண்டும்.

9. இந்த நூலைப் படிக்கின்ற அன்பர்கள் தமிழ்மொழி வரலாறு, நாட்டு வரலாறு, மாந்தரின வரலாறு, அகழ்வாராய்ச்சி விளைவுகள், மொழியியல் கூறுகள், வடமொழி கலப்பில்லாமல் பேசுபவர் எழுதுபவர்தான் தமிழர், மற்றவரெல்லாம் தமிழர் அல்லர் என்ற பிறப்பாராய்ச்சி ஆகிய இன்னோரன்னவற்றை விடுத்து; சைவ சமயம்,

சமயம் சார்ந்த நூல்கள், திருமுறைகள், சாத்திரங்கள், தத்துவங்கள் இவற்றை மட்டுமே கொண்டு இவற்றின் மேன்மையை விளக்குகின்ற திருநெறியதமிழின் நீர்மையை முன்னிறுத்திப் படிக்குமாறு வேண்டுகின்றேன்.

10. *"நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்*
*நெஞ்சத் தவல மிலர்"*

என்ற திருவள்ளுவர் வாக்கினையும்;

*"கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்*

......................................................................

*வெல்லாமல் எவரையும் மருட்டிவிட வகைவந்த*
*வித்தையென் முத்திதருமோ"*

என்ற தாயுமான சுவாமிகளின் வாக்கினையும்;

*"படிச்சவன் சூதும் பாவமும் பண்ணினால்*
*போவான் போவான் ஐயோவென்று போவான்"*

என்னும் பாரதி வாக்கினையும் இந்த நூலைப் படிக்கும் அன்பர்கள் அன்புகூர்ந்து நெஞ்சில் நிறுத்திச் சிந்திக்க வேண்டுகின்றேன்.



இம்மை மறுமைப் பயன்கருதிச் செய்யப்படும் வேள்வியில் பிறவிக் கட்டறுத்து வீடுபெற வேண்டி நிற்கும் சிவபுராணத்தை அவிசொரிதலுக்குப் பயன்படுத்துவது முற்றிலும் முரண்பாடானது என்பதை எடுத்து விளக்கியிருக்கும் பான்மை பலகாலும் எண்ணிப்பார்ப்பதுடன் ஏற்க வேண்டியதுமாகும்.

அதிபர் - காசித்திருமடம்



சாமி தியாகராசனின் கருத்துக்களை யாரையோ வசைபாடுவதற்காக எழுதப்பட்டதாக எடுத்துக் கொள்ளவேண்டியதில்லை. சில கருத்துக்களும் விவாதங்களும் அவருக்குத் திருமுறைகளிலும் சங்க இலக்கியத்திலும் இருக்கும் ஆழங்காற்பட்ட தேர்ச்சியை வெளிப்படுத்துகின்றன.

K. வைத்தியநாதன்
'தினமணி' நாளிதழ் ஆசிரியர்



Today some Saivites damage Saivism because they stray away from Saivism. Unable to stomach this, Sami. Thiagarajan is out to administer correctivies to the erring ones.

Sami Thiyagarajan could have pummeled to the critics. From this he desisted. He merely referred to their error and left it at that . This bespeaks his magnanimity and compels our admiration for him.

Dr. T.N.Ramachandran D.Litt.,



திருஞானசம்பந்தரின் "மண்ணில் நல்லவண்ணம்" எனத் தொடங்கும் பாடல் திருமணச் . சடங்கிற்குப் பொருந்தாது என்னும் பான்மையை விரிவாகவே விளக்கியுள்ளார் ஆசிரியர். தமிழ்வேறு, தமிழ்த்திருமுறை வழி வேறு என்பது நன்கு விளக்கப்பட்டுள்ளது. சம்பந்தமுடையோர் இந்தப் பகுதியைப் படித்துத் தெளியவேண்டும்.

பேராசிரியர் முனைவர் தி. அரங்கநாதன்.

